6

ஸ்ரீ ராம ஜயம்.

## வால்மீகி ராமாயண வசனம்.

# ஆரணியகாண்டம்.

இது

பண்டித - நடேச சாஸ்திரியாரால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.



சென்னை:

வெ. கல்யாணராம ஐயர்.

1905.

ஸ்ரீரஸ்து.

# ஆரணியகாண்டம்.

## விஷயசூசிகை.

சருக்கம். விஷயம். பக்கம்.

உ

ஸ்ரீரஸ்து.

# வால்மீகி ராமாயண வசனம்.

## மூன்றவது

## ஆரணியகாண்டம்.

### முதற்சருக்கம்.

இராமர் தண்டகாரணியத்தில் பிரவேசித்து அவ்விடத்தில் வசித்துக்கொண்டிருந்த முனிவர்களிடமிருந்து மரியாதை பெறுதல்.



எவ்விதத்திலும் தடுக்கவொண்ணுத தீரராகிய இராமர் மகாரணியமாகிய தண்டகாரணியத்தில் பிரவேசித்து, நாலுபக்கத்திலும் தருப்பைகளும் மரவுரிகளும் பரவியுள்ளதும், பிரமதேஜஸால் சூழப்பட்டதும், ஆகாயத்தில் ஜ்வலித்துக்கொண் டிருக்கிற சூரியமண்டலம் போல் பார்க்க முடியாததும், எல்லாப் பிராணிகளுக்கும் ஆசிரயமானதும், சுத்தப்படுத்திய அங்கணங்களையுடையதும், பலமான்கள் நிறைந்துள்ளதும், பட்சிஜாலங்களால் சூழப்பட்டதும், எப்போதும் அப்ஸரஸ்திரீகணங்களால் சம்மானிக்கப்பட்டு அவர்களுடைய நர்த்தனத்திற்கு இடமாயதும், விசாலமான அக்கினிச் சாலைகளாலும் ஸ்ருக் என்கிற ஹோமபாத்திரங்களாலும்

முனிவர் ஆச்சிரமம்.

மான்றோல்களாலும் தருப்பைகளாலும் சமித்துகளாலும் கலசங்களாலும் பலமூலங்களாலும் விளங்குவதும், இனிய கனிகளையுடைய காட்டிலுண்டாகின்ற பெரிய புண்ணிய விருக்ஷங்களடர்ந்ததும், பலிஹோமங்களினால் பூஜிக்கப் பட்டதும், தூய்மையானதும், வேதகோஷத்தினால் ஒலி கொண்டதும், வனங்களில் உண்டாகுவனவான மலர்கள் பரவினதும், தாமரை மலர்கள் பொருந்திய ஓடைகளை யுடையதும், பலமூலங்களை அருந்துபவர்களும் இந்திரிய நிக்கிரகம் செய்தவர்களும் மரவுரி மான்றோலைத் தரித்த வர்களும் சூரியாக்கினிகளுக்குச் சமானமான காந்தியை யுடையவர்களுமான புராதன முநிவர்கள் வசிப்பதும், பரிசுத்தமானவர்களும் நியமமான ஆகாரத்தை யுடைய வர்களுமான பரமரிஷிகளால் விளங்குவதுமான முநிவர்க ளுடைய ஆச்சிரம மண்டலத்தைக் கண்டார். ஸ்ரீமானும் மஹாதேஜஸ் உள்ளவருமான இராகவர், பிரமாவி னுடைய கிரகத்துக்குச் சமானமானதாயும், வேதசப்தத் தால் ஒலிகொண்டதாயும், மஹாமகிமை யுடையவர்க ளும் பிரமவித்துக்களுமான அந்தணர்களால் விளங்குவ தாயுமுள்ள அவ்வாச்சிரம மண்டலத்தைக் கண்ணுற்று, தனது உயர்ந்த வில்லின் நாணைக் கட்டவிழ்த்து அவ் வழிச்சென்றார். அங்கிருந்த திவ்யக்ஞானிகளாகிய மக

முநிவர்கள் இராமனை எதிர்கொள்ளல்.

ரிஷிகள் இராமரையும் எசஸ்வினியாகிய வைதேகியையும் லக்ஷ்மணரையும் கண்டு அன்போடு எதிர்கொண்டு சென்றார் கள். தர்மசீலர்களான த்ருட நியமத்தை யுடைய அவர்கள், உதயசந்திரன்போன்ற இராமரையும் லக்ஷ்மணரையும் எசஸ்வினியாகிய ஜானகியையும் பார்த்து ஆசிகூறி அழைத்துக்கொண்டார்கள். அந்த வனவாசிகள், இராமருடைய அவயவங்களின் அமைப்பையும், சோபை யையும், சவுந்தரியத்தையும், நற்கோலத்தையும் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். அவ்வனவாசிக ளெல்லாம் ஆச்

சரியகரமான வைதேகியையும் லக்ஷ்மணரையும் இராமரையும் கண்கொட்டாது பார்த்தார்கள். மஹாபாக்கியவான்களாகிய ரிஷிகள், எல்லாப் பிராணிகளுக்கும் நன்மை புரிபவரும், அதிதியுமாகிய இராகவரை அங்குள்ள பர்ணசாலைக்குள் உட்காரவைத்தார்கள். பிறகு, அக்கினிக்கொப்பானவர்களும், மகா பாக்கியவான்களும், தர்மசீலர்களுமாகிய அம்முனிவர்கள், இராமரை விதிப்படி உபசரித்து, தீர்த்தத்தையும் வனத்திலுள்ள பலமூல புஷ்பங்களையும் கொண்டுவந்தார்கள். பின்பு அவருக்கு ஓர் ஆச்சிரமம் அளித்ததன்பின், தர்மத்தை நன்குணர்ந்த அம்முனிவர்கள், கைகூப்பிக்கொண்டு பின்வருமாறு கூறினார்கள்:—"வருணாச்சிரமங்களைப் பாதுகாத்து எல்லாரையும் ரக்ஷிப்பவராய், வெகு புகழ் பெற்றவராய், வெகு மரியாதைபொருந்தியவராய், எல்லாராலும் வணங்கப்பெற்றவராய், துஷ்டர்களை அடக்கிச் சிஷ்டர்களைப் பரிபாலனம் பண்ணுபவராய்த் தாங்கள் உள்ளீர்கள். தாங்களே எங்களெல்லாருக்கும் யஜமானர். இந்திரனுடைய நான்கிலொரு அம்சமாகிய இராஜா குடிகளை ரக்ஷிப்பது வழக்கமாகையால், அவர் எல்லாராலும் வணங்கப்பட்டுச் சகல சௌக்கியத்தையும் அனுபவிக்கிறார் என்பது கோட்பாடு. நாங்களெல்லாரும் தங்களுடைய நாட்டில் வசிக்குங் குடிகளாயிருக்கிறோமாகையால், தாங்களே எங்களெல்லாரையும் ரக்ஷித்தருளவேண்டும். காட்டிலிருப்பினுஞ்சரி நகரத்தில் வசிப்பினுஞ்சரி, தாங்களே எங்களுக்கு இறைவர். நாங்கள் ஐம்புலன்களையும் வென்று பிறரைச் சாபத்தால் வருத்தாதவர்கள். ஆகையால் கருப்பத்திலிருக்குங் குழந்தையைத் தாய் வெகு ஜாக்கிரதையாகப் பாதுகாப்பதுபோலத் தபசிகளாகிய எங்களைத் தாங்கள் பாதுகாக்கவேண்டும்."

முனிவர்கள் வேண்டுகோள்.

இவ்வாறு சொல்லி, அம்முனிவர்கள் காட்டிலுள்ள பழங்களாலுங் கிழங்குகளாலும் புஷ்பங்களாலும் இன்

னும் அநேகவித ஆகாரங்களாலும் இராமரையும் லக்ஷ்மணரையும் பூசித்தார்கள். இவ்வண்ணமே நியாயந்தவறாது நடப்பவர்களும் அக்கினிக்கொப்பானவர்களுமான மற்றச் சித்தர்களுந் தபசிகளும் இராமரைத் தங்களுக்கெல்லாம் யஜமானராக நினைத்து ஆராதித்தார்கள்.

---

## இரண்டாஞ் சருக்கம்.

இராமர் தண்டகாரணியத்தில் விராதன் என்ற அசுரனைக்காணல்.

---

இவ்வாறு ஆராதிக்கப்பட்ட இராமர், சூரியோதய காலத்தில், முனிவர்களெல்லாரிடத்திலும் விடைபெற்று, அந்த அரணியத்துள்ளே பிரவேசித்தார். லக்ஷ்மணரோடு சென்ற இராமர் அக்காட்டின் மத்தியில், அநேக மிருக கணங்கள் நிறைந்திருப்பதையும், புலிகளும் கரடிகளும் ஓடித்திரிவதையும், நாசமடைந்த விருக்ஷங்களையும், கொடிகளையும், பார்ப்பதற்கு முடியாத ஓடைகளையும், பட்சிகள் வாயடங்கி இருப்பதையும், சுவர்க் கோழிகள் கத்திக் கொண்டிருப்பதையும் கண்டார். கொடிய மிருகங்கள் சூழ்ந்த அவ்வரணியத்தில், சீதையுடன் சென்ற இராமர், மலையின் கொடுமுடி போன்றவனும், நரமாமிசத்தை உண்பவனும், பெருஞ்சப்தத்தை உடையவனும், ஆழ்ந்த கண்களும் பரந்த முகமுமுள்ளவனும், விசாலமானவனும், மேடுபள்ளமான வயிற்றையுடையவனும், நீண்டவனும், உற்றுப்பார்ப்பதற்கு அருவருப்பும் பயமுமுண்டாகும் படியான தோற்றத்தை உடையவனுமாகிய ஓர் அரக்கனைக் கண்டார். அவன் மாமிசங்களொட்டிக்கொண்டும் ரத்தஞ் சொட்டிக்கொண்டுமிருந்த புலித்தோலொன்றை யுடுத்து, எல்லாப்பிராணிகளையும் பயமுறுத்தும்பொருட்டுத் தனது வாயைப் பிளந்துகொண்டு வந்த யமன்போல்

விராதனைக் காணல்.

காணப்பட்டான். அவன் பொருத்தமில்லாத அங்கங்க ளுடையவனும், அதிக விகாரமானவனுமா யிருந்தான். அன்றியும் அவன் மூன்று சிங்கம், நான்குபுலி, இரண்டு செந்நாய், பத்து மான், தந்தங்களையுடைய நிணஞ் சிந்து கின்ற பெரிய யானைத்தலை ஒன்று, இவைகளெல்லா வற்றையுந் தனது இருப்புச்சூல மொன்றில் குத்தி எடுத் துக்கொண்டு, பெருஞ்சத்தமாகக் கர்ச்சித்தான். இராமர் லக்ஷ்மணர் சீதை மூவர்களையுங் கண்டு, வெகு கோபத் துடன், பிரளயகாலத்து யமன் வருவதுபோல் அவன் அவர்களை நோக்கி ஓடிவந்தான். உலகத்தையே அசைத்து விடுவதுபோலப் பயங்கரமாக ஒரு பெருங் கர்ச்சனைசெய்து சீதையை எடுத்து இடுப் பில் வைத்துக்கொண்டு கொஞ்சத்தூரமோடி, "நீங்களிரு வர்களும் சடையையும் மரவுரியையும் அணிந்துகொண்டு, ஒரு ஸ்திரீயைக் கூடவழைத்துக்கொண்டு, உங்களுடைய உயிர்க்கு அழிவைச் செய்துகொண்டு, ஆபரணத்தையும் வில்லையும் கத்தியையும் தரித்துக்கொண்டு, தண்டகாரணி யத்தில் புகுந்தீர்கள்! நீங்கள் தபசிகளென்றால் ஒரு பெண்ணை நீங்கள் உடன்கொண்டு சஞ்சரிப்பானேன்? வெகு பாவிகளாக அதர்மம் செய்துகொண்டும், முநிவர் களுக்கு இழிவை உண்டாக்கிக்கொண்டும் வந்திருக்கும் நீங்கள் யார்? நான் விராதன் என்ற ராக்ஷஸன். ஒருவரா லும் அணுகக்கூடாத எனது கோட்டையாகிய இக்காட்டில் ஆயுதபாணியாகச் சஞ்சரித்து முநிவர் மாமிசங்களைப் புசித்துச் சீவிக்கிறேன். அழகா யிருக்கும் இம்மடந்தை இன்றுமுதல் என் மனைவியாவாள். நான் யுத்தத்தில் உங்க ளிருவர்களையுங் கொன்று பாவிகளாகிய உங்களுடைய இரத்தத்தைக் குடிப்பேன்" என்றான். இவ்விதம் அந்தத் துஷ்டனான விராதன் வெகு செருக்குடன் சொன்ன பயங் கரமான வார்த்தையைக் கேட்டுச் சீதை மெய்தடுமாறி மனக்குழப்பமடைந்து பெருங்காற்றாலடிக்கப்பட்ட வாழை

சீதாபகரணம்.

போலப் பயத்தால் நடுநடுங்கினாள். இப்படிச் சீதையை விராதன் தூக்கிக்கொள்ளவே இராமர், முகத்தின் களை குன்றி, லக்ஷ்மணரைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னார். "பாராய் லக்ஷ்மணா! ஜனகராஜருடைய மகளும் எனது மனைவியுமாகிய வெகு நன்னடக்கையுள்ள சீதை இப்பொழுது விராதன் மடியிலிருக்கிறாள்! வெகு சுகமாய் வளர்ந்த புகழ்பெற்ற ராஜகுமாரிக்கு வந்த கதியைப்பார்! நம்மை உத்தேசித்துக் கைகேயி கேட்டவரத்தின் பிரயோஜனம் இன்று அவளுக்குக் கைகூடிவிட்டது. தனது குமாரனுக்கு இராச்சியங் கிடைத்தால் போதும் என்றமட்டில் சந்தோஷப்படாமல், பின்வரப்போவதை முன்னதாகவே ஆலோசித்து, யாவருக்கும் ஒரு கெடுதலும் பண்ணாத என்னை எந்த எண்ணத்தைக்கொண்டு காட்டுக்கனுப்பினாளோ அவ்வெண்ணத்தின் முடிவை எனது சிறியதாய் இன்று அடைந்துவிட்டாள். அயலான் இன்று வைதேகியைத் தொட்டது என் தந்தையை நான் இழந்ததும் இராச்சியத்தை இழந்ததுமாகிய இரண்டு துக்கங்களுக்கும் மேலான துக்கத்தை என்மனத்தில் உண்டுபண்ணுகிறது."

இராமர் துக்கித்தல்.

இவ்விதமாகச் சோகத்தினால் கண்ணீர்விட்டு இராமர் துயருழன்று சொல்லிக்கொண் டிருந்தபொழுது, லக்ஷ்மணர் மந்திரத்தால் கட்டுண்ட ஸர்ப்பம்போல் சீறிக்கொண்டு, அவரைப்பார்த்து "ஐயா காகுத்தரே, இந்திரன் போல எல்லாப்பிராணிகளுக்கும் நாதராயிருக்கும் தாங்கள் இட்ட கட்டளையைநிறைவேற்ற நான் காத்துக்கொண்டிருக்க,தாங்கள் அநாதைபோல் ஏனிவ்வாறு பரிதபிக்கிறீர்கள்? இன்று கோபமடைந்திருக்கும் எனது பாணம் ஒன்றினாலேயே இந்த விராதனென்ற அரக்கன் உயிர்போய்க் கீழே விழப்போகிறான்; அவனிரத்தத்தை இப்பூமி குடிக்கப்போகிறது. இந்திரன் தனது வச்சிராயுதத்தை ஒரு பர்வதத்தில்

லக்ஷ்மணர் தேற்றுதல்.

பிரயோகிப்பதுபோல், இராச்சிய விஷயமாகப் பரதனிடம் நான் கொண்டிருக்குங் கோபத்தை இவ்விராதன் மேல் செலுத்துகிறேன். என்கையின் ஆற்றலால் அதிக வேகங்கொண்டு செல்லும் பாணம் இவன் மார்பைப் பிளந்து, உடலினின்றும் உயிரைப் போக்கி, இவன் சுழன்று பூமியில் விழும்படி செய்யப்போகிறது" என்று மிக்ககோபத்துடன் கூறினர்.

---

## மூன்றுஞ் சருக்கம்.

### விராதன் யுத்தம்.

---

மறுபடியும் விராதன் "நான் கேட்பதற்குச் சரியான விடைகொடுங்கள். நீங்கள் யார்? எங்கேபோகிறீர்கள்?" என்று அக்காடுமுழுதுக் தனது சத்தத்தால் நிரப்பியது போலக்கேட்டான். இவ்வாறு கோபத்தால் தீப்போல்ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அவ்வரக்கனைப்பார்த்து அவன் கேட்டகேள்விகளுக்கு "நாங்கள் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவர்கள். நற்சரிதையையுடைய க்ஷத்திரியர்கள். இப்பொழுது வனத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறோம்" என விடைகூறி, "நீயார்? ஏனிந்தத் தண்டகாரணியத்தில் வசிக்கிறாய் என்பதை அறிய ஆவலுடனிருக்கிறோம்?" என இராமர் வினவினர். இப்படிச் சத்தியசந்தரான இராமர் சொன்னதும் அவ்வரக்கன் "ராஜனே, நானென் விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன். ஓ ராமா, கேள். நான் ஜயன் என்பவனுடைய குமாரன்; சதஹ்ரதை என்பவள் என் தாய்; ராக்ஷஸர்கள் எல்லாரும் என்னை விராதனென்றழைப்பார்கள். நான் வெகுநாள் தவம்புரிந்து பிரமதேவரைச் சந்தோஷப்படுத்தி அவரிடமிருந்து, ஆயுதத்தால் ஒருவரும் என்னைக்கொல்லமுடியாதென்றும், என்னை வெட்ட

விராதன் விருத்தாந்தம்.

வும் பிளக்கவும் முடியாதென்றும் வரம்பெற்றிருக்கிறேன். நீங்கள் இப்பெண்ணை இங்கு விட்டுவிட்டு, இவள் மறுபடி உங்களிடம் திரும்பிவரப்போகிறுளென்ற எண்ணத்தை யும் ஒழித்துவிட்டு, உங்களுயிரில் ஆசையிருந்தால் இந்த க்ஷணமே ஓடிவிடுங்கள்" என்றுன்.

இவ்வாறு கொடிய எண்ணங்கொண்டு பயங்கரமான வடிவத்துடன் விளங்கும் விராதனைப்பார்த்து, அவன்சொன்னதைக்கேட்டு, இராமர் கோபத்தால் கண்கள் சிவந்து "அற்பனே! நீ கெட்டாய்! உன் எண்ண மொன்றும் நிறைவேருது. நீ சீக்கிரமாக மரணத்தையே தேடுகிருய். உன்னை யுத்தத்தில் வீழ்த்துகிறேன் நில். நீ என்னிடமிருந்து உயிருடன் தப்பித்துக்கொள்ள முடியாது" என்று கூறினர். இப்படிச்சொல்லி உடனே இராமர் தமது வில்லை நாணேற்றி அதில் வெகுகூர்மையான பாணங்களைச் சீக்கிரமாகத் தொடுத்துவிட்டார். நாணேற்றிய தமது வில்லினின்றும் தங்கம் இழைத்து இறக்கைகள்கட்டிக் கருடன்போலவும் காற்றுவேகமாகவும் போகத்தக்க ஏழு பாணங்களை அவ்வரக்கன்மேல் அத்தீரர் பிரயோகித்தார். மயிலிறகு கட்டப்பட்ட அவ்வம்புகள் விராதனுடைய சரீரத்தைப் பிளந்துகொண்டு இரத்தத்தில் தோய்ந்து அக்கினிப் பிழம்பு போன்று பூமியில் விழுந்தன. இவ்வாறு அடிபட்டவுடன் அவன் வைதேகியைப் பூமியில் விட்டுவிட்டுத் தனது சூலத்தை மேலே யுயர்த்தி வெகு கோபமடைந்தவனுகி இராமரும் லக்ஷ்மணருமிருந்த இடத்தைநோக்கி ஓடிவந்தான். பெரிய அட்டகாசம்பண்ணி, இந்திரதுவசம்போல விளங்கும் தனது சூலத்தை எடுத்துக்கொண்டுவரும் விராதன் தனது வாயைப் பிளந்துகொண்டுவரும் ஒரு யமன் போலக் காணப்பட்டான். பிரளயகாலத்து யமன்போல் விளங்கும் விராதன்மேல் இராமலக்ஷ்மணர்கள் இருவரும் வெகு கூர்மையான அம்புகளை மழைபொழிவதுபோலப்

விராதன் யுத்தம்.

பொழிதார்கள். அவன் அவ்வளவு பாணங்களையுந் தாங்கி நின்று சிரித்துச் சரீரத்தை உதறினான். அவ்வாறு அவன் சரீரத்தை உதறவே அப்பாணங்கள் பொலபொலவென்று உதிர்ந்து கீழே விழுந்தன. தான் பெற்றிருந்த வரத்தின் மகிமையால் அவ்வரக்கன் தனது பிராணவாயுக்களை யெல்லாம் இழுத்துப்பிடித்து வெகு பலமடைந்து தனது சூலத்தை எடுத்துக்கொண்டு இராமரை எதிர்த்து வந்தான். ஆகாசத்தில் உயர்ந்து நெருப்புப்போல எரிந்துகொண்டு வச்சிராயுதம்போல விளங்கிய அச்சூலத்தை, வில்லாளிகளுட் சிறந்தவரான இராமர், இரண்டு பாணங்களைச் செலுத்தித் துண்டித்தெறிந்தார். இராமருடைய பாணங்களால் துண்டிக்கப்பட்டுப் பூமியில் விழுந்த சூலாயுதம் இடியால் பிளந்தெறியப்பட்ட மேருவின் சிகரம்போல் விளங்கிற்று. உடனே அவர்களிருவரும், கருநாகம்போல் கொடிய சக்தியுள்ளவைகளான தங்களுடைய கத்திகளை எடுத்துக்கொண்டு, அவனிடம் வேகமாகவோடி, அவனை விசையாக வெட்டினார்கள். அவ்வாறு வெட்டிக்கொண்டிருக்கையில், அசைக்கவொண்ணுத புருஷவியாக்கிரங்களாகிய இராம லக்ஷ்மணர்களை விராதன் தனது இருகைகளாலும் வேகமாக அணைத்துத் தூக்கிக்கொண்டு ஓடத் தலைப்பட்டான். அவன் கொண்ட கருத்தை இராமரறிந்து லக்ஷ்மணரைப் பார்த்து, அவன் "இச்சையின்படியே எந்தவழி நம்மைத் தூக்கிக்கொண்டு போகிறானே அந்தவழியே போகட்டும். அவனிப்பொழுது செல்லுகிற வழி நாம் போகவேண்டியவழிதான்" என்றார். அரக்கன் அப்போது இராமலக்ஷ்மணர்கள் இருவரையும் ஏதோ சிறுகுழந்தைகளைத் தூக்குவதுபோல் தூக்கித் தனது தோளின்மேல் வைத்துக்கொண்டு அலக்ஷியமாக ஓட ஆரம்பித்தான். அவன் ரகுகுல சிம்மங்களான அவ்விருவர்களை

விராதன் இராமலக்ஷ்மணர்களைத் தூக்கிச் செல்லல்.

யும் தனது தோளின்மேல் தூக்கிக்கொண்டு பயங்கரமாக அட்டகாசம்பண்ணிக் காட்டை நோக்கிச் சென்றான். அவன் கடைசியாய் மேகக்கூட்டம்போல் இருளடைந்துள்ளதும், அநேகவித விருக்ஷங்கள் அடர்ந்ததும், நானுவித பறவைகள் நிறைந்ததும், நரி ஊளையிடுவதும், துஷ்ட மிருகங்கள் பொருந்தியதுமான வனத்தில் புகுந்தான்.

---

## நான்காஞ் சருக்கம்.

### விராதன் வதை.

---

இராமலக்ஷ்மணர்கள் இருவரையும் எடுத்துக்கொண்டு விராதனோடினதைச் சீதைபார்த்துத் துக்கத்தால் தனது அழகிய கைகளைத் தூக்கிக்கொண்டு இரைந்து கதறினாள். "சத்தியவானாயும் சீலமுடையவராயும் சுத்தராயுமிருக்கிற தசரதகுமாரரான இராமரை லக்ஷ்மணருடன் எடுத்தோடுகிறானே ஒரு பயங்கரமான அரக்கன்! இனி என்னைச் செந்நாய்களோ அல்லது புலியோ அல்லது சிறுத்தையோ புசித்துவிடப்போகின்றன. அப்பா அரக்கர்களுக்குள் உத்தமனே, உனக்கு நமஸ்காரம். நீ அவர்களிருவர்களையும் விட்டுவிட்டு என்னை எடுத்துக்கொண்டுபோ" என்றாள். இவ்வாறு கூறிய சீதையுடைய வசனத்தைக்கேட்டு இராமரும் லக்ஷ்மணரும் அந்தத் துஷ்ட அரக்கனைக் கொலைசெய்யவிரைந்து, அவனுடைய இடது புஜத்தை லக்ஷ்மணரும் வலதுபுஜத்தை இராமரும் வெட்டினார்கள். கைகள் வெட்டுப்படவே, மேகத்துக்கொப்பானஅரக்கன் நடுக்கமடைந்து வஜ்ஜிராயுதத்தினால் பிளக்கப்பட்ட மலைபோல் பூமியில் விழுந்தான். அவ்வாறு விழுந்தவனை இராமலக்ஷ்மணர்கள் தங்கள் கைக்குத்தாலும் முழங்காலிடியாலும்

சீதை துக்கித்தல்.

காலுதையாலும் பூமியில் தேய்த்தார்கள். அனேக பாணங்களால் அடிக்கப்பட்டும் கத்திகளால் வெட்டப்பட்டும் மற்றும் பலவிதமாய் இடிக்கப்பட்டும் இராக்கதன் சீவனை விடவில்லை. இவ்விதமாக உயிர்போகாமலிருந்த மலைக்குச் சமானமான அரக்கன் கொல்லமுடியாதவனென்று அறிந்து, பயமடைந்தவர்களுக்கு அபயம் கொடுக்கின்ற சீமானாகிய இராமர் லக்ஷ்மணரைநோக்கி "ஓ புருஷசிங்கமே, இவ்வரக்கன் தவத்தின்பலத்தால் யுத்தத்தில் ஆயுதங்களால் கொல்லப்படான். ஆகையால் நாமிவனைப் பூமியில் அடக்கம் செய்வோம்" என்றார். இப்படி அவர் சொன்ன சொல்லை விராதன் கேட்டு வெகுதீனசுவரத்துடன் "நான் எனது அஞ்ஞானத்தால் முதலிலேயே தாங்களின்னாரென்பதை அறிந்துகொள்ளவில்லை. இப்பொழுதுதான் தாங்கள் கௌசலையின் அருமைத்திருமகன் என்று தெரிந்துகொண்டேன். மிக்க பாக்கியவதியான சீதையையும் வெகுகீர்த்தி பொருந்திய லக்ஷ்மணரையும் நானிப்பொழுதுதான் அறிந்துகொண்டேன். நான் சாபத்தால் இந்தக் கோரமான ராக்ஷஸ ரூபமெடுத்தேன்; தும்புரு என்னும் பெயருள்ள கந்தர்வன்; குபேரனால் சபிக்கப்பட்டு இக்கதியை யடைந்தேன். என்னை அவர் சபித்தபின் நான் அவரைச் சந்தோஷப்படுத்தி எப்பொழுது இச்சாபம் நீங்குமென்று கேட்க, பெருந்தகையாகிய அவர் "தசரதகுமாரராகிய இராமர் உன்னை யுத்தத்தில்வீழ்த்தும்பொழுது நீ மறுபடியும் உன்னுடைய சொந்த உருவமடைந்து சுவர்க்கலோகஞ் சேர்" என்று அனுக்கிரகித்தார். இவ்வாறு நானொரு காலத்தில் அரம்பையிடம் வைத்த ஆசையால் குபேரனை வணங்காமல் இருந்ததற்காக, அவர் என்மேல் கோபங்கொண்டு சபித்தார். ஓ! சத்துருக்களைத் தவிக்கும்படி செய்கிற இராகவா, தங்களுடைய அனுக்கிரஹத்தால் இந்தக் கொடிய சாபத்தினின்றும் நான் விடுபட்டேன்

விராதன் பூர்வ விருத்தாந்தம்.

இனி நான் என்லோகத்திற்குப் போகிறேன். உங்களுக்கு க்ஷேமம் உண்டாகட்டும். இங்கிருந்து ஒன்றரையோசனை தூரத்தில், சூரியன்போல் தமது காந்தியால் விளங்கும் தர்மாத்துமா சரபங்கமகரிஷி வசிக்கிறார். அவரிடம் சீக்கிரஞ் செல்லுங்கள். அவர் உங்களுக்கு க்ஷேமத்தைச் செய்வார். என்னைக் குழியில் அடக்கஞ்செய்துவிட்டு க்ஷேமமாய்ப் போங்கள். இறந்துவிட்ட அரக்கர்களை அடக்கம்செய்வதே பழைமையான தர்மம். எந்த ராக்ஷஸர்கள் அடக்கம் செய்யப்படுகிறார்களோ அவர்களுக்குத் திஸ்தாலோகம்கிடைக்கும்" என்றிவ்வாறு சொல்லிக்கொண்டே தன்மேல் பாய்ந்திருந்த பாணங்களின் வேதனை பொறுக்கமுடியாமல் தனது சரீரத்தைவிட்டுச் சுவர்க்கஞ்சேர்ந்தான். அவ்வரக்கன் சொன்னதைக்கேட்டு இராகவர் லக்ஷ்மணரைநோக்கிக் "கொடிய காரியங்களைப் பண்ணிக்கொண்டிருந்த யானை போன்ற இக்கொடிய அரக்கனைப் புதைக்கப் பெருங் குழிஒன்று வெட்டுக" என்றுகூறி அவன்கழுத்தைத் தமது காலால் மிதித்துக்கொண்டு நின்றார். லக்ஷ்மணர் ஒரு மண்வெட்டியை எடுத்துக்கொண்டு அவ்விராதனுடைய தேகங் கிடந்த இடத்துக்குச் சமீபத்தில் பெருங்குழி யொன்று வெட்டினார். குழி வெட்டி முடிந்தவுடன் இராமர் தமது காலை அவ்வரக்கன் கழுத்தைவிட்டெடுக்க, கூர்மையான முனைபோலுள்ள செவியனும் பெருஞ் சப்தத்தை யுடையவனுமான விராதனை லக்ஷ்மணர் குழியில் தள்ளினார். அப்பொழுது பெருஞ்சப்த முண்டாயிற்று. வெகு பராக்கிரமசாலிகளும் உறுதியுடையவர்களுமான இராம லக்ஷ்மணர்கள் அவ்வரக்கனை யுத்தத்தில் வென்று, வெகு சந்தோஷமடைந்து, பயங்கரமாகக் கத்திக்கொண்டிருந்த அவனைத் தூக்கிக் குழியில் போட்டார்கள். அந்த மகாவசுரன் போரில் கூர்மையான ஆயுதங்களால் விழான் என்ற சங்கதியை சமயோசிதம் தெரிந்த வீரர்கள் அறிந்து

விராதனைப் புதைத்தல்.

கொண்டு, அவனைக்கொல்லத்தக்க உபாயத்தைத் தீர்மாணம்செய்து, அவனைக் குழியில் தூக்கிப்போட்டு மாள்வித்தார்கள். விராதன் தான் சஸ்திரத்தால் மாளாத வரம் பெற்றிருத்தலைத் தானாகவே தெரிவித்து இராமர் கையாலேயே தான் மாளவேண்டுமென்று வேண்டிக்கொண்டபடியால், அவர் அவன் வேண்டுகோளின்படி குழியொன்று வெட்டி அதில் அவனைப் புதைக்கும்படியாயிற்று. அப்பொழுது அவ்வரக்கனிட்ட கூச்சல் அவ்வன முழுதும் நிரம்பிற்று. இவ்வண்ணம் விராதனைக் குழியில் கற்களையும் மண்ணையும் போட்டுப் புதைத்துவிட்டு, தங்களுக்கு வந்த பயம் நீங்கி, இராமலக்ஷ்மணர்கள் வெகு சந்தோஷமடைந்தார்கள். சீதையுடன் சந்தோஷத்தோடு அவ்விருவரும் தங்களுடைய தங்கக்கட்டமைந்த விற்களை எடுத்துக்கொண்டு அக்காட்டில் சூரிய சந்திரர்கள் போல் சஞ்சரித்தார்கள்.

---

## ஐந்தாஞ் சருக்கம்.

சரபங்கமகரிஷியை இந்திரன் பிரமலோகத்துக்கழைக்கவந்தது.

---

பயங்கரமான பலம்பொருந்திய விராதனை அவ்வாறு காட்டில் கொன்றபிறகு, இராமர் சீதையிடம் வந்து அவளை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு சமாதானப்படுத்தித் தமது தம்பியாகிய வெகு பலபராக்கிரமம் தங்கிய லக்ஷ்மணரைப் பார்த்து "இந்தக் காடு வெகு கஷ்டமானது; எளிதில் கடக்கமுடியாதது. நமக்கும் இக் காட்டுவழி நன்றாகத் தெரியாது. ஆகையால் நாம் சீக்கிரமாகச் சரபங்கருடையஆச்சிரமத்துக்குப் போவோம்" எனச் சொல்லிக்கொண்டு சரபங்கமகரிஷியின் ஆச்சிரமத்தை நோக்கி நடந்தார். தேவருக்கொப்பான மகிமையுள்ளவரும், தவத்தால் பரிசுத்தம் பண்ணப்பட்ட ஆத்து

மாவை உடையவருமான சரபங்க மகரிஷியின் ஆச்சிர மத்துக்குச் சமீபத்தில் வந்துகொண்டிருக்கையில் இராமர் ஒருபெரிய ஆச்சரியத்தைக் கண்டார்: அங்கே இந்திரன் சூரியனுக்கும் அக்கினிக்கும் ஒப்பான காந்தியால் விளங்கும் தேகத்தையுடையவனாகி, அழகாகப் பிரகாசிக்கும் ஆடையாபரண மணிந்துகொண்டு, தேவபரிவாரங்கள் சூழ, தனது இரதத்தை விட்டிறங்கிப் பூமியில் மிதியாமல் அதற்கு மேலாகவே நின்றுகொண்டிருந்தான். அவனைச் சூழ்ந்து அவனைப்போன்ற அநேக மகாத்துமாக்கள் நின்று வணங்கிக்கொண்டிருந்தார்கள். அதற்குச்சமீபத்தில் இளஞ் சூரியனுக்கொப்பான அவனுடைய இரதமும் பச்சைக் குதிரைகள் கட்டப்பட்டு ஆகாசத்திலேயே நின்றுகொண்டிருந்தது. அவனுடைய வெண்குடை அநேக விதமான மாலைகளால் அலங்கரிக்கப்பட்டு வெண் மேகம்போலவும் சந்திர மண்டலம் போலவும் விளங்கிக்கொண் டிருந்தது. அவனுடைய இருபக்கங்களிலேயும் இரண்டு உத்தமஸ்திரீகள் பொற்காம்புபோட்ட இரண்டு விலையுயர்ந்த வெண்சாமரங்களைத் தங்கள் கையாலெடுத்து வீசிச் சுழற்றிக்கொண்டிருந்தார்கள். கந்தர்வர்களும் தேவர்களும் சித்தர்களும் அநேக உத்தம ரிஷிகளும், இந்திரன் ஆகாசத்தில் நிற்கையிலேயே பல அழகான மொழிகளால் அவனை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். அவ்வாறு அங்குவந்திருந்த இந்திரன் சரபங்கமகரிஷியிடம் ஏதோ பேசிக்கொண்டிருப்பதை இராமர் தூரத்திலேயே கண்டு, லக்ஷ்மணரைப்பார்த்து, அந்த இரதத்தை அவருக்குக் காட்டி "வெகு காந்தியும் அழகும் உடையதாகிப் பார்ப்பதற்கு வெகு ஆச்சரியமாகத் தனது பூரணகிரணங்களுடன் பிரகாசிக்கும் சூரியன்போல் ஆகாசத்தில் நிற்கும் அந்த இரதத்தைப்பார். லக்ஷ்மணா, நாம் இந்திரனுடைய குதிரைகள் எப்படிப்பட்டதென்று முன் கேள்வியுற்றிருக்கி

இந்திரனைக் காணல்.

ஞேமோ அப்படிப்பட்ட குதிரைகளையே நாம் இப்பொ ழுது ஆகாசத்தில் நேரில் பார்க்கிறேம் என்பது நிச்சயம். அந்த இரதத்தைச் சூழ்ந்துகொண்டு நூறுநூருக நிற்கி ருர்களே அவர்களை நன்ருகப்பார். அவர்கள் புருஷ சிரேஷ்டர்கள்; குண்டலங்களைத் தரித்துக்கொண்டு, யௌ வனமுடையவர்களாய், கைகளில் கத்தியேந்தி, விசாலமா யும் விபுலமாயுமுள்ள மார்புடையவர்களாய், தாழ்ப்பாள் போல் நீண்ட கைகள் அமைந்து, சிவப்பு வஸ்திரங்கள் உடுத்து, புலிகள்போல் கிட்ட நெருங்கவொண்ணுத பராக்கிரமம் பொருந்தியவர்களாய், தங்கள் மார்புகளில் அக்கினி போல் பிரகாசிக்கும் ஆரங்களை அணிந்து கொண்டு, எல்லாரும் இருபத்தைந்து வயதுள்ள உரு வத்தை உடையவர்களாய் இருக்கிருர்கள். இவ்வுருவம் அவர்களுக்கு எப்பொழுதும் ஏற்பட்டது. இப்பொழுது எப்படிப் புருஷசூரர்களாயும், பிரியமான உருவமுள்ளவர் களாயும் காணப்படுகிருர்களோ அப்படியே அவர்கள் எப்பொழுதும் இருப்பார்கள். இரதத்தில் காந்தியுடன் விளங்குகின்றவர் இன்னுரென்று நானறிந்துகொண்டு வரு கிறவரையில், அப்பா லக்ஷ்மணு, நீ இங்கேயே கொஞ்ச நேரம் சீதையுடன் நின்றுகொண்டிரு" என்ருர். இவ் வாறு சொல்லிக் காகுத்தர் சரபங்கமகரிஷியின் ஆச்சிர மத்துக்கு எதிரே சென்றுகொண்டிருந்தார். இராமர் வருவதை இந்திரன் பார்த்துச் சரபங்கமகரிஷி யிடம் "இராமரிங்கு வந்துகொண்டிருக்கிருர். அவரிப்பொழுது என்னைக்காணுவது தகுதியன்று. முன்னர்த் தமது காரி யத்தை முடிக்கட்டும்; பிறகு என்னை அவர் பார்க்கலாம். அவர் சீக்கிரத்தில் ஜெயித்துக் காரியத்தை முடித்துக்கொ ண்டவுடன் நானே அவரைப் பார்ப்பேன். வேறெருவரா லும் செய்யமுடியாத பெருங்காரியம் அவரால் ஆகவேண்டி யிருக்கிறது. அதை முடித்துவிட்ட பிறகுதான் அவர் என் னைக் காணலாம்" என்று இரகசியமாகக் கூறினன். இவ்

விதமாகத் தேவேந்திரன் அம்முநிவரிடஞ் சொல்லி விடைபெற்று அவருக்குச் செய்யவேண்டிய மரியாதைக ளைச் செய்துவிட்டுக் குதிரைபூட்டிய தனது இரதத்திலே றித் தேவலோகஞ்சென்றான். அவன் போனபின்பு, இரா கவர் சீதையையும் லக்ஷ்மணரையும் தம்முடன் அழைத் துக்கொண்டு அக்கினிஹோத்திர சாலையில் உட்கார்ந் திருந்த சரபங்கமுநிவரின் சமீபம் போனார். இராமர் லக்ஷ்மணர் சீதை மூவர்களும் முநிவரின் பாதங்களில் வணங்கி, அவருத்தரவு பெற்றுக்கொண்டு, அவர் இட்ட ஆசனங் களில் உட்கார்ந்து, அவரால் பூஜிக்கப் பட்டார்கள். பிறகு, இராமர் சரபங்கரைப் பார்த்து இந்திரன் வந்த தைப்பற்றி வினவ, முநிவரும் அச்சங்கதி முற்றையும் சொன்னார். "அப்பா இராமா, என்னை இந்திரன் பிரமலோகத்துக் கழைத்துப்போக வந்தனன். மற்றவர் களால் ஒருபொழுதும் ஜெயிக்கமுடியாததை நான் என் னுடைய தவத்தால் வென்றிருக்கிறேன். ஓ புருஷ வீரா, தாங்கள் எனக்கு வெகு சமீபத்தில் வந்திருப்ப தாக நான் தெரிந்துகொண்டபடியால் பிரியரான அதிதி யாகவந்த தங்களைக்காணாமல் நான் பிரமலோகம் போகக் கூடாதென்று நின்றுவிட்டேன். இனி மகாத்துமாவாயும் தர்மசீலராயுமுள்ள தங்களைக் கண்டபிறகு நான் தேவர் களால் சேவிக்கப்படும் திரிதிவலோகம் போகப்போகி றேன். நான் அழிவற்ற பிரமலோகம் நாகபிருஷ்டம் என்ற உலகங்களைப் பெற்றிருக்கிறேன். எனக்குரியனவாகிய இவைகளைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று சரபங்கமகாரிஷி சொல்லலும், எல்லாச் சாஸ்தி ரங்களையும் நன்றாகக் கற்றறிந்த இராகவர் அவரைப்பார் த்து "ஐயா மகரிஷியே, நானே இவ்வுலகங்களை எனக் குத் தேடிக்கொள்ளுகிறேன். அப்படி முடியாவிட் டால் தங்கள் சொற்படி அங்கீகாரம் செய்துகொள்கி

சரபங்கரைக் காணல்.

றேன். இப்பொழுது இக்காட்டில் வந்திருக்கும் எனக்கு நான் வசிக்கவேண்டிய இடத்தைக் குறிப்பிக்கும்படி தங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்" என்றனர். இவ்விதமாக இந்திரனுக்கொப்பான பலமுள்ள இராமர் சொல்ல வெகு புத்திமானுகிய சரபங்கர் கேட்டு மறுபடியும் "ஓ இராமா, இந்த அரணியத்தில் தார்மிகரும் வெகு காந்திபொருந்தியவரும் மகாத்துமாவுமாகிய சுதீக்ஷணர் என்ற தபோதனர் வசித்துக்கொண்டிருக்கிருர். அவரிடம் தாங்கள் சென்ருல் அவர் தங்களுக்கு வேண்டிய நன்மையைச் செய்துவைப்பார். தாங்கள் சுதீக்ஷணரென்ற அருந்தவரிடஞ் சென்றதும் அவர் தாங்கள் வசிக்கத்தகுந்த ரமணீயமான ஆச்சிரமத்தைத் தங்களுக்குக் குறிப்பித்துக் காட்டுவார். அநேக புஷ்பங்கள் பூத்து விளங்கிக்கொண்டோடும் மந்தாகினி நதிக்கு எதிர்முகமாகத் தாங்கள் அதன் கரையோரமே சென்ருல் அம்முநிவர் ஆச்சிரமத்துக்குப்போகலாம். இதுதானதற்கு வழி. ஆனல், புருஷசிரேஷ்டரே, ஒருமுகூர்த்தகாலம் என்னைப்பாரும்; பாம்பு தனது பழைய தோலைக் கழற்றிவிடுவதுபோல நான் என் தேகத்தை நீத்துவிடப்போகின்றேன்" என்று வேண்டினர். இவ்வாறு சொன்னபின்பு அக்கினியை நன்ருக மூட்டிச் சாஸ்திரப்பிரகாரம் ஹோமம் பண்ணி முடித்துக் கொழுந்துவிட்டெரியும் அவ்வக்கினியின்மத்தியில் அம்மகா காந்தி பொருந்திய சரபங்க முநிவர் பிரவேசித்தார். அவ்வக்கினி அவருடைய உரோமம், தலைமயிர், உடம்புமேலிருந்த தோல், எலும்பு, மாமிசம், இரத்தம் என்னும் இவைகளையெல்லாந் தகித்தது. அதை இராமரும் லக்ஷ்மணரும் சீதையும் பார்த்து மிகவும் ஆச்சரியமடைந்தார்கள். உடனே சரபங்கர் அவ்வக்கினிமத்தியில் இருந்து அக்கினிக்கொப்பான ஒரு சிறுபிள்ளையாய் எழுந்து ஆகிதாக்கினிகள், இருடிகள், மகாத்துமாக்கள், தேவர்கள் முதலியோர்

சரபங்கர் தீப்புகல்.

தங்கள் தங்கள் புண்ணியங்களால் அடைந்திருக்கும் உலோகங்களையெல்லாம் கடந்துசென்று பிரமலோகத்தைப் போயடைந்தார். அநேக புண்ணியங்களைப் பண்ணிய அவ்வந்தண சிரேஷ்டர் அவ்வுலகத்தில் பிரமதேவர் தமது பரிவாரங்களுடன் இருப்பதைக் கண்டார். பிரமதேவரும் அவரைக் கண்டு சந்தோஷமடைந்து அவரை நல்வரவுகூறினர்.

---

## ஆறுஞ் சருக்கம்.

*சரபங்கமகரிஷியின் ஆச்சிரமத்திலிருந்த ரிஷிகளெல்லோரும் இராமரைச் சரணமடைந்து ராக்ஷசர்களின் உபத்திரவத்தை நீக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்ளல்.*

---

சரபங்கமுநிவர் தேவலோகஞ்சென்றபின், தமதுகாந்தியால் பிரகாசித்துக்கொண்டிருந்த இராமரிடம் அங்கிருந்த ரிஷிகணங்கள் எல்லாம் ஒன்றுகச்சேர்ந்துவந்தார்கள்.

முநிவர் வகை.

வைகானசர்கள், அங்குஷ்டப் பிரமாணம் உயரமுள்ள வாலகில்லியர்கள், எப்பொழுதும் ஸ்நானம்பண்ணித் தங்களுடைய தேகத்தை இடைவிடாது சுத்தமாக வைத்துக்கொண்டு தவம்புரியும் ஸம்பிரக்ஷாளர்கள், சந்திரசூரிய கிரணங்களையே குடித்துக்கொண்டு சீவிக்கும் மரீசிபர்கள், எப்பொழுதும் தங்கள்தேகத்தைக் கற்களில் மோதிக்கொண்டு தவம்புரியும் அச்சமகுட்டர்கள் பலர், உதிர்ந்தசருகுகளைப் புசித்துக்கொண்டு தவம்புரியும் பத்திராசனர்கள், பற்களாலே தானியங்களைக் கொறித்துப் புசிக்கும் தந்தோலூகலர்கள், எப்பொழுதும் தலைக்குக்கீழ்ப்பட்ட ஜலத்தில் நின்றுகொண்டு தவம்பண்ணும் உந்மஜ்ஜகர்கள், தூங்கும்பொழுதெல்லாம் தலையைத் தங்கள் தோளின்மேலேயே வைத்

துத் தூங்கும் விரதமுள்ள காத்திரசய்யாக்கள், தூங்கா விரதிகளாகிய அசய்யாக்கள், காற்று மழை வெயில் என் பவைகளொன்றுக்கும் பயப்படாமல் எப்பொழுதும் வெட் டவெளியில் அலைந்துதிரிந்துகொண்டு தவம்புரியும் அநவ காசிகர்கள், ஜலமொன்றையே குடிப்பவர்களான சலிலாகா ரர்கள், காற்று ஒன்றையே புசிப்பவர்களான வாயுபக்ஷர் கள், மரங்களின்மேலேயே வசிப்பவர்களான ஆகாசநிலயர் கள், யாகபூமியிலுள்ள மண்மேடையிலேயே படுத்துக் கொள்ளும் தண்டிலசாயிகள், ஒருவித ஆகாரமு மில்லா மல் புசிப்பென்பதையே விட்டுவிட்டுத் தவம்பண்ணும் ஊர்த்தவாசிகள், பொறுமையுள்ளவர்களாய் எப்பொழு தும் ஈரத்துணி உடுத்துக்கொண்டு தவம்புரியும் ஆர்த்திரப டவாசர்கள், எப்பொழுதும் ஜபத்தையே பிரதானமாகக் கொண்ட ஜபர்கள், பஞ்சாக்கினி வளர்த்து அவைகளின் மத்தியில் வெயிற்காலத்தில் உட்கார்ந்துகொண்டு தவம் புரியும் பஞ்சதபர்கள், இவர்களெல்லாரும் பிரமதே ஜஸுடன் விளங்காநிற்க இடைவிடாத யோகநிஷ்டையால் ஏகாக்ரசித்தர்களாகச் சரபங்கமகரிஷியின் ஆச்சிரமத்தி லுள்ள இராமரிடம் வந்துசேர்ந்தார்கள். தர்மக்ஞர்களான தவத்தோர் கூட்டங்கள் சிரேஷ்டமான தர்மத்தை அறிந்த இராமரைநோக்கி "ஐயா, தாங்கள் இக்ஷ்வாகு குலத் திற்கும் இவ்வுலகத்திற்கும் முதல்வராயும் யஜமானராயும் இருக்கிறீர்கள். தேவர் களுக்கெல்லாம் எவ்வாறு இந்திரன் யஜ மானோ அதுபோல் எங்களுக்கெல்லாம் யஜமான் தாங்களே. தங்களுடைய புகழும் பராக்கிரமமும் மூவுலகத்திலும் பரவியிருக்கின்றன. அவைகளைப்போலவே, தந்தை சொல்லில் தாங்கள் வைத்திருக்கும் கௌரவமும் உண்மை யும் தருமமும் தங்களிடம் விளங்குகின்றன. நாங்கள் யாசகர்களாக மகாத்துமாவான தங்களை அடைந்து சொல் லப்போகிறதைக் கேட்டுத் தாங்கள் எங்களை மன்னிக்க

முனிவர்கள் முறையீடு.

வேண்டும். தனது குடிகளிடமிருந்து ஆறிலொருகடமை வாங்கிக்கொண்டு அவர்களைத் தனது பிள்ளைகளைப்போல ரக்ஷிக்காத அரசனது பாவம் மிகவும் பெரிது. அப்படியில்லாமல் எந்த அரசன் தன்னுயிரைப்போலவும் அவ்வுயிரினு மினிய தனது சொந்தப்பிள்ளைகளைப்போலவும் குடிகளைப் பரிபாலனம்பண்ணுவதிலேயே எப்பொழுதும் கவலையுள்ளவனாகவிருந்து தன்னாட்டிலுள்ளவர்களைக் காப்பாற்றிவருகிறானோ அவன் அநேகவருஷங்கள் இவ்வுலகத்தில் அழியாதுநிற்கும் புகழைப்பெற்றுப் பிறகு பிரமலோகத்திலும் பெருமை பெறுவான். காட்டில் கனிகளையுங் கிழங்குகளையும் புசித்துக்கொண்டு தவம்புரியுந் தவத்தினர்களை எந்த அரசன் காப்பாற்றுகிறானோ அவன் அத்தவத்தினர்களுடைய தவத்தில் நான்கிலொருபாகத்தைக் கடமையாகப்பெறுவான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்பொழுது தங்கள்முன் வந்துள்ள வானப்பிரஸ்த நிலையில் நின்றொழுகும் அந்தணர்களெல்லாம் தங்களையே சரணமாக அடைந்திருந்தபோதிலும், அநாதைகள்போல ராக்ஷசர்களுபத்திரவத்தால் இக்காட்டில் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஐயா, எங்களுடன்கூடவந்து வெகு கொடியவர்களான இவ்வரக்கர்களால் பலவாறு கொல்லப்பட்ட பரிசுத்தர்களாகிய அளவிறந்த அருந்தவர்களுடைய சரீரங்களைப் பாருங்கள். இதேமாதிரி உபத்திரவங்களையே பம்பாநதிக் கரையிலும் மந்தாகினி நதிக்கரையிலும் சித்திரகூடபருவதத்திலும் வசிக்கும் ரிஷிகளும் அநுபவித்துக்கொண்டு வருகிறார்கள். கொடிய செயல்களையே நோன்பெனக் கருதியிருக்கும் அரக்கர்கள் இவ்வனத்தில் ரிஷிகளுக்குச் செய்யுந் தீமைகளைப் பார்த்து எங்களால் சகிக்கமுடியவில்லை. ஆகையால் நாங்களெல்லாரும் யாவருஞ் சரணமென்றடையுந் தங்களை இப்பொழுதுசரணமாக அடைந்திருக்கிறோம். ஐயா இராஜகுமாரரே, எங்க

ளெல்லாரையும் இவ்வரக்கர்களுடைய உபத்திரவத்திலிரு ந்து நீக்குவது தங்கள்கடமை. தாங்களே எங்களை ரக்ஷிக்க வேண்டும். தங்களைவிட எங்களை இவ்வுலகத்தில் ரக்ஷிக்கக் கூடியவர் வேறொருவருமில்லை" என்று இவ்வாறு ஒருங் கே முறையிட்டார்கள். தருமாத்துமாவாகிய இராமர் அத னைக்கேட்டு அவ்வருந்தவர்களை நோக்கி "முனிவர்களே,

இராமர் அபயம் கொடுத்தல்.

இவ்வாறு என்னை நீங்கள் வருந்திக்கேட்டு க்கொள்ளுவது நியாயமன்று. நானே உங்க ளால் கட்டளையிடப்பட வேண்டியவன். நான் இக்காட்டுக்கு வந்தது இராக்கதர்களிடமிருந்து உங் களைப் பாதுகாக்கவேண்டுமென்ற என் சொந்தக்காரிய மாகவே. அதனுடன் தற்செயலாக என் தந்தைவாக்கை நிறைவேற்றி வைக்கும் கடமையுஞ் சேர்ந்திருக்கிறது. ஆகையால், நானிப்பொழுது தற்செயலாக இங்கு வந்தி ருப்பது உங்கள் மனோரதங்களை நிறைவேற்றிவைக்கும் பொருட்டேயென் றெண்ணுகிறேன். என் வனவாசமும் இதனுல் வெகு பயனுள்ளதாக முடியும். அருந்தவர்களு டைய சத்துருக்களாகிய அரக்கர்கள் எல்லாரையும் யுத்தத் தில் மடியச் செய்கிறேன். தவத்தையே பொருளாகக் கொண்டிருக்கும் நீங்கள் என் வலிமையையும் என் தம்பி யின் வலிமையையும் பார்க்கப்போகிறீர்கள்" என்றனர்.

இவ்வாறு தருமத்திலேயே உறுதியான புத்தியுள்ள இராமர் தமது தம்பி லக்ஷ்மணருடன் தம்மைக் காண வந்த ரிஷிகளுக்கெல்லாம் அபயங்கொடுத்து, அவர்களெல் லாருஞ் சூழ்ந்துவரச் சுதீக்ஷ்ணமாமுனிவரின் ஆச்சிரமத் துக்குப் புறப்பட்டார்.

---

## ஏழாஞ் சருக்கம்.

இராமர் சுதீக்ஷணருடைய ஆச்சிரமத்துக்குச் சென்றது.

இராமர் தமது தம்பியுடனும் சீதையுடனும் கூட வந்த அவ்வந்தணர்களுடனும் சுதீக்ஷணருடைய ஆச்சிரமத்துக்குப் புறப்பட்டார். அவர் நெடுந்தூரம் நடந்து சென்று, நன்ருக நீர் நிரம்பியோடும் அனேக நதிகளைக் கடந்து, ஒரு பெரிய மேகம்போல் உயரமாக விருந்த விசாலமான ஒருமலையைக்கண்டார். அங்கிருந்து இக்ஷ்வாகு வம்ச சிரேஷடர்களான இராமலக்ஷ்மணர்கள் சீதையுடனே அநேக விதமான மரங்களடர்ந்த ஒரு பெருங்காட்டில் புகுந்தார்கள். நிரம்பப்பூத்தும் பழுத்துமிருக்கும் அநேகமரங்கள்செறிந்த அந்தப்பயங்கரமான வனத்தில் கொஞ்சத்தூரஞ் சென்று, அதினெருபக்கத்தில் மரவுரிகளாலும் மாலைகளாலும்விளங்கும் ஓர் ஆச்சிரமத்தை இராமர்கண்டார்.

சுதீக்ஷணரைக் காணல்.

அங்கே அழுக்கு நிரம்பிய ஜடைகளையுடையவராய் உட்கார்ந்திருந்த தவத்தாற்பெரிய சுதீக்ஷணரிடம் இராமர் சென்று "பகவானே, நான் இராமன்; தங்களைத்தரிசிக்க இங்குவந்திருக்கிறேன். தருமத்தை அறிந்தவரே, உண்மையான பராக்கிரமம் படைத்தவரே, என்னை ஆசீர்வதியுங்கள்" என்று வேண்டினர். உடனேஅவர் வீரரும் தருமத்தையறிந்தவர்களுக்குள் உத்தமருமான இராமரை உற்றுப்பார்த்துச் சந்தோஷத்தால் அவரைத்தழுவி "இராமா, வீரனே, தருமத்தை ஆராய்ந்து நடத்துகிறவர்களுக்குள் உத்தமனே, தங்கள்வரவு நல்வரவாகுக. தாங்கள் இங்கு வந்ததால் இந்த ஆச்சிரமம் யஜமானனைப் பெற்ற ஆச்சிரமமாய்விட்டது. பெரும் புகழ்பெற்றவரே, நான் தங்கள்வரவை எதிர்பார்த்துக்கொண்டே என்னுடைய இந்தத்தேகத்தை இவ்வுலகத்தில் விட்டுவிட்டுத் தெய்வலோகத்துக்குப் போகாமல் இருந்தேன். தாங்கள் தங்களுக்குக் கிடைக்கவேண்

டிய இராச்சியத்தை இழந்துவிட்டுச் சித்திரகூடம் வந்து வசித்திருந்தது எனக்குமுன்னரே தெரியும். நூறுயாகங்கள் பண்ணிமுடித்த தேவேந்திரன் இங்கு வந்திருந்தான்; நான் என்னுடைய புண்ணியகருமங்களால் இங்கு எல்லா உலகங்களையுஞ் செயித்துவிட்டதாகச் சொன்னான். தேவரிஷிகளும் இன்னும் மற்ற ரிஷிகளும் நிரம்பியிருக்கும் அவ்வுலகங்களை நான் எனது சக்தியால் தங்களுக்குக் கொடுக்கிறேன். தாங்கள் அவைகளைப் பெற்றுக்கொண்டு அவைகளைச் சீதாலக்ஷ்மணர்களோடு அனுபவியுங்கள்" என்று கூறினர். இவ்வாறு சொல்லிய கடோரமான தவத்தை உடையவரும் உண்மையையே உரைப்பவருமான அம்முனிவரைநோக்கி, பிரமதேவரைப் பார்த்துக் காசியபமகரிஷி சொல்லுவதுபோல, ஆத்தும ஞானமடைந்த இராமர் "ஐயா முனிவரே, நானே சுவயமாக அவ்வுலகங்களை எனக்குத் தேடிக்கொள்ளுகிறேன். இப்பொழுது தங்களை நான் இக்கானகத்தில் வசிக்கவேண்டிய ஆச்சிரமத்தை எனக்குக் குறிப்பிக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன். தாங்கள் எல்லாருடைய க்ஷேமத்தையும் நாடியிருப்பவரென்றும், எல்லாப்பிராணிகளிடத்திலும் அன்பும் ஆதரவும் பொருந்தியவரென்றும் மகாத்துமாவாகிய கௌதம சரபங்கர் சொன்னார்" என்றார்.

சுதீக்ஷணரை இருக்க இடம் வினவல்.

அதைக்கேட்டு, உலகம் எங்கும் புகழ்பெற்ற அம்மகரிஷி மிக்க சந்தோஷமடைந்து, வெகு மதுரமான சொற்களால் "இராமா, தங்களுக்கு இதுதான் உத்தமமான ஆச்சிரமம்; தாங்களிவ்விடத்திலேயே வசிக்கவேண்டும்; இவ்விடத்தில் ரிஷிகள் அநேகர் வசித்துக்கொண்டிருக்கிறார்கள். இங்கே காய் கனிகளும் கிழங்குகளும் எப்பொழுதும் நிரம்பி யிருக்கும். ஐயா பெரும்புகழ் பெற்றவரே, இவ்வாச்சிரமத்தில் அநேக மான்கூட்டங்கள் பயமில்லாமல் வந்து

சுதீக்ஷணர் இடம்கூறல்.

துள்ளிவிளையாடி அங்கு மிங்கும் அலேந்து, தவம்புரியும் ரிஷிகளின்மனத்தைத் தங்களுடைய அழகிய சேஷ்டைகளால் கலைத்துப்போடுகின்றன. இப்படி உண்டாகும் பயத்தைத் தவிர வேறொருவிதமான பயமும் இவ்விடத்திலில்லை" என்றுசொல்லினர். இவ்வாறு அம்மகரிஷிசொன்னதை லக்ஷ்மணருக்கு மூத்தவரான இராமர் கேட்டுத் தாம் வெகு தைரியசாலியாகையால் நாண்பூட்டிய தமது வில்லைக் கொஞ்சமிழுத்துப் பாணத்தை அதில் சந்தித்து "ஐயா பெருமைதங்கிய முனிவரே, இடிபோன்ற கூர்மையான எனது பாணங்களால் அவ்வாறு வரும் மான் கூட்டங்களை நான் கொல்லுவேனாகில் அதைப்பார்ப்பதை விடக் கஷ்டம் தங்களுக்கு வேறொன்றுமிராதே. ஆகையால் இந்த ஆச்சிரமத்தில் நான் அதிகமாகத் தங்கமுடியாதுபோலிருக்கிறதே" என்று அம்முனிவரைப் பார்த்துச் சொல்லிவிட்டு, அதன்மேல் தமது சந்தியாவந்தனத்துக்குச் சென்றார். அவர் சாயஞ் சந்தியைச் செய்து முடித்து அவ்வாச்சிரமத்திலேயே சீதாலக்ஷ்மணர்களோடு அன்றிரவு தங்கினர். சந்தியாகாலம்போய் இரவு வந்தவுடன் அப்புருஷசிங்கங்களுக்குச் சுதீக்ஷணமுனிவர் துறவிகள் புசிக்கும் ஆகாரத்தை வெகுசந்தோஷமாகக் கொண்டு வந்து கொடுத்து அவர்களுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளை ஒன்றும் விடாமல் செய்தார்.

---

## எட்டாஞ் சருக்கம்.

*தண்டகாரணியத்திலிருந்த ஆச்சிரமசமூகத்தை இராமர் பார்ப்பதற்காகப் புறப்படுதல்.*

---

இவ்வாறு சுதீக்ஷணமகரிஷியால் நன்றாக உபசரிக்கப்பட்டு இராமரும் லக்ஷ்மணரும் அன்றிரவைச் சுகமாக அவ்வாச்சிரமத்தில் கழித்துக் காலையிலெழுந்தார்கள். அதிகாலையிலெழுந்து தாமரை மலரின் மணம் வீசும் ஜலத்தில்

இராமர் ஸ்நானம் செய்தார். பிறகு அவ்வாச்சிரமத்தில் இராகவர் லக்ஷ்மணரோடுஞ் சீதையோடும் அக்கினி, தேவர்கள், பிதிருக்கள் இவர்களுக்குச் செய்ய வேண்டிய பூசைகளைச் செய்துமுடித்து, உதிக்குஞ் சூரிய பகவானைக்கண்டு அவரை உபாசித்து, அதன்பிறகு சுதீக்ஷணர் உட்கார்ந்திருந்த இடத்துக்கு வந்து அவரைப் பார்த்து "ஐயா பகவானே, தங்களாதரவால் ஒருவிதமான குறைவுமின்றி நேற்றிரவு இங்குச் சுகமாகத் தங்கியிருந்தோம். இப்பொழுது தங்களிடம் விடைபெற்றுப் போக வந்திருக்கிறோம். முனிவர்கள் எங்களை அவசரப்படுத்துகிறார்கள். எங்களுக்கும் அக்கானகத்தில் இருக்கும் ஆச்சிரம சமூகங்களைப் போய்ப் பார்த்துவரும் ஆவலதிகமாக இருக்கிறது. எங்களுக்கும் இவ்விடம் வந்திருக்கும் தண்டகாரணிய வாசிகளாகிய அருந்தவர்களுக்கும் தாங்கள் விடைகொடுத்தனுப்பவேண்டும். தர்மத்தையே எப்பொழுதுங் கைப்பற்றிப் புகையற்ற அனல்போல விளங்கும் இம்முனிவர்கள் உள்பட நாங்கள் விடைபெற்றுக்கொள்கிறோம். கெட்டவழியால் வந்த சம்பத்தை அடைந்து நெறிநீங்கி அலையும் அற்பன்போல் சகிக்கமுடியாத வெயிலால் சூரியபகவான் பிரகாசிக்குமுன் நாங்கள் புறப்படவேண்டும்" என்று சொல்லி இராகவர் சீதாலக்ஷ்மணர்களோடு அம்முனிவரின் பாதங்களில் வணங்கினார். அவ்வாறு வந்தனம் பண்ணிய இராமரை அம்முனிவர் தமது கைகளால் தூக்கி இறுகத்தழுவி "இராமா, தங்களுக்கு எவையேனும் தீங்குகள் வருமாயின் அவைகள் வந்தவழியே போகட்டும். தாங்கள் லக்ஷ்மணரோடும் தங்களுடைய நிழல்போல் தொடரும் சீதையோடும் தண்டகாரணியத்தில் வசிக்கும் முனிவர்களின் அழகான ஆச்சிரமங்களைப் போய்ப்பார்த்து வாருங்கள். தவத்தால் பரிசுத்தமாகப் பண்ணப்பட்ட

இராமர் தண்டகாரணியம்போக விடை பெறல்.

ஆத்துமாவையுடைய இவ்விருஷிகளின் ஆச்சிரமங்களில் பழங்களையும், கிழங்குகளையும், பூத்திருக்குங் காடுகளையும், சாதுவாகத் திரிந்துகொண்டிருக்கும் மான்களையும், வெகு சாந்தகுணமுள்ள பறவைகளையும், புஷ்பித்திருக்குந் தாமரைகளால் விளங்கும் ஓடைகளையும், தெளிந்திருக்கும் ஜலத்தையும், காரண்டக மென்னும் நீர்காக்கைகள் கொஞ்சி விளையாடிக்கொண்டிருக்கும் தடாகங்களையும், ஸரசுகளையும், இன்னும் பார்ப்பதற்கு மிகவும் அழகாகவிருக்கும் அருவிகளையும் தாங்கள் காண்பீர்கள். இவைகளையன்றி மயில்கள் கூவும் வெகு அழகான காடுகளையும் தாங்கள் காணலாம். அப்பா லக்ஷ்மணா, நீயும் போய்வா. இவைகளையெல்லாம் பார்த்துவிட்டு மறுபடி என்னுடைய ஆச்சிரமத்துக்கே தாங்களெல்லாரும் திரும்பிவரவேண்டும்'' என்றனர். இவ்வண்ணம் அம்முனிவர் சொன்னதைக் காகுத்தர் கேட்டு அப்படியே ஆகட்டும் என்று ஒப்புக்கொண்டு லக்ஷ்மணரோடும் சீதையோடும் அவரை வலம் வந்து அவரிடம் விடைபெற்றுப் புறப்பட்டார். அப்பொழுது சீதை அவ்விரு சகோதரர்களுக்கும் அவர்களுடைய அழகான வில்லுகளையும் பாணங்களையும் பளபளவென்று பிரகாசிக்குங் கத்திகளையுங் கொடுத்தாள். உடனே தங்கள் அம்பறாத்தூணிகளை அழகாகக் கட்டி ரீங்காரம்பண்ணும் தங்கள் விற்களைக் கையிலேந்தி அவ்விரு அழகான பாக்கியசாலிகளும் தங்கள் காந்தியால் விளங்கிக்கொண்டு சீதையுடன் அவ்வாச்சிரமத்தைவிட்டுப் புறப்பட்டார்கள்.

---

## ஒன்பதாஞ் சருக்கம்.

*இராக்கதர்களை வதைக்க இராகவர் செய்த பிரதிக்ஞை விஷயமாகச் சீதை செய்துகொண்ட விண்ணப்பம்.*

---

சுதீக்ஷணரிடமிருந்து விடைபெற்றுப் புறப்பட்ட தனது நாயகரைச் சீதைபார்த்து, தான் அவரிடம் வைத்

திருந்த அபிமானத்தால் தன்னுள்ளத்தில் இருந்த சில விஷயங்களைப்பற்றிப் பேச ஆரம்பித்தாள். "தாங்கள் இப்பொழுது மேற்கொண்டிருக்கிற முனி வர்களுடைய தர்மமானது வெகு சூக்ஷ்ம மான வழியால் அடையவேண்டியதாக இருக்கிறது. ஆகையால் அது தன்னிஷ்டப்படி நடப்பதி லிருந்து விலகித் தர்மப்படி நடப்பவர்களுக்குத்தான் கிடைக்கும். இவ்வுலகத்தில் ஒருவன் தன் மனத்தை அதன் போக்குப்படி விட்டுவிடுவதால் விளையுந் துன்பங்கள் மூன்று என்றுசொல்லப்படுகின்றன. இம்மூன்று துன்ப ங்களுள் வெகுகொடியது பொய்பேசுதல்; அதினும் கொடி யவை மற்றையவிரண்டும். அவைகள் பிறர்மனை விழை தல், பகைமையின்றி ஒருவனை வருத்தல் என்பன. என் நாதா, இவைகள் மூன்றினுள் பொய்பேசுதல் என்பது தங்களிடஞ் சிறிதும் இல்லை; இனிமேலு முண்டாகாது. எல்லாவித தருமங்களையும் ஒருநொடியில் அழித்துவிடுவ தாகிய பிறர்மனைவிழைதலென்பது தங்களிடத்தில் கனவி லும் கிடையாது. ஓ மனிதசிரேஷ்ட, தங்களுக்கு இவ்வித மான பாவம் ஒருபொழுதும் எள்ளளவுமில்லை; இனியுண் டாகவும் மாட்டாது. தாங்களெப்பொழுதுந் தங்களுடைய தாரத்தினிடமே சந்தோஷமடைந்துகொண்டு தருமநெறி தவறாது, உண்மையே பேசி, தங்கள் தந்தையிட்ட கட் டளையை நிறைவேற்றுபவர் என்பது நான் நன்றாக அறி வேன். ஐயா, லக்ஷ்மணருக்கு முன்பிறந்த சத்தியமுள்ள வராயும் மகாபாக்கியமுள்ளவராயும் சீமானுயும் இருக்கும் இராகவா, தங்களிடம் சத்தியமுந் தருமமும் எந்நா ளும் நீங்காது நிலைநிற்குமென்பதையும், ஐம்புலன்களையும் நன்றாக அடக்கிய தாங்களே இவ்விரண்டு புண்ணியங்களை யும் தரித்துக்கொண்டிருக்க வல்லவர் என்பதையும் நான் நன்றாக அறிவேன். மூன்றாவது தீமையென்று நான் குறித்த பகைமையின்றி ஒருவனை இம்சித்தலாகிய பாவம்

சீதையின் விண்ணப்பம்.

தங்களை ஒருகால் எங்குவந்து அணுகிவிடுமோ என்ற பயத்திற்கிடம் இப்பொழுது வந்திருக்கிறது. தண்டகாரணியத்தில் வசிக்கும் முனிவர்களைக் காப்பாற்றும்பொருட்டுத் தாங்கள் யுத்தத்தில் ராக்ஷசர்களைக் கொன்றுவிடுகிறேன் என்று அவர்கள்முன் பிரதிக்ஞை பண்ணிக்கொண்டீர்கள். என் வீரரே, இக்காரணத்தினாலே தாங்கள் லக்ஷ்மணருடன் வில்லையும் பாணத்தையும் சித்தம் பண்ணிக்கொண்டு இத்தண்டகையென்ற காட்டுக்கு வந்திருக்கிறீர்கள். இவ்வுறுதியுடன் தாங்களிங்கு வந்திருப்பதையும் தங்கள் மனவலியையும் தங்களுக் கிவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் உண்டாகவேண்டிய புகழையும் யோசித்து யோசித்து என்மனங் கொஞ்சங் குழம்புகிறது. தாங்கள் தண்டகைக்குச் செல்வது என் மனத்திற்கு ஏற்கவில்லை. அதற்கு நான் காரணஞ் சொல்லுகிறேன், சிறிது கேட்கவேண்டும். தாங்களோ தங்கள் கையில் வில்லும் பாணமும் பிடித்துக்கொண்டு தங்கள் தம்பியுடன் இக்காட்டுக்கு வந்திருக்கிறீர்கள். எப்பொழுதாவது இக்காட்டில் தாங்கள் அரக்கர்களைக் கண்டால் அவர்கள்மேல் பாணம் செலுத்தும்படி தோன்றும். அப்படியே தாங்கள் பாணத்தைச் செலுத்திவிடுவீர்கள். ஏனெனில் நெருப்பினயலில் விறகிருப்பதுபோல்தான் க்ஷத்திரியர்கள் கையில் வில்லிருப்பதும். சமீபத்தில்மட்டும் இருந்துவிட்டால் நெருப்பு எப்படி அவ்விறகைக் கொளுத்தாமல் விடாதோ அதுபோல க்ஷத்திரியர்கள் கையில்லும் கிட்டவருங் கொடியவன்மேல் பாணத்தை விடாமலிராது.

கத்தியின் சகவாசத்தால் தவமிழந்த முனிவர் கதை.

முன்னொருகாலத்தில் உண்மை உரைப்பதில் புகழ்பெற்ற நோன்பினராகிய தபசியொருவர் அநேக கொடிய விலங்குகளாலும் பறவைகளாலும் நிரம்பிய ஓர் அரணியத்தில் தவம்புரிந்துகொண் டிருந்தார். அவர் புரிந்துவந்த தவத்தைக்கண்டு இந்திரன் நடுங்கி அத்

தவத்துக்கிடையூறியற்றக் கருதினான். உடனே அவன் ஒரு போர்வீரனுடைய வேஷம் தரித்துத் தனது கையிலொரு கத்தியை ஏந்திக்கொண்டு அவ்வாச்சிரமத்துக்கு வந்து "இக்கத்தியைத் தாங்கள் இவ்வாச்சிரமத்தில் நான்மறுபடி வந்து கேட்கிறவரையில் வைத்திருங்கள்" என்று சொல்லி அம்முனிவரிடங் கபடமாகக் கொடுத்துவிட்டுப் போனான். இவ்வாறு ஒப்பிக்கப்பட்ட கத்தியை அடைந்தபின் அவ்விருஷியும், எங்கு யாராவது கத்தியைத் திருடிக்கொண்டு போய்விடுவார்களோ என்ற பயத்தால், தாம் காட்டில் போய்ச் சஞ்சரிக்கும் வேளைகளிலெல்லாம் அதை எடுத்துக் கொண்டே சஞ்சரித்தனர். தமக்குவேண்டிய கனிகளையுங் கிழங்குகளையும் கொண்டுவர முனிவர் காட்டுக்குப் போகும்பொழுதெல்லாம் அக்கத்தியைத் தம்முடனேயே கொண்டுபோவார். அக்கத்தியின்றி அவர் ஒருபொழுதும் வெளியே போனதேயில்லை. இவ்வண்ணம் நாள் தப்பாமல் அவர் கத்தியுங் கையுமாக எப்பொழுதும் இருந்தமையால் அவர் புத்தி தவத்திலிருந்து கொஞ்சங்கொஞ்சமாக விலகிக் கொடுந்தொழில்களின்மேற் சென்றது. இவ்விதமாக ஆயுதத்துடன் இடைவிடாது பழகிய சம்பந்தத்தால் அவர் தமது தவம் முழுதும் இழந்து கொடிய செயல் செய்யுங் குணமடைந்து நரகத்தில் வீழ்ந்தார். ஆயுதத்தின் பழக்கத்தால் இக்கொடுமை உண்டாயிற்றென்று ஒரு பழங்கதை இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது. தீயின் அருகில் காய்ந்த கட்டை யிருப்பதுபோல்தான் ஒருவன் கையில் ஆயுதமிருப்பதும். நான் தங்களிடம் வைத்திருக்கும் அன்பாலும் மரியாதையாலும் இப்பொழுது இந்தச்சங்கதியைத் தங்களுக்கு நினைப்புமூட்டுகிறேன். தங்களுக்கு நான் புத்தி சொல்ல வந்ததாக ஒருபொழுதும் கருதவேண்டாம். ஆகையால், கையில் விற்பிடித்த தாங்கள் இந்தத் தண்டகையிலிருக்கும் அரக்கர்களை வைரமில்லாமல் ஒருபொழுதுங் கொல்ல எண்ணவே கூடாது. ஐயா என் வீரசிங்

கமே, குற்றமின்றி ஒருபொழுதும் ஒருவரையுங் கொல்லக் கூடாதென்பது என்னெண்ணம். வீரர்களாயிருக்கும் க்ஷத்திரியர்கள், காட்டில் தவம்புரிந்துகொண்டிருக்குந் தப சிகள் ஏதாவது துன்பப்பட்டால் அத்துன்பத்திலிருந்து அவர்களை ரக்ஷிக்கவேண்டுமென்பது நியாயம். ஆயுதத் துக்கும் தவத்துக்கும் எவ்வளவு தூரம்? க்ஷத்திரிய தருமமெங்கே? காடெங்கே? ஆகையால், க்ஷத்திரியர் களாகிய நாம் காட்டில் தவம்புரிந்துகொண்டிருக்கும்பொ ழுது இக்காலத்தில் இவ்விடத்தில் நாம் கொண்டிருக்கும் விரதத்துக்குப் பங்கமின்றி நடந்துகொள்ளவேண்டும். என் நாதரே, ஆயுதப்பயிற்சி செய்துகொண்டு காட்டிலி ருந்தால் நமது புத்தி கெட்டுவிடக்கூடும். ஆகையால் மறு படி அயோத்திக்குப் போயின பின்பு நாம் நமது க்ஷத் திரிய தர்மத்தைப் பரிபாலனம் பண்ணலாம். நாட்டை விட்டுக் காட்டுக்கு வந்திருக்கும் நாம் க்ஷத்திரிய தர்மத் தை ஒழித்துச் சுத்தமான தபசிகள் தர்மத்தை அநுச ரித்து வனவாசத்தைச் செய்தோம் என்பதைக்கேட்டால் எனது மாமியார்களும் மாமனும் சந்தோஷமடைவார் கள். ஆகையால், நாமிப்பொழுது கேவலம் தர்மமொன் றையே செய்துகொண்டிருக்கவேண்டும். தர்மத்தாற்றான் நமக்கு இலாபமுண்டாகும். தர்மத்தாற்றான் நமக்குச் சுகமும் உதிக்கும். தர்மத்தாற்றான் நமக்கு எல்லாம் உண்டாகும். இந்தச்சகமே தர்மத்தின் ஸாரமாக விளங் குகிறது. ஆகையால், அநேகவித நோன்புகளால் சரீரத் தை உலர்த்தி வாட்டி அறிவுள்ளவர்கள் தர்மந் தேடிக் கொள்ளுகிறார்கள். அப்படியல்லாமல் சுகமாக இருந்தால் நமக்குத் தருமத்தின் சுகமெவ்வாறு கிடைக்கும். ஆகை யால், என் அன்பரே, புத்தியை எப்பொழுதும் ஆசாரத் தில் செலுத்தி இத்தபோவனத்தில் தாங்கள் தர்மம் பண் ணுங்கள். இம்மூவுலகத்தினுண்மையையும் தாங்கள் அறிந் தவர்களாயிற்றே. தங்களுக்குத் தெரியாததொன்றுண்

டோ? நானேதோ என் பெண்புத்தியால் கோழைமனத்துடன் சொன்னேன். தங்களுக்குந் தர்மோபதேசம் பண்ண இவ்வுலகத்தில் ஒருவ ருண்டோ? ஆகையால், தாங்களே நன்ருகத் தங்கள் புத்தியைக்கொண்டு யோசித்துப்பார்த்துத் தாங்களும் தங்கள்தம்பியும் என்ன என்ன செய்யவேண்டுமோ அவற்றைத் தாமதமின்றிச் செய்துவாருங்கள்."

## பத்தாஞ் சருக்கம்.

*சரணமென்று தம்மையடைந்த முநிவர்களைக் காப்பாற்றும்பொருட்டு அவர்களுக்கு உபத்திரவம் பண்ணும் அரக்கர்களை வதைப்பதில் தருமவழுவில்லையென்று இராமர் சொல்லுதல்.*

தனது கணவனிடம் அன்புவைத்த சீதை பக்தியுடன் சொன்னசொல்லை இராமர்கேட்டு, தாம் தருமத்தைவிட்டு வழுவாதவராகையால் அவளைநோக்கிச் சொல்லுகிருர்:

இராமர் மறுமொழி.

"என் தேவியே, நீ என்னிடம் வைத்திருக்கும் அன்பிற்குத் தக்கபடி, வெகு அனுகூலமாக எவ்வாறு பேசவேண்டுமோ அவ்வாறே பேசினுய்; ஜனகமகாராஜருடைய மகள் என்பதை நன்ருகக்காட்டி வெகு அழகாக நீ இப்பொழுது தர்மோபதேசம் செய்தாய். சங்கடத்தில் இருப்பவர்களைக் காப்பாற்றவேண்டியதற்காகவே க்ஷத்திரியர்களுக்கு வில் என்ற நினது சொல்லே நீ சொன்னதற்கு மறுமொழி. அதிகமாக வேறென்றுஞ் சொல்லுவதற்கில்லை. சீதே, தண்டகாரணியத்திலிருக்கும் இவ்வருந்தவர்கள் தாங்களாகவே என்னிடம்வந்து தாங்கள் ஏதோ சங்கடத்திலிருப்பதாகச் சொல்லிக்கொண்டு சரணமடைந்தார்கள். அவர்களோ தங்கள் தருமத்தையே எப்பொழுதும் இடைவிடாமல் நடத்திக்கொண்டு காட்டிலிருக்கும் கனிகளையுங் கிழங்குகளையும் புசித்துக்கொண்டு வசிப்பவர்களாகையால் எப்

பொழுதும் கொடிய செயல்களையே செய்துகொண்டுவரும் அரக்கர்களைக்கண்டு பயந்தவர்களாய்ச் சுகமென்பது சிறிதும் இல்லாமல் இருக்கிறுர்கள். காட்டில் அவர்கள் தவம் பண்ணிக்கொண்டிருக்கையிலேயே நரமாமிசத்தின் சுவையறிந்த இராக்கதர்கள் அவர்களைப் புசிக்கிறுர்கள். இவ்வாறு இராக்கதர்களால் புசிக்கப்படும் இந்தத் தண்டகாரணியத்துத் தபசிகள் என்னிடம்வந்து தங்களுக்குக் கருணைபுரியவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். அவர்களிவ்வாறு சொன்ன சொல்லைக்கேட்டு நானவர்களை உபசரித்து அவர்களை நோக்கி "அந்தணர்காள், என்மீது தயைசெய்யுங்கள். எனக்கு மிகவும் வெட்கமாக இருக்கிறது. நான் தங்களைவந்தடைந்து வேண்டிக்கொள்ளவேண்டியவனுகவிருக்கத் தாங்களெல்லோரும் என்னையடைந்து இப்பொழுது வேண்டிக்கொள்வது என்ன" என்று கேட்டேன். அன்றியும், நான்செயற்குரியதேதென்று அவர்கள் அபிப்பிராயத்தை விஞவினேன். அப்பொழுது அவர்களெல்லோரும் ஒன்றுகச் சேர்ந்து "ஓ இராமா, நாங்களிந்தத் தண்டகாரணியத்தில் அனேகவிதமாக மாயவேடங் கொள்ளும் அரக்கர்களால் வெகுவிதமாகச் சங்கடப் பட்டுக்கொண் டிருக்கிறும். அச்சங்கடங்களிலிருந்து தாங்களே எங்களை ரக்ஷிக்கவேண்டும். மாசற்ற இராகவா, அக்கினிஹோத்திர காலங்களிலேயும், தர்சபௌர்ணமாஸ யக்ஞகாலங்களிலேயும் நரமாம்சத்தைப் புசிக்கும் வெகு பலிஷ்டர்களான இவ்வரக்கர்கள் எங்களை நடுங்கவடித்து எங்கள் காரியமொன்றும் நிறைவேறுமல் செய்துவிடுகிறுர்கள். இவ்வாறு அரக்கர்களால் உபத்திரவம் பண்ணப்பட்டு எங்கேபோய் யாரைச் சரணமாக அடைந்து பிழைப்போமென்று வழிதேடிக்கொண்டிருந்த தபசிகளாகிற எங்களுக்குத் தாங்களே ரக்ஷகராக வந்திருக்கிறீர்கள். நாங்களே எங்களுடைய தவத்தின் சக்தியால் எளிதில் இவ்வரக்கர்களை நாசம்பண்ணிவிட வல்ல

வர்களென்று தாங்கள் சொல்லக்கூடும். ஆனால், பலநாள் சிரமப்பட்டு ஈட்டிய தவத்தை இவ்வாறு செலவிட எங்களுக்கு மனம் வரவில்லை. தவமென்பது பலவிதமான இடையூறுகளை உடையது. அத்தவத்தை அவ்வாறு இடையூறுகளுக்குள்ளாக்காமல் செய்து முடிப்பது வெருகஷ்டம். ஆகையாற்றான் இராக்கதர்கள் எங்களைப் புசித்துக்கொண்டிருக்கையிலும் நாங்கள் அவர்களைச் சபிக்காமலிருக்கிறோம். இப்பொழுது தண்டகாரணியத்தில் இருக்கும் இராக்கதர்களால் வரும் சங்கடத்திலிருந்து எங்களைத் தாங்களும் தங்களுடைய தம்பியும் விடுவிக்கவேண்டும். தங்களையன்றி இக்காட்டிலெங்களுக்கு வேறுதலைவர் யார்?" என்றார்கள். நானும் இவ்விதமாக இவர்கள் சொன்ன சொல்லைக் கேட்டு, ஜானகி, தண்டகாரணியத்தில் வசிக்கும் அருந்தவர்களெல்லோருக்கும் ஓரே வாக்காய் 'உங்களெல்லாரையும் காப்பாற்றுகிறேன்' என்று சொல்லி ஒப்புக்கொண்டுவிட்டேன். என்னுயிர் இருக்கிறவரையில் நான்செய்த பிரதிக்ஞையை ஒருபொழுதும் மாற்றமாட்டேன். முநிவர்களுக்கு வாக்களித்தா நான் மாற்றுவேன்? சத்தியத்தின்மேல் நான் வைத்திருக்கும் அபிமானம் உனக்குத் தெரியுமே. ஒருகால் என் பிராணனை அல்லது நின்னை அல்லது லக்ஷ்மணனை விட்டுவிடவேண்டும் என்றாலும் உடனே விட்டுவிடுவேன்; நான் செய்த வாக்குத்தத்தத்தை, அதிலும் அந்தணர்களுக் களித்துவிட்டதை, ஒருபொழுதும் நான் கைவிடேன். வைதேகி, முநிவர்களைக் காப்பாற்றுதலென்பது, அவர்களென்னிடம் வந்து என்னை வேண்டிக்கொள்ளாமலே, நானே சுயமாகச் செய்யவேண்டிய கடமையாகவிருக்கிறது; ஒப்புக்கொண்டபிறகு அது அவசியம் பண்ணியே தீரவேண்டுமென்பது சொல்லவும் வேண்டுமோ? நீ இவ்வளவுதூரம் அன்பாலும் நல்ல எண்ணத்தாலுஞ்

இராமர் தான் சொன்ன சொல் தவறேன் என்றது.

சொன்னசொல்லைக்கேட்டு நான் மிக்கசந்தோஷம் அடைந்தேன். அன்பென்பதிருந்தாற்றான் இவ்வாறு சொல்லத் தோன்றும். அன்பில்லாதவனிடஞ் சொல்லவேண்டியதென்ன இருக்கிறது? நீ சொன்னவைகள் முழுதும் உன் குணத்துக்கொத்தனவாகவும் நீ பிறந்த வம்சத்துக்கும் புகுந்த வம்சத்துக்கும் தகுந்தனவாகவுமிருக்கின்றன; அன்றி என்னுடன்கூட நின்று தருமத்தை நடத்துபவளுக்குத் தக்கதாகவு மிருக்கின்றன. ஆகையால் நீ என் உயிரினும் சிறந்தவளென்று நான் சொல்லவும்வேண்டுமோ?" இவ்வாறு ஜனகருடைய மகளாகிய தனது அன்புள்ள மனைவி சீதையைநோக்கி மகாத்துமாவாகிய இராமர் சொல்லிக் கையில் வில்லை எடுத்துக்கொண்டு லக்ஷ்மணருடன் அநேக அழகான தபோவனங்களின் வழியே சென்றார்.

---

## பதினொன்றாஞ்சருக்கம்.

*அநேக ஆச்சிரமங்களைப் பார்த்துக்கொண்டு சுதீக்ஷணரிடம் இராமர் திரும்பிவந்து அகஸ்தியருடைய ஆச்சிரமத்தைப்பற்றி விசாரித்தலும் அவர் மகிமையை லக்ஷ்மணருக்கெடுத்து உரைத்தலும்.*

---

காட்டிற் செல்லும்பொழுது இராமர் முதலிற் சென்றார்; அவர்பின் மெல்லிய இடையையுடைய சீதை சென்றாள்; அவளுக்குப்பின் ஆயுதபாணியாக லக்ஷ்மணர் சென்றார். சீதையுடன் அவ்விருவர்களும் பற்பல பருவத சிகரங்களையும், காடுகளையும், அழகான பலநதிகளையும், அந்நதிகளின் மணல்திட்டுகளில் கொஞ்சிவிளையாடும் சாரஸம், சக்கரவாகம் முதலிய பறவைகளையும், நன்றாகப்புஷ்பித்து அநேக நீர்ப்பறவைகளையுடையனவாகி விளங்குங் குளங்களையும், இனம் இனமாகச்சேர்ந்து மேய்ந்துகொண்டிருக்கும் புள்ளிமான்களையும், நன்றாகக் கொழுத்துப் பயங்கரமாய்த் திரியுங் கொம்புகளையுடைய காட்டெருமை

களையும், காட்டுப்பன்றிகளையும், மரங்களை அழிக்கும் மத யானைகளையும் பார்த்துக்கொண்டே போனார்கள். வெகு தூரம் வழிநடந்து சூரியன் அஸ்தமனமாகுங் காலத்தில் அவர்கள் ஒருயோசனை விஸ்தாரமுள்ள பெருந் தடாகமொன்று தாமரை முதலிய புஷ்பங்களின் மணம் நிறைந்தும், யானைக்கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்டும், ஜலத்தில் சஞ்சரிக்கும் சாரஸம், அன்னம், காதம்பம் முதலிய நீர்ப்பறவைகள் நிறைந்தும் விளங்கிக்கொண்டிருக்கக் கண்டார்கள். தெளிவான நீரால் நிரம்பிய அழகான அத்தடாகத்தில் பாட்டொலியும் பல்லியங்களினொலியும் கேட்டுக்கொண்டே யிருந்தது. ஆனால் அவ்விடத்தில் யாரும் கண்ணுக்குப் புலப்படவே யில்லை. அதைப் பார்த்து மகாபலம்பொருந்திய இராமரும் லக்ஷ்மணரும் வியப்புற்றார்கள். தங்களுடன் வந்துகொண்டிருந்த முனிவர்களில் ஒருவராகிய தருமபிருதர் என்பவரைப் பார்த்து இராமர் "இவ்வற்புதத்தைக்கேட்டு எங்களெல்லாருக்கும் உண்டான வியப்பு வெகு அதிகமாக விருக்கிறது. இஃது என்ன ஆச்சரியம். இதைத் தாங்கள் சொல்லவேண்டும். இதில் இரகசியமென்பது ஒன்றும் அதிகமாக இல்லாதபக்ஷத்தில் தாங்கள் அகத்தியஞ் சொல்ல வேண்டும்" என்று வினவினர். இவ்வாறு இராமர் தருமாத்துமாவாகிய அம்முனிவரைப்பார்த்துக் கேட்கவே அவர் அத்தடாகத்தின் உற்பத்தியை விவரமாகச்சொல்லத் தொடங்கினார்: "இது எந்நாளும் வற்றாத பஞ்சாப்ஸரஸ் என்ற பெயருள்ள தடாகம். இதை மாண்டகர்ணி என்ற முனிவர் தமது தவத்தின் மகிமையா லுண்டாக்கினர். அம்முனிவர் வாயு பக்ஷணம் பண்ணிக்கொண்டு அதோ தோன்றும் தடாகத்தில் நின்று பதினாயிரம் வருஷம் கடுந்தவம் புரிந்தனர். அதைக்கண்டு அக்கினி முதலான தேவர்களெல்லாரும்

பஞ்சாப்ஸரஸ் என்னும் தடாகம்.

பஞ்சாப்ஸரஸின் உற்பத்தி.

நடுநடுங்கி, ஒன்றாகச்சேர்ந்து தங்களுக்குள்ளேயே 'ஓகோ! இத்தபசி நம்முள் ஒருவர் பதத்தை அடையவன்றோ இவ்வாறு தவம்புரிகிறார்' என்று யோசித்து, வெகுதுயர மடைந்து, அத்தவத்துக்கு ஏதாவது இடையூறு செய்ய வேண்டுமென்று நிச்சயித்தார்கள். உடனே அவர்கள் மண்ணிலியங்கும் மின்னற்கொடிகள்போன்ற வெகு அழகான அப்ஸரஸ்பெண்கள் ஐவரை அம்முநிவருடைய தவத்தைக் கெடுக்கும்படி அனுப்பினார்கள். தேவர்களுடைய காரியசித்தியின்பொருட்டு அம்முநிவரை அந்த அப்ஸரஸ்பெண்கள் மதனவாதைக் குட்படுத்தி அவர்க்கு மனைவியர்களானார்கள். அவர்கள் ஐவர்க்கும் முநிவர் இத்தடாகத்தின் அடியில் வீடுகட்டிவைத்தார். அந்த வீடு இந்தக் குளத்திற்குள் மறைந்திருக்கிறது. தமது தவத்தின் மகிமையாலும் யோகபலத்தாலும் முநிவர் தமது யௌவனத்துக்கு யாதொரு குறைவுமில்லாமல் அம்மனைவிமார்களுடன் இக்குளத்தினடியில் எப்பொழுதும் சுகமாக வாழ்ந்துகொண்டிருக்கிறார். அவர்கள் களித்திடும் சமயங்களில் வாத்தியங்களின் சத்தமும் அவர்களது இனிய பாட்டொலியும் அவர்கள் ஆபரணவோசையும் மனோகரமாகக் கேட்கின்றன" என்று கூறினர். "வெகு ஆச்சரியம்" என்று மிக்க பெருமை பொருந்திய இராமர் அம்முநிவர் சொன்ன சமாசாரத்தைத் தமது தம்பியுடன் கேட்டுக் களித்தார்.

இவ்வாறு கதை சொல்லி முடிய இராமர் தருப்பைகளும் மரவுரிகளும் நிறைந்து பிரமதேஜஸால் விளங்கும் ஆச்சிரமசமூக மொன்றைக் கண்டார். அவர் சீதா லக்ஷ்மணர்களோடு அதனுட் புகுந்து அங்கிருந்த தபசிகளெல்லாராலும் உபசரிக்கப்பட்டு அங்கு வசித்தார். இவ்வாறு தண்டகாரணியத்தில் இருந்த ஆச்சிரம சமூகங்களில் இராமர் சுகமாக ஆங்காங்கு வசித்து அங்கிருந்த

அருந்தவர்களால் பூசிக்கப்பட்டு, மறுபடியும் அவர்களுடைய ஆச்சிரமங்களில் ஒவ்வொன்றிற்கும் போகலானர். மகாவில்லாளியான இராகவர் முதலில் தாம் கொஞ்சநாள் வசித்த ஆச்சிரமங்களுக்கு மறுபடியும் சென்று, சில ஆச்சிரமங்களில் பத்து மாதம், சிலவற்றில் ஒருவருஷம், சிலவிடங்களில் நான்கு மாதம், சில தபோவனங்களில் ஐந்து அல்லது ஆறுமாதம், சிற்சில ஆச்சிரமங்களில் ஒன்றரைமாதம், சிலவாச்சிரமங்களில் அதற் கதிகமானகாலம், சில விடங்களில் மூன்று மாதம், சிலவற்றில் எட்டுமாதம் சுகமாக வசித்தனர். இவ்விதமாக முநிவர்க ளாச்சிரமங்கள்தோறும் ஒருவித குறைவும் உபத்திரவமு மில்லாமல் இராமர் பத்து வருஷகாலம் வசித்தார். பிறகு, அங்கிருந்து திரும்பித் தர்மக்ஞரான இராகவர் மறுபடியும் சுதீக்ஷ்ணருடைய ஆச்சிரமத்துக்கு வந்தார். சத்துருக்களை அடக்கும் வல்லமையுள்ள இராமர் அம்முநிவருடைய ஆச்சிரமத்தை யடைந்து, அவரால் பூசிக்கப்பட்டு, அங்கே சிறிது காலம் வாசம்பண்ணினர். அவ்வண்ணம் அவ்வாச்சிரமத்தில் அவர் வசித்துக்கொண்டிருந்தகாலத்தில், ஒருநாள் சந்தோஷமாக உட்கார்ந்திருந்த சுதீக்ஷ்ணமாமுநிவரை நோக்கி "ஐயா முநிவரே, இக்காட்டில் முநிபுங்கவராகிய அகஸ்தியமா முநிவர் வசிக்கிறரென்பதாக அடிக்கடி தபசிகள் தங்களுக்குள் பேசிக்கொள்வதை நான் கேட்டிருக்கிறேன். இக்காடு வெகு விசாலமாகையால் அவரிருக்குமிடம் எனக்குத் தெரியவில்லை. அம்மகானுடைய ஆச்சிரமம் எங்கே உள்ளது? அகஸ்தியமாமுநிவரைக்கண்டு வணங்கவேண்டுமென்று நான் வெகு ஆசைகொண்டிருக்கிறேன். கொஞ்சக்காலம் அவருக்கு நான் தொண்டு செய்யவேண்டுமென்பது என்கருத்து.

இராமர் தண்டகாரணியத்தில் வசித்த காலம்.

இராமர் அகஸ்தியராச்சிரமம் எங்கென்று விசாரித்தது.

தங்கள் அனுக்கிரகத்தால் நானும் தம்பியும் சீதையும் அவரைக்கண்டு வணங்கவேண்டும்" என்று இராகவர் கூறினர். இவ்விதமாகத் தருமாத்துமாவாகிய இராமர் சொன்னசொல்லைச் சுதீக்ஷ்ணமாமுனிவர் கேட்டு வெகு சந்தோஷமடைந்து பின்வருமாறு சொன்னர்.

சுதீக்ஷணர் அகஸ்தியர் ஆச்சிரமத்திற்கு வழிகூறல்.

"நானும் இதே விஷயத்தை, சீதையுடன் சென்று அகஸ்தியரைத் தாங்கள் தரிசிக்கவேண்டுமென்று, தங்களிடமும் லக்ஷ்மணரிடமும் சொல்லநினைத்திருந்தேன். இதைப்பற்றித் தாங்களே என்னை இப்பொழுது கேட்டது என்ன ஆச்சரியம். ஐயா, அகஸ்தியர் வசிக்கும் ஆச்சிரமத்திற்கு வழியை நான் தங்களுக்குச் சொல்லுகிறேன். இங்கிருந்து நான்கு யோசனைதூரம் தெற்கே சென்றால், அங்கு மகாபெரியவராகிய அகஸ்தியர் தம்பியின் ஆச்சிரமம் காணப்படும். அங்கே பிப்பலிக் காட்டில் கொடிகள் நெருங்கிப் படர்ந்து கிடக்கவும், அநேக புஷ்பங்களும் பழங்களும் நிரம்பிய விருக்ஷங்களில் பலவித பறவைகள் மனோகரமாகச் சப்திக்கவும், நிர்மலமான குளிர்ந்த ஜலம் நிறைந்த தாமரையோடைகள் விளங்கவும், அவ்வோடைகளில் அன்னங்கள், நீர்க்காக்கைகள், சக்கரவாகங்கள் முதலிய பறவைகள் விளையாடவும் காண்பீர்கள். அவ்வாச்சிரமத்தில் ஓரிரவுதங்கி, மறுநாள் காலையிலெழுந்து அக்காட்டின் பக்கமாகவே தென்திசைநோக்கி ஒருயோசனைதூரம் சென்றால், தாங்கள் அகஸ்தியமகரிஷியின் ஆச்சிரமம் போய்ச்சேருவீர்கள். அது வெகுவித விருக்ஷங்களடர்ந்த ரமணீயமான பிரதேசத்திலிருக்கின்றது. அதைத் தாங்களும் லக்ஷ்மணரும் சீதையும் பார்த்தால் வெகுவானந்தம் அடைவீர்கள். பெருமைதங்கிய இராமா, அகஸ்தியமாமுனிவரைப் போய்ப் பார்க்கவேண்டுமென்று தங்கள் மனத்தில் தோன்றினல் இன்றைக்கே தாங்கள் அவ்விடத்துக்குப் புறப்படலாம்" என்று

சுதீக்ஷண முனிவர் சொன்னதை இராமர் கேட்டு உடனே எழுந்து அம்முனிவரை வணங்கி லக்ஷ்மணரோடும் சீதையோடும் அகஸ்தியமாமுனிவருடைய ஆச்சிரமத்துக்குப் புறப்பட்டார். சுதீக்ஷணர் சொன்னவழியே அழகான அநேக காடுகளையும், மேகங்கள்போன்ற அநேக மலைகளையும், ஆங்காங்கு வழியிலிருந்த அநேக ஆறுகளையும், ஓடைகளையும் பார்த்து மகிழ்ந்துகொண்டு அவர்கள் சுகமாக வழிநடந்தார்கள். அப்பொழுது வெகு சந்தோஷமாகத் தனது தம்பியைப்பார்த்து இராமர் சொன்னார்: "இதோ நாம் காண்கிறோமே, இந்த ஆச்சிரமந்தான் வெகு புண்ணியங்களைப் பண்ணிக்கொண்டிருக்கும் மகாத்துமாவாகிய அகஸ்தியர் தம்பியினுடைய ஆச்சிரமம்; இது நிச்சயம். பழங்களின் பாரத்தாலும் புஷ்பங்களின் பாரத்தாலும் வளைந்து ஆயிரக்கணக்காக இவ்வழியில் நிற்கும் விருக்ஷங்கள் நான்கேட்டபடி அவ்வாச்சிரமத்தின் அடையாளங்களாகும். பழுத்த பிப்பலியினுடைய வாசனையால் காட்டிலிருந்து அடிக்கும்காற்றுக் காரமாக இருக்கிறது. ஆங்காங்கு அடுக்கிவைக்கப்பட்ட கட்டைக் குவியல்கள் காணப்படுகின்றன. அன்றியும், கிள்ளப்பட்ட தருப்பைகள் வைடூரியம்போலப்பிரகாசிக்கின்றன. அதோ கார்மேகத்தின் சிகரம் போல் கிளம்பிக்கொண்டிருக்கும் புகை இக்காட்டிலிருக்கும் ஆச்சிரமத்தில் மூட்டப்பட்ட நெருப்பின் புகையாகவேண்டும். அங்கங்கே தீர்த்த கட்டங்களில் ஸ்நானம் பண்ணிவிட்டு அந்தணர்கள் அநேகர் தனித்தனியாகத் தாங்களே பறித்துவந்த புஷ்பங்களினால் பூஜை செய்துகொண் டிருக்கிறார்கள். சுதீக்ஷணர் சொன்ன அடையாளங்களினால் இது நிச்சயமாக அகஸ்தியமுனிவரின் தம்பியினுடைய ஆச்சிரமமாகத்தான் இருக்கவேண்டும். அம்மகானாகிய அகஸ்தியர்

இராமர் அகஸ்தியர் ஆச்சிரமம் செல்லல்.

அகஸ்தியர் தம்பியின் ஆச்சிரமம்.

தான் இவ்வுலகத்துக்கு நன்மைசெயயும்பொருட்டு இங்கிருந்த யமனுடைய உபத்திரவத்தை நீக்கி இத்தென் திசையையும் சுகமாக வசிக்கும்படியான திசையாகத் தமது தவவலிமையால் செய்துவைத்தார். முன்னொரு காலத்தில் இவ்விடத்திற்றான் இல்வலன் வாதாபி என்ற இரண்டு அசுரர்கள், சகோதரர்கள், பிராமண வதைசெய்பவர்கள், வசித்தார்கள். அவர்களுள் இல்வலன் என்ற அசுரன் பிராமண வேஷம் பூண்டு, ஸம்ஸ்கிருத பாஷை பேசிக்கொண்டு, கொஞ்சங்கூடத் தயை யில்லாமல், வழியில் போகும் பிராமணர்களைச் சிராத்தத்திற்கு வந்து புசித்துப்போக அழைப்பான். அவர்கள் அதற்கு ஒப்புக்கொண்டவுடன் அவன் தன் தம்பியை ஒரு ஆடாக மாற்றி அவ்வாட்டைப் பிடித்துச் சமையல்செய்து மந்திரப்பிரகாரம் சிராத்தம் பண்ணி, வந்த அந்தணர்களுக்குச் சிராத்தபோஜனம் அளிப்பான். அதை அவர்கள் திருப்தியாகப் புசித்து உட்கார்ந் திருக்கையில், இல்வலன் பெருங்குரலிட்டு "அடே வாதாபீ, ஓடிவா சீக்கிரம்" என்று கூப்பிடுவான். அவ்வாறு கூப்பிடுந் தனது தமையன் குரல்கேட்ட வாதாபி ஆடுபோலக் கத்திக்கொண்டு அந்தணர்களுடைய வயிற்றைப் பீறிக்கொண்டு புறப்பட்டுத் தனதுருவம் எடுத்துவந்து நிற்பான். இவ்விதமாகக் காமரூபிகளாகிற இப்பிசிதவூணர்களால் ஆயிரக்கணக்கான அந்தணர்கள் இவ்விடத்தில் கொலைசெய்யப் பட்டார்கள். இப்படி நடந்துகொண்டிருந்தகாலத்தில் உலகத்தை இவ்வுபத்திரவத்திலிருந்து நீக்கத் தேவர்கள் அகஸ்தியரைப் பிரார்த்தித்தார்கள் அப்பொழுது அகஸ்தியர், ஒருநாள் இல்வலனுடைய சிராத்தத்தில் சாப்பிடுவதாக ஒப்புக்கொண்டு, தம்மிலையில் போடப்பட்ட வாதாபியைப் புசித்துவிட்டார். 'எல்லாந் தங்களிஷ்டப்படி புசித்தீர்களா' என்று அசுரன்கேட்க, முநிவரும் அப்படியே புசித்தாய்

இல்வலன் வாதாபிகதை.

விட்டதென்றார். அவ்வாறு அவர் திருப்தியடைந்ததற் கடையாளமாகச் சாஸ்திரப்படி இல்வலன் அவர் கையில் கொஞ்சம் தீர்த்தம் வார்த்தான். எல்லாம் முடிந்தபின் தனது வழக்கப்படி இல்வலன் 'வாதாபீ, ஓடிவாசீக்கிரம்' என்று கூப்பிட்டான். அவ்வாறு கூப்பிடுங் கொடிய பிரமஹத்தி பண்ணிவரும் அசுரனைப்பார்த்து, புத்திமானாகிய முனிவர்களுக்குள் உத்தமரான அகஸ்தியமுனிவர் சிரித்து 'யான் உண்டுவிட்ட ராக்ஷஸன் எங்கிருந்து திரும்பிவரப்போகிறான்? ஆட்டுருவங்கொண்ட உன் தம்பி முன்னரே யமன்வீடு சென்றுவிட்டான்' என்று சொன்னார். இவ்வாறு தன்தம்பி நாசமடைந்துவிட்டதாக முனிவர் சொன்னசொல்லை அவ்வசுரன் கேட்டு வெகு கோபங்கொண்டு அவரை எதிர்க்க ஆரம்பித்தான். அவரை ஓரேயடியாக அடித்துவிடக் கருதி அவன் அவரைநோக்கி ஓடினான்.

இல்வலன் வதை.

அக்கினிபோல் விளங்கிக்கொண் டிருக்கும் அம்முனிவர் தமது அக்கினிக்கொப்பான கண்ணால் அவனை ஒரு நொடியில் எரித்துவிட்டார். இவ்வாறு எவரொருவர், தாம் பிராமணர்கள்மேல் வைத்திருந்த அருளால், இவ்வித அசாத்தியமான காரியம் பண்ணினாரோ அப்படிப்பட்டவருடைய தம்பியின் ஆச்சிரமம் இதோ தடாகங்களும் சோலைகளும் செறிந்து விளங்குவது." இவ்வண்ணம் இராமர் லக்ஷ்மணரிடஞ் சொல்லிக்கொண் டிருக்கும்பொழுது சூரியன் அஸ்தமனமாயினான். உடனே சந்தியா காலமும் வந்தது. இராமர் தம்தம்பியுடன் சாஸ்திரப்பிரகாரம் சாயம்சந்தியை உபாசித்து ஆச்சிரமத்துள் புகுந்து முனிவரை வணங்கினார். முனிவரால் நன்றாக உபசரிக்கப்பட்டுப் பழங்களையும் கிழங்குகளையும் புசித்து இராமர் அவ்விடத்தில் அவ்விரவைக் கழித்தார். அவ்விரவு கழிந்து சூரியன் உதயமானவுடன், இராகவர் அகஸ்தியருடைய தம்பியினிடம் விடைப்பெறச் சென்று "பகவானே, நான்

தங்களை வணங்குகிறேன். தங்களாச்சிரமத்தில் சுகமாக நாளிரவைக் கழித்தேன். இனி எங்களுக்கு விடைகொடுக்க வேண்டும். தங்களுடைய தமையனாரைப் பார்க்கப்போக வேண்டும்" என்றார். "போய்வாருங்கள்" என்று முனிவர் சொல்ல, இராமர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, குறிக்கப்பட்ட வழியே நடந்தார். கடம்பு, பலா, ஆச்சா, வேங்கை, மகிழ், தவம், சிரிவில்வம், இருப்பை, வில்வம், திந்துகம் முதலான மரங்கள் வழிகளிலெல்லாம் நன்றாகப் பூத்தும் பூங்கொத்துக்கள் நிறைந்த கொடிகள் படரப்பெற்றும் நிற்கவும், அநேக காட்டுமரங்கள் யானைத்துதிக்கைகளால் கசக்கப்பட்டும், வானரக்கூட்டங்களால் விளக்கமுற்றும் மதர்த்த பறவைக்கூட்டங்கள் உல்லாசமாக உட்கார்ந்து கூவப்பெற்றும் நிற்கவும் இராமர் கண்டார். தம்மைப் பின்தொடர்ந்துவரும் நன்மையை விருத்திசெய்பவராகிய லக்ஷ்மணரைப்பார்த்து இராமர் "லக்ஷ்மணா, இவ்விடத்தில் விருக்ஷங்கள் அடர்ந்து பசேலென்று தழைத்திருக்கின்றன. மிருகங்களும் பறவைகளும் பழகினவைகள்போல வெகுசாதுவாக இருக்கின்றன. ஆகையால், பரிசுத்தமான ஆத்துமாவையுடைய அகஸ்தியரது ஆச்சிரமம் சமீபத்தில் உளதுபோலும். களைத்தவர்கள் இளைப்பைப் போக்கும் இந்த ஆச்சிரமம் தம்முடைய செயல்களினால் அகஸ்தியர் என்ற பெயர் பெற்று உலகத்தில் புகழ்படைத்த மாமுனிவருடைய ஆச்சிரமமாகத்தான் இருக்கவேண்டும். அது ஓமாக்கினியின் புகை மேலெழும்ப, மரவுரிகளும் மாலைகளும் அழகுசெய்ய, சாந்தமான அநேக மானினங்கள் நிற்க, பலவித பறவைகள் சத்திக்க விளங்குகின்றது. எவரொருவருடைய மகிமையால் இன்றைக்கு அரக்கர்கள் இந்தத் தென்திசையைக் கண்ணெடுத்துப்பார்த்து உட்புக நடுங்குகிறார்களோ அம்முனிவருடைய ஆச்சிரமமது. மகா புண்ணியசாலியாகிய அவர் இந்தத் திசைக்கு வந்ததுமுதல் இத்திசையில் ராக்ஷ

அகஸ்தியர் ஆச்சிரமம்.

சர்கள் தங்கள் பகைமை நீங்கிச் சாந்தமுள்ளவர்களாய்விட்டார்கள். அவர் பெயரைக்கொண்டே இத்தென்திசையும் அகஸ்தியர் திசையென்று வெகு சாந்தமான பெயர் பெற்று மூவுலகத்திலும் பிரசித்தி அடைந்து கொடியவர்கள் அஞ்சும் திசையாய் விளங்குகிறது. வணக்கமுடைய அநேக ஜனங்களால் அடையப்பட்ட இப்புண்ணியாச்சிரமம் சூரியன் செல்லும் வழியை மறிக்கக்கிளம்பின விந்திய பருவதம் தமது உத்தரவுக்குள்ளடங்கி வளராமல் அப்படியே நின்று கொண்டிருக்கச்செய்து உலகத்தில் கீர்த்தி பெற்ற, தீர்க்காயுளையுடைய அகஸ்தியமாமுனிவருடையது. அவர் எப்பொழுதும் சாதுக்கள் க்ஷேமத்தையே கருதுபவர்; உலகத்தா ரெல்லாராலும் ஆராதிக்கப்படுபவர். நாம் அவரைக் கண்டால் நமக்கும் அவர் நன்மையையே பண்ணிவைப்பார். நான் இவ்விடத்தில் அகஸ்திய மாமுனிவரை வணங்குவேன். நான் செய்யவேண்டிய வனவாசத்தில் எஞ்சிநிற்கும் நாட்களை இவ்விடத்திலேயே கழிப்பேன். இவ்விடத்திற்றான் எப்பொழுதும் நியதமான ஆகாரம் பண்ணிக்கொண்டிருக்கும் அகஸ்தியமுனிவரைத் தேவர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், மற்றுமநேக முனிவர்கள் எல்லாரும் உபாசித்துவருகிறார்கள். இவ்விடத்தில் பொய்யுரைப்போன், கொடியவன், இம்சிக்கிறவன், மனம் போன வழியே செல்லும் கெட்ட நடக்கை யுள்ளவன் ஒருவனும் வாசம்பண்ண முடியாது. ஏனெனில் இம்முனிவர் மிக்க சக்தியுள்ளவர். இவ்விடத்தில் தேவர், இயக்கர், நாகர், பதகர் எல்லாரும் நியதமான ஆகாரம் பண்ணிக்கொண்டு தர்மத்தை ஆராதித்துக்கொண்டிருக்கிறார்கள். இவ்விடத்தில், மகாத்துமாக்களாகிய சித்தர்கள் தங்கள் உடம்பை ஒழித்துவிட்டுச் சூரியனுக் கொப்பான விமானத்தில் ஏறிக்கொண்டு சுவர்க்கலோகம் போகிறார்கள். நல்ல கருமங்களினால் ஆராதிக்கிற பிராணிகளுக்குத் தேவர்கள் இயக்கபதவியையும், தேவபதவியை

யும், அநேகவித ராச்சியங்களையும் இவ்விடத்தில் கொடுக்கிறார்கள். அப்பா லக்ஷ்மணா, நாம் இதோ அகஸ்தியமா முனிவருடைய ஆச்சிரமத்துக்கு வந்துவிட்டோம். நீ முன்னேபோய் நான் சீதையுடன் இங்கு வந்திருப்பதாக மகரிஷிக்குத் தெரியப்பண்ணு" என்று கூறினர்.

---

## பன்னிரண்டாஞ்சருக்கம்.

*இராமர் அகஸ்தியரைச் சந்தித்து அவரிடமிருந்து விஷ்ணுபாணம், வாள் முதலியவைகள் பெறுதல்.*

---

இராகவருடைய தம்பியாகிய லக்ஷ்மணர் அவ்வாச்சிரமத்துள் புகுந்து அங்கிருந்த அகஸ்தியமுனிவரின் சிஷர்களி லொருவரைக் கண்டு அவரிடம் பின்வருமாறு கூறினர்:—

லக்ஷ்மணர் அகஸ்தியருக்கு இராமர் வரவு தெரிவித்தல்.

"தசரதரென்னும் மன்னவரொருவரிருந்தார். அவருடைய மூத்தகுமாரராகிய பலசாலியான இராமர் அகஸ்திய மாமுனிவரைப் பார்ப்பதற்காகத் தமது மனைவி சீதையுடன் வந்திருக்கிறார். அவருடைய தம்பி நான்; லக்ஷ்மணன் என்பது என்பெயர்; எப்பொழுதும் அவரிடம் பக்திவைத்து அவரது நன்மையே நாடி நடப்பவன். எங்களைப்பற்றி நீங்கள் கேள்வியுற்றிருக்கலாம். நாங்கள் இப்பொழுது எங்கள் தந்தையின் கட்டளையால் இந்தப் பயங்கரமான வனத்துக்கு வந்திருக்கிறோம். நாங்கள் அம்மகானைப் பார்க்க விரும்புகிறோம். அதைத் தாங்கள் அவரிடந் தெரியப்படுத்தவேண்டும்." அத்தபசி லக்ஷ்மணர் சொன்ன சொல்லைக் கேட்டு அப்படியே யாகட்டுமென்று சொல்லி அச் சங்கதியை அகஸ்திய மாமுனிவரிடந் தெரிவிக்கும்பொருட்டு அவரிருந்த அக்கி

ணிஹோத்திர சாலேக்குள் புகுந்தார். அங்கே சென்று தமது தவத்தின் மகிமையால் உவமை நீங்கியொளிரும் அகஸ்தியமாமுநிவரை அச்சீஷர் கண்டு இராமர் வந்திருப்பதாகத் தமக்கு லக்ஷ்மணர் உரைத்ததைத்தெரிவித்து "தசரதருடைய புத்திரர்களாகிய இராமலக்ஷ்மணர்கள் சீதாதேவியுடன் இந்த ஆச்சிரமத்துக்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் தங்களைத் தரிசித்துத் தங்களுக்குத் தொண்டு செய்ய விரும்புகிறார்கள். இனிமேல் நான் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்பதைக் கட்டளையிடக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று விண்ணப்பஞ் செய்தார். இவ்விதமாக இராமரும் லக்ஷ்மணரும் சீதையும் வந்திருப்பதாகச் சிஷ்யர்மூலமாகக் கேட்ட அகஸ்தியமாமுநிவர் அவரைப் பார்த்து "நெடுநாளாளும் இராமர் என்னைப் பாக்கவந்தது நன்று. நான் என் மனத்தில் அவர்என்னிடம் வரவேண்டுமென்று கருதினேன். சீக்கிரம் நீ சென்று இராமரை அவர்மனைவியோடும் லக்ஷ்மணரோடும் அவரவர்களுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளைச் செய்து என் முன் அழைத்துவா. என்னை வந்துகேட்பதற்கு முன்னரேயே ஏன் நீ அவர்களை அழைத்துவந்திருக்கக் கூடாது" என்றார்.

அகஸ்தியர் இராமரை அழைத்தல்.

இவ்வண்ணம் அந்த மகாத்துமாவும் தர்மக்ஞருமான முநிவர் உத்தரவுசெய்ய, சிஷ்யர் "அப்படியே யாகட்டும்" என்று கைகூப்பிப் பணிந்து விரைந்து வெளியில் வந்து லக்ஷ்மணரைக்கண்டு "இராமர் எங்கே? சீக்கிரம் முநிவரைப்பார்க்க வரலாம்" என்றனர். உடனே அந்தச் சீஷரை அழைத்துக்கொண்டு லக்ஷ்மணர் அவ்வாச்சிரமத்தின் வாயிலிற்சென்று, அங்கிருந்த இராமரையும் சீதையையும் அவருக்குக் காண்பித்தார். இராமரைக்கண்டவுடன் அச்சீஷர் வெகு வணக்கமாக அகஸ்தியமாமுனிவர் சொன்ன சமாசாரத்தைத் தெரிவித்து எவ்வித மரியாதை

களுக்கும் யோக்கியராகிய இராமரைத் தக்கபடி உபசரித்து ஆச்சிரமத்துக்குள் அழைத்துக்கொண்டு போனார். இராமர் சீதாலக்ஷ்மணர்களோடு, மிக்க சாந்தமான மான்கூட்டங்கள் நிரம்பியுள்ள அவ்வாச்சிரமத்தின் அழகைப் பார்த்துக்கொண்டு அதனுட் புகுந்தார். அவ்விடத்தில் இராமர் அம்முநிவருடைய தேவபூஜாகிரகத்தில் நுழைந்து அங்கே பிரமதேவரைப் பூசைசெய்யுமிடம், அக்கினியினிடம், விஷ்ணுவினிடம், மஹேந்திரனிடம், சூரியனினிடம், சந்திரனினிடம், சிவபூஜை பண்ணுமிடம், குபேரனினிடம், தாதாவினிடம், விதாதாவினிடம், வாயுவினிடம், ஸர்ப்பராஜனுகிய ஆதிசேஷனினிடம், காயத்திரியினிடம், வசுக்களினிடம், கையில்பாசம்பிடித்த வருணனினிடம், சுப்பிரமணியரினிடம், தர்மதேவதையினிடம் ஆகிய எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டுபோனார். இப்படி அவர் சென்றுகொண்டிருக்கும்பொழுது தமது சிஷ்யகூட்டங்கள் சூழ அகஸ்தியமாமுநிவரும் இராமரைப் பார்க்க எதிர்வந்தார். ஜ்வலிக்குங்காந்தியால் விளங்கும் முநிவர் முநிவர்களுக்கு முதலில் வர இராமர் கண்டார். உடனே அவர், திருவளர்க்கும் தமது தம்பியாகிய லக்ஷ்மணரைப்பார்த்து "அப்பா லக்ஷ்மணு, முக்காலங்களையும் உணர்ந்த அகஸ்தியமாமுநிவர் அதோ வருகிறார். அவரிடம் விளங்கும் காம்பீர்யத்தாலேயே தவத்துக்கே அவரிருப்பிடம் என்று நான் நினைக்கிறேன்" என்றார். சூரியன்போலத் தமது காந்தியால் விளங்கும் அகஸ்திய முநிவரைக்குறித்து லக்ஷ்மணரிடம் இவ்வண்ணஞ்சொல்லி, அவரைக் கண்டதால் வெகுசந்தோஷம் அடைந்தவராகி, இராமர் அவர் பாதங்களில் வணங்கினார். தமது மனைவி சீதையுடனும், தம் தம்பி லக்ஷ்மணருடனும், இராமர் முநிவரைப் பணிந்து எழுந்து கைகூப்பி வணங்கி நின்றார். அகஸ்தியர் அப்பொழுது இராமரை ஆனந்தத்தால்

இராமர் அகஸ்தியர் ஆச்சிரமத்துள் நுழைதல்.

இறுகத் தழுவி, தீர்த்தமும் ஆசனமும் கொடுத்து மரியாதை செய்து, நல்வரவு கூறினர். இராமர் உட்கார்ந்தவுடன் அகஸ்தியர் தமது வைஸ்வதேவம் முதலிய கிரியைகளைச் செய்து முடித்து, இராமாதிகளுக்கு அர்க்கியங்கொடுத்து, ஆசமனீயம் புஷ்பம் முதலியவைகளால் அவர்களுக்கு அதிதிபூஜை செய்து, வானப்பிரஸ்தாச்சிரம விதிப் பிரகாரம் அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய கந்தமூலங்களாகிற போஜனத்தைக் கொடுத்தார். பிறகு, முனிவர் முதலில் உட்கார்ந்துகொண்டு, கைகூப்பி உட்கார்ந்த, எல்லாத் தருமங்களையுமறிந்த இராமரைப்பார்த்து "ஓ காகுத்த, தபசி தனது அக்கினிகாரியங்களைச் செய்து முடித்து அதிதியை அர்க்கியங்கொண்டு உபசரிக்கவேண்டும். அப்படிச் செய்யாவிடில் அத்தபசி அடுத்த உலகத்தில் பொய்ச்சாட்சி சொன்னவன்போல் தனது மாமிசத்தைத் தானே புசிப்பான். எவ்வுலகத்துக்கும் அரசராய், தருமவானய், மஹாரதராய், எல்லாராலும் வணங்கவும் சம்மானிக்கவும் தக்கவராய் உள்ள தாங்கள் எனக்குப் பிரியமான அதிதியல்லவா" என்றுசொல்லி, தன்னன்பிற்கிசையப் பழங்களாலும் கிழங்குகளாலும் புஷ்பங்களாலும் இன்னும் மற்றவைகளாலும் இராகவரை உபசரித்து மறுபடியும் அவரைநோக்கிச் சொல்லுவாராயினர்: "ஓ புருஷசிரேஷ்டரே, இதோ வெகு பெரியதாகப் பொன்னும் மணியும் இழைக்கப்பட்டுக் காணப்படுகிற இந்தத் திவ்ய தனுசு விஷ்ணுவினுடையது; விசுவகர்மாவால் இயற்றப்பட்டது. ஒருபொழுதும் தவறுதலில்லாத சூரியன்போல் பிரகாசிக்கும் இந்தப்பாணம் அஸ்திரங்களுக்குள் உத்தமமானது; பிரமதேவரால் கொடுக்கப்பட்டது. இவைகளையன்றி என்றும் குன்றுத கொழுந்துவிட்டெரியும் அக்கினி

(அகஸ்தியர் இராமருக்கு அதிதிபூசை செய்தல்.)

(அகஸ்தியர் இராமருக்கு ஆயுதம் கொடுத்தல்.)

போல் விளங்கிக்கொண்டிருக்கும் பாணங்களால் நிரம்பிய இரண்டு அம்பறுத்தூணிகளும் என்னிடம் இருக்கின்றன. இவைகள் எனக்கு இந்திரனால் கொடுக்கப்பட்டன. இன்னும் தங்கப்பிடிபோட்டுத் பொற்கூட்டில் வைக்கப் பட்டிருக்கும் வாளொன்று இதோ இருக்கிறது. இந்தத் தனுசைக்கொண்டுதான் விஷ்ணுபகவான் அசுரர்களை யெல்லாம் போரில் வெற்றிகொண்டு தேவர்களுடைய பெரும்பாக்கியம் என்றென்றைக்கும் கேடின்றி விளங்கும் படி வைத்தார். இந்த வில், இந்த அம்பறுத்தூணி, இந்த அஸ்திரம், இந்த வாள், இவைகளைத் தாங்கள், இந்திரன் வச்சிராயுதத்தைக் கைப்பற்றுவதுபோல், வெற் றியடையும் பொருட்டுக் கைப்பற்றுங்கள்.'' இவ்வண் ணஞ் சொல்லி, முக்காலங்களையு மறிந்த, மகாகாந்தியால் விளங்கும் அகஸ்தியமுனிவர் அவ்வுத்தமமான ஆயுதங்க ளெல்லாவற்றையும் இராமருக்களித்து மறுபடியும் அவ ரைப் பார்த்துப் பின்வருமாறு மொழிந்தார்.

---

## பதின்மூன்றுஞ்சருக்கம்.

இராமர் பஞ்சவடிக்குப் புறப்படுதல்.

---

"ஓ இராமா, தங்களைக்கண்டு நான் மிக்க சந்தோஷ மடைந்தேன். தங்களுக்கு க்ஷேம முண்டாகக்கடவது. லக்ஷ்மணா, உங்கள் வரவாலும் நான் மிகக் களித் தேன். என்னை வணங்கவேண்டுமென்றே நீங்கள் சீதையுடன் இவ்விடத்துக்கு எவ்வளவு சிரமப்பட்டு வந்தீர்கள். நீங்களெல்லாரும் வெகு தூரத்திலிருந்து நடந்து வந்தபடியால் உங்களுக்கு வெகு சிரமமா யிருக் கும். ஜனகமகாராஜாவின் திருமகளான சீதை கொஞ்ச மிளைப்பாற விருப்பப்படுவதாகத் தோற்றுகிறது. இவள் வெகு சிறு பெண்; போதெனப்பொலியும் மேனியு

டையள்; கஷ்டத்தையறியாதவள்; கணவன்மேல் வைத்த அன்பால் தூண்டப்பட்டுத் துன்பங்கள் நிரம்பியிருக்கும் இக்காட்டுக்கு வந்திருக்கின்றாள். இவள் தங்களைக் காட்டுக்குத் தொடர்ந்துவந்ததனால் மாதர்களுக்கு அசாத்திய மான காரியத்தைச் செய்கிறாள். ஆகையால், இராமா, அவள் சந்தோஷத்திற்கு ஒருவித குறைவுமில்லாதபடி தாங்கள் நடந்துகொள்ளவேண்டும். உலகமுண்டான காலம்முதல், விசேஷமாக மாதர்கள் தங்கள் கணவர்கள் நல்ல ஸ்திதியிலிருக்கும் வரையில் அவர்களிடம் சந்தோஷமாகவிருந்து, அவர்கள் தளர்வெய்திய காலத்து அவர்களைக் கைவிடுகிறார்கள். மின்னலின் நிலையாமை, ஆயுதங்களின் கூர்மை, கருடாநிலர்களின் வேகம், இம்மூன்று குணங்களும் மாதர்களிடம் ஒருங்கே சேர்ந்திருப்பதால், அவர்கள் தங்கள் புருஷர்கள் கஷ்டப்படுங்காலத்தில் அவர்களை விட்டு நீங்குவார்கள். ஆனால், தமது மனைவியாகிய சீதையோ, இவ்வித தோஷங்களொன்றுமில்லாமல் விளங்குகிறாள்; அருந்ததீ தேவிபோலப் பலவித உத்தம குணங்கள் பொருந்தி, எல்லாராலும் புகழப்பட்டவளாக இருக்கிறாள். சத்துருக்களை அடக்கும் பராக்கிரமமுள்ள இராமா, தாங்களும் லக்ஷ்மணரும் சீதையும் இங்கு வந்தபடியால் இந்தப்பிரதேசம் மிக்க அழகைப்பெற்று விளங்குகிறது." இவ்வண்ணம் அகஸ்தியமாமுநிவர் சொல்ல இராகவர் அஞ்சலிசெய்து கொழுந்துவிட்டெரியும் அக்கினி போலப் பிரகாசித்துக்கொண் டிருந்த அம்முநிவரைப் பார்த்து "ஐயா, முநிபுங்கவராகிய தாங்களே என்னிடத்தும், என் தம்பி, என் மனைவி, இவர்களிடத்தும் இருக்குங் குணங்களைக்கண்டு வியந்ததனால் நானின்றுமுதல் வெகு பாக்கியமும் அனுக்கிரகமும் பெற்றவனானேன். தாங்கள் இப்பொழுது நான் பர்ணசாலை கட்டிக்கொண்டு சுகமாக வசிக்கத்தக்கதான நல்ல நீர்வளமுள்ளதும் அழகான காடடர்ந்

இராமர் வசிக்க இடம் வினவல்.

ததும் ஆகிய ஓரிடத்தை அருளிச்செய்யவேண்டும்" என்றனர். இவ்விதமாக இராமர் சொன்னதைக்கேட்ட முனிவர்களுக்குள் உத்தமரும் தர்மாத்துமாவுமான அகஸ்தியர் கொஞ்சநேரம் யோசித்து, வெகு பிரியமாக "இங்கிருந்து இரண்டுயோசனைதூரத்தில், அநேக பலமூலங்கள் நிரம்பி, பற்பல மான்கள் கொஞ்சிவிளையாடும் பஞ்சவடி என்று பெயர்போன ஒரு அழகான பிரதேசம் இருக்கிறது. அங்கே போய் அவ்விடத்தில் ஓர் ஆச்சிரமபதத்தை ஏற்பாடு செய்துகொண்டு லக்ஷ்மணரோடு வெகு சுகமாகப் பிதிர்வாக்கிய பரிபாலனம் பண்ணிக்கொண்டு வாசஞ்செய்க. தசரதமன்னர் தாங்கள் அரணியவாசம் பண்ணவேண்டுமென்று குறிப்பிட்டகாலம் அநேகமாய்க் கழிந்துவிட்டது. வெகுசீக்கிரமாக மற்றைக் காலமும் கழிந்தவுடன் விரதத்தை முடித்துக்கொண்டு தாங்கள் தங்கள் இராச்சியத்துக்குச் சென்று வாழலாம். இராமா, மன்னவராகிய தங்கள் தந்தை ஒருவரே வெகுபாக்கியசாலி. யயாதிமகாராஜா பாக்கியம் பெற்றதுபோல் தசரதரும் மூத்தகுமாரராகிய தங்களால் தாம் அளித்தவாக்கை நிறைவேற்றிக்கொண்டார். தங்களையும் தசரதரையும்பற்றிய இந்த விருத்தாந்தங்கள் யாவற்றையும் என் தவத்தின்மகிமையாலும் சினேகத்தாலும் நான் நன்றுயறிவேன். தாங்கள் இவ்விடமே என்னுடன் இந்த ஆச்சிரமத்தில் இருப்பதாகச் சொன்னபோதிலுந் தங்கள் மனத்தின் கருத்தை நான் எனது தவத்தின் மகிமையால் நன்றாக அறிவேனுகையாற்றான் தாங்கள் பஞ்சவடிக்குச் சென்று வசிப்பது நலமென்று நானிப்பொழுது சொல்லுகிறேன். அது வெகு அழகான வனம். தங்கள் வாசத்துக்குத் தகுந்த இடம் அதுவே. அந்தப் பிரதேசத்தைப் பார்த்துச் சீதை வெகு ஆனந்தமடைவள். அது வெகு சிலாக்கியமானது. அது இங்கிருந்து வெகு தூரமுமன்று; கோதாவரி நதிக்கு அருகி

அகஸ்தியர் இடங்கூறல்.

ளுள்ளது. அதைக்கண்டும் வைதேகி சந்தோஷமடைவாள். அவ்விடத்தில் புசிப்பதற்கு வேண்டும் பழங்களுங் கிழங்குகளும் மிகுதியாக உண்டு. அநேகவித பறவைகளும் அவ்வனத்தில் வசிக்கின்றன. அன்றியும், பஞ்சவடி ஒருவரும் அதிகமாக நெருங்காத ஏகாந்த ஸ்தலமாகவும், புண்ணிய ஸ்தலமாகவும், வெகு ரமணீயமான இடமாகவும் இருக்கிறது. தங்களுக்கு மனைவியுண்டு, அவளைப் பாதுகாக்கச் சக்தியுமுண்டு. பஞ்சவடியில் வசித்துக் கொண்டு தபசிகளாகிற எங்களையுந் தாங்கள் அதுபோலவே காப்பாற்றி வரவேண்டும். அதோ காண்கிறதே இலுப்பை மரக்காடு, அதற்கு வடபுறமாக ஒரு பெரிய ஆலமரத்தைக் காணும்வரையில் வழிக்கொண்டு சென்றால் அவ்விடத்தில் ஒரு சிறு குன்று எதிர்ப்படும். அதற்கு அயலில் எப்பொழுதும் புஷ்பித்திருக்கும் மரங்கள் அடர்ந்த புகழ்பெற்ற பஞ்சவடியை நீங்கள் காணலாம்" என்று சொல்லினர். இவ்விதமாக அகஸ்தியர் சொல்லவே இராமர் லக்ஷ்மணரோடு அம்முநிவரை வணங்கி அவரிடமிருந்து விடைபெறக் கருதினர். அவ்விருவரும் முநிவரிடம் விடைபெற்று அவருக்கு நமஸ்காரம்பண்ணி அவ்வாச்சிரமத்தை விட்டுச் சீதையுடன் பஞ்சவடிக்குப் புறப்பட்டார்கள். அவ்விராஜகுமாரர்கள் விற்களையும் அம்பறாத்தூணிகளையும் எடுத்துக்கொண்டு, அச்சமின்றி, அகஸ்தியமாமுநிவர் சொன்ன வழிவழியே வெகு ஜாக்கிரதையுடன் பஞ்சவடிக்குப் பிரயாணமானார்கள்.

இராமர் பஞ்சவடிக்குப் போதல்.

---

## பதினைன்காஞ்சருக்கம்.

### இராமர் ஜடாயுவைக் கண்டது.

---

பஞ்சவடிக் கேகும்பொழுது இராமர் அதி பராக்கிரமம் பொருந்தியதும் பருத்த உடலையுடையதுமான கழுகொன்

றைக் கண்டார். ஒரு பெரும் ஆலமரத்தில் உட்கார்ந்திருந்த அக்கழுகைக் கண்டு இராமலக்ஷ்மணர்கள் அதனை ஓரரக்க னென்று தங்களுக்குள்ளே எண்ணிக் கொண்டு அதைப்பார்த்து "நீ யார்?" என்று கேட்டார்கள். அக்கழுகு அவர்களைப்பார்த்து வெகு மதுரமாகவும் பிரியமாகவும் "என் குழந்தைகளே, நான் உங்கள் தந்தையின் தோழனென்று அறிந்துகொள்ளுங்கள்" என்றது. தமது தந்தையின் தோழன் என்று கேட்ட மாத்திரத்தில் இராமர் அக்கழுகினுக்கு மரியாதை பண்ணி, அதன்மேல், அப்பக்ஷிராஜனுடைய குலத்தையும் பெயரையும்பற்றிக் கேட்டார். இராமர் சொன்னதைக் கேட்டு அப்புள்ளரசு எல்லாப் பிராணிகளுடைய உற்பத்தியையும் தனது பெயரையும் பின்வருமாறு சொல்லிற்று:—

ஜடாயுவைக் காணல்.

உயிர்த் தோற்றம்.

"இராகவா, முதலிலிருந்து பிரஜாபதிகளா யிருந்தவர்களெல்லாரையும்பற்றிச் சொல்லுகிறேன் கேள். முதற் பிரஜாபதி கர்த்தமர், அவருக்குப் பிறகு விக்கிரீதர், அவர்க்குப் பின் சேஷர், சம்சிரயர், வீரியமுடைய பகுபுத்திரர், ஸ்தாணு, மரீசி, அத்திரி, மகாபலம்பொருந்திய கிரது, புலஸ்தியர், அங்கிரஸ், பிரசேதஸ், புலகர், தக்ஷர், விவஸ்வான்; இவர்களெல்லாரும் பிரஜாபதிகள். இவர்களுக்குப் பின்வந்தவர் மகாகாந்தியுடன் விளங்கிய அரிஷ்டநேமியென்று சொல்லப்படும் காசியபர். தக்ஷ பிரஜாபதிக்கு மிக்க பெருங்கீர்த்திபொருந்திய அறுபது புத்திரிகள் இருந்தார்களென்பதை நாம் கேள்விப்பட்டிருக்கிறோமன்றோ? அவர்களில் மெல்லிய இடையுடைய பெண்கள் எண்மரைக் காசியபர் விவாகம் பண்ணிக்கொண்டார். அவர்கள் அதிதி, திதி, தனு, காளிகை, தாமிரை, குரோதவசை, மனு, அனலை என்றுசொல்லப்படுவார்கள். அவர்களிடத்தில் வெகு சந்தோஷமடைந்த காசியபர் அவர்களை

நோக்கி "இம்மூவுலகங்களையும் காத்தற்கு வல்லராகிய என்னைப்போன்ற பராக்கிரமமுள்ள குமாரர்களை நீங்களடைவீர்கள்" என்று சொன்னார். அப்படி அவர் சொல்ல அதிதி, திதி, காளிகை மூவர்களுந் தங்களுக்கு அம்மா திரிக்கீர்த்தியுள்ள புதல்வர்கள் உண்டாவார்களென்று மனவுறுதியோடு களித்திருந்தார்கள். மற்றவர்கள் அவ்வாறு நினைக்கவில்லை. அதிதியினிடமிருந்து பன்னிரண்டு ஆதித்தியர்கள், எட்டு வசுக்கள், பதினொரு ருருத்திரர்கள், இரண்டு அசுவினிகள், ஆகிய முப்பத்துமூன்று தேவர்கள் உண்டானார்கள். இராமா, திதியினிடமிருந்து பெயர் பெற்ற தைத்தியர்கள் பிறந்தார்கள். கடல்சூழ்ந்த காசினியும் அவர்கள் ஆதீனத்தில்தான் ஆதியில் இருந்தது. பகைவரை அடக்கும் பண்பினனே, தனு அசுவக்கிரீவன் என்பவனைப் பெற்றாள்; காளிகை நரகன், காலகன் என்பவர்களைப் பெற்றாள்; தாமிரை கிரௌஞ்சி, பாசி, சேனி, திருதராஷ்டிரி, சுகி என்ற ஐந்து கன்னியர்களைப் பெற்றாள். அவர்களுள், கிரௌஞ்சி கோட்டான்களைப் பெற்றாள்; பாசி கோழிகளையும், சேனி வலியுள்ள கழுகுகளையும், பருந்துகளையும் பெற்றார்கள்; திருதராஷ்டிரி அன்னப் பறவைகளையும், சக்கரவாகங்களையும் பெற்றாள். சுகி நதை என்பவளைப்பெற்றாள். நதையின்பெண் விநதை. குரோதவசைக்கு பத்துப்பெண்கள் பிறந்தார்கள். அவர்கள்பெயர் மிருகி, மிருகமந்தை, ஹரி, பத்திரமதை, மாதங்கி, சார்த்தூலி, சுவேதை, சுரபி, சகல லக்ஷணங்களும் பொருந்திய சுரசை, கத்ருகை என்பன. ஓ புருஷோத்தமா, மான்களெல்லாம் மிருகியின் குழந்தைகள். மிருகமந்தை பெற்றன் கரடிகளும், ஸ்ரமரம் என்ற மான்களும், கவரிமான்களுமாம். ஹரி என்பவளிடம் சிங்கங்களும், பலமுள்ள அநேக குரங்குகளும் பிறந்தன. பத்திரமதை இராவதி என்ற பெண்ணைப் பெற்றாள். இவள் இவ்வுலகத்துக்கெல்லாம் யஜமானாக

விருக்கும் ஐராவதமென்ற யானையை ஈன்றாள். மாதங்கி யிடமிருந்து மதயானைகள் ஜனித்தன. சார்த்தூலி கோலாங்கூலம் என்ற குரங்குகளையும் புலிகளையும் பெற்றாள். சுவேதை திக்கஜங்களைப்பெற்றாள். சுரபி என்பவளுக்கு இரண்டு கீர்த்திபெற்ற பெண்கள் பிறந்தார்கள். அவர்கள் பெயர் ரோகிணி கந்தர்வி என்பன. ரோகிணி மாடுகளைப் பெற்றாள். கந்தர்வி குதிரைகளைப் பெற்றாள். இராமா, சுரசை நாகர்களைப் பெற்றாள். கத்ரு பன்னகர்களைப் பெற்றாள். மனு என்பவள் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்று பெயர்பெற்ற மனிதர்களைப் பெற்றாள். அனலை புண்ணியமான பழங்களையுடைய விருக்ஷங்களைப் பெற்றாள். விநதை சுகி என்பவளுடைய பேர்த்தி. கத்ரு சுரசையின் தங்கை. கத்ரு ஆயிரந்தலைகளைக்கொண்டு இவ்வுலகத்தைத் தாங்கும் ஆதிசேஷனைப் பெற்றாள். விநதை கருடன் அருணன் என்ற இரண்டு பிள்ளைகளைப்பெற்றாள். நான் அருணன் புத்திரன். என்பெயர் ஜடாயு. என் அண்ணன் ஸம்பாதி என்பவன். எங்களுக்குத் தாய் சேனி. தங்களுக்கு மனமிருக்கும் பக்ஷத்தில் நான் தாங்கள் வசிக்குமிடத்திலிருந்துகொண்டு தங்களுக்கு என்னால் செய்யக்கூடு முதவிகளைச் செய்வேன். இக்காடு மிக அடர்ந்து மிருகங்களும் ராக்ஷசர்களும் சஞ்சாரம் பண்ணுமிடமாக விருக்கிறது. தாங்களும் லக்ஷ்மணரும் பர்ணசாலையை விட்டு எப்பொழுதாவது வெளியிற்போகும்படி வந்தால் நான் அக்காலத்தில் சீதையைப் பாதுகாப்பேன்".

இவ்வாறுசொன்ன ஜடாயுவை இராமர் உபசரித்துக் களிப்புடன் தழுவி வணங்கி, அதற்கும் தம் தந்தைக்குமுண்டான சிநேகவிஷயமான சங்கதிகளை அது அடிக்கடி சொல்ல அதிகவனத்தோடு கேட்டார். பின்பு அந்தப் பலசாலியான ஜடாயுவினிடம் கொஞ்சநேரம் சீதையைப் பாதுகாக்கும்படி ஒப்பித்துவிட்டு விட்டிற் பூச்சிகளைக்

கொளுத்தும் நெருப்புப்போலச் சத்துருக்களைத் தகிக்கும் பராக்கிரமமுள்ள இராமர் லக்ஷ்மணருடன் பஞ்சவடிக்குச் சென்றார்.

---

## பதினைந்தாஞ்சருக்கம்.

இராமர் பஞ்சவடியில் ஆச்சிரமம் அமைத்து அவ்விடத்தில் கொஞ்சக்காலம் வாசம்பண்ணியது.

---

பிறகு, இராமர் அநேக மான்களும் கொடிய சர்ப்பங்களும் மிருகங்களுஞ் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் பஞ்சவடி சேர்ந்து, வெகு பராக்கிரமசாலியாகிய தமது தம்பி லக்ஷ்மணரைப் பார்த்து "மகரிஷி அகஸ்தியர் குறித்த இடத்துக்கு நாம் வந்துவிட்டோம். எப்பொழுதும் மலர்ந்திருக்கும் மரங்களடர்ந்த பஞ்சவடி இதுதான். நீ காட்டில் வெகு சாமர்த்தியமாகப் பழகியவனுயிற்றே. நன்றாக நான்கு பக்கங்களிலேயுஞ் சுற்றிப்பார். நமக்கு ஆச்சிரமம் ஒன்று ஏற்படுத்த எவ்விடம் உனக்குப் பிடிக்கிறது? அதை ஆராய்ந்து சொல். எவ்விடத்தில் நீயும் நானும் சீதையும் சந்தோஷமாக வசிக்கலாமோ, எவ்விடத்தில் பூஞ்சோலைகள் நன்றாக அமைந்து சலம் சமீபமாகவும் இடம் பார்ப்பதற்கு வெகு அழகாகவும் இருக்கிறதோ, எவ்விடத்தில் நமக்கு வேண்டிய ஸமித்து, தருப்பை, புஷ்பம் முதலியவைகள் சுலபமாக நமக்குக் கிட்டுமோ அவ்விதமான இடத்தைப் பார்" என்றார். இவ்வண்ணமாக இராமர் சொல்ல லக்ஷ்மணர் கைகூப்பி வணங்கி, சீதை முன்பாகக் காகுத்தரைப் பார்த்து "ஐயா காகுத்தரே, தாங்கள் எனக்கு யஜமானுக இருந்துகொண்டிருக்க நான் எக்காலத்தும் தங்களுத்தரவுப்படி உள்ளடங்கி நடக்கக் கடமைப்பட்டவன். சுவயமாக ஒன்றுஞ் செய்ய எனக்

பஞ்சவடியில் இடம் பார்த்தல்.

கதிகாரமில்லை. ஆகையால், தாங்களே அழகான ஒரு இடத்தைப் பார்த்து, 'இவ்விடத்தில் ஆச்சிரமம் செய்' என்று எனக்குக் கட்டளை யிடவேண்டும்'' என்றார். இவ்விதமாக மகாத்துமாவாகிய லக்ஷ்மணர் சொன்ன சொற்களைக்கேட்ட இராமர் வெகு சந்தோஷமடைந்து, கொஞ்சநேரம் ஆராய்ந்து, எல்லா வளங்களும் பொருந்திய பிரதேச மொன்றைப் பார்த்து வைத்துக்கொண்டு, அவ்வழகான இடத்துக்கு லக்ஷ்மணரை அழைத்துப் போய், அவர் கையைத் தமது கையால் பற்றி, ஆச்சிரமம் ஏற்படுத்தும் விஷயமாக, "இவ்விடம் சமமாயும் வெகு அழகாயும் மலர் மரங்களால் சூழப்பட்டும் இருக்கிறது. ஆகையால், இவ்விடத்திலே நாம் வசிக்க ஓர் ஆச்சிரமத்தை நீ செய். சூரியன்போல் விளங்கிக்கொண்டு வெகு மனோகரமாகக் கந்தம்வீசும் தாமரைப் புஷ்பங்கள் நிரம்பிய தாமரையோடை ஒன்று சமீபத்தில் இருக்கிறது. அன்றியும் பரிசுத்தரான அகஸ்தியமுநிவர் சொன்னவாறு இங்கே மணம்பொருந்திய மலர்கள் நிரம்பிய மரங்களடர்ந்தும், அன்னங்களும், காரண்டவங்களும், சக்கரவாகங்களும் விளையாடப்பெற்றும், மான்கூட்டங்கள் நிறைந்தும் விளங்குகின்ற அழகான கோதாவரிநதியும் இதோ தான் ஓடுகிறது. அது வெகு தூரமுமன்று; வெகுசமீபமுமன்று. மனோகரமாகச் சப்திக்கும் மயில்கள் பொருந்தியும், உன்னதமாயும், அநேக குகைகள் நிரம்பியும், புஷ்பித்துள்ள அநேக விருக்ஷங்கள் சூழ்ந்தும் இருக்கும் பல குன்றுகள் இதோ நம்மைச் சுற்றிநிற்கின்றன. ஆங்காங்கு காணப்படும் தங்கம், வெள்ளி, தாமிரங்களின் பொடிகளால் இக்குன்றுகள் அநேக வருணங்களால் கோலமிட்டு அலங்கரிக்கப்பட்ட யானைகள் போல் தோற்றுகின்றன. இங்கிருக்குங் காடு ஆச்சா, பனை, தமாலம், பேரீச்சு, பலா, மா, நீவாரம், வேங்கை, புன்னை, கட்டிமா, அசோகம், திலகம், சம்பகம், தாழை, சந்தனம், ஸ்பந்தனம்,

கடம்பு, பனஸம், எலுமிச்சை, தவம், அசுவகர்ணம், கருங்காலி, அரசு, முண்முருக்கு, பாதிரி முதலிய விருக்ஷங்கள் அடர்ந்து புதரோடு கொடிகள் படர்ந்திருக்கிறது. இது வெகு புண்ணியமான இடம்; மிக்க அழகு வாய்ந்தது; அநேக பறவைகளும் மிருகங்களும் நிறைந்திருக்கின்றது. இங்கே நான் இந்தப் பக்ஷியுடன் (ஜடாயு) வசிப்பேன்" என்றார்.

பர்ணசாலை கட்டல்.

இராமர் அம்மொழி புகலலும் பகைவரைவெல்லும் பராக்கிரமமுள்ள வலிமிகுந்த லக்ஷ்மணர் வெகு சீக்கிரமாகத் தமது தமையனார் வசிப்பதற்காக ஓர் ஆச்சிரமத்தை அவ்விடத்தில் அமைத்தனர். நன்ருக மண்சுவரெடுத்து, உயர்ந்த மூங்கில்களால் அழகான பலமுள்ள கம்பங்கள் நாட்டி, அரசங்கிளைகளைப் பரப்பிப் பலமாக நாரால் கட்டி, நாணலாலும் விழலாலும் இலைகளாலும் நெருக்கமாக வேய்ந்து, தரையைச் சமமாகநிரவி, ஒரு விசாலமான அழகிய பர்ணசாலையைத் தமது தமையனாராகிய இராகவர் வசிக்கும் பொருட்டு ஒருநொடியில் மகா பலசாலியாகிய லக்ஷ்மணர் கட்டிமுடித்தார். அது ஒப்பற்ற வனப்புடையதாக விளங்கிற்று. அதன்பின் லக்ஷ்மணர் கோதாவரிநதிக்குச்சென்று அதில் ஸ்நானஞ் செய்து தாமரைப் புஷ்பங்களையும் பழங்களையும் பறித்துப் பர்ணசாலைக்குத் திரும்பிவந்தார். பின்னர் அதற்கு லக்ஷ்மணர் புஷ்பங்களால் வாஸ்து பூசை செய்து, சாஸ்திரப்பிரகாரம் தாங்கள் அவ்விடத்தில் க்ஷேமமாக வாசம்பண்ணுவதற்காகச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து முடித்து, இராமரை அழைத்து வந்து தாம் அமைத்த ஆச்சிரமத்தைக் காண்பித்தார். அவ்வாறு கட்டிமுடித்த அழகிய பர்ணசாலையைச் சீதையுடன் இராமர் பார்த்து ஆனந்தக்கடலில் அமிழ்ந்தார். தமது புஜங்களால் லக்ஷ்மணரைத்தழுவி வெகு பிரியமாகவும் கம்பீரமாகவும் அவரைப்பார்த்து இராகவர் " தம்பீ,

நீ இன்று மிகப் பெரியகாரியத்தைச் செய்து முடித்தாய். அதனால் நான் வெகு திருப்தியடைந்தேன். அதற்குக் கைம்மாறு எனது ஆலிங்கனமென்றே எண்ணி நானுன்னைத் தழுவிக்கொண்டேன். இவ்வண்ணம் இங்கிதமறிந்து, நன்றியறிந்து, தருமமறிந்து, நடக்கும் உன்னைத் தனது குமாரனாகப்பெற்ற எனது தந்தை இறந்துவிட்டாரென்று சொல்லத்தகாது" எனப் புகழ்ந்துகூறினர்.

திருவை வளர்க்கும் இராமர் லக்ஷ்மணரை நோக்கி இவ்வாறுசொல்லி அநேக பழங்கள் நிரம்பிய அவ்விடத்தில் வெகு சுகமாகத் தமது ஐம்புலன்களையுமடக்கி வசித்தார். அந்தத் தருமாத்துமா அப்பஞ்சவடி யாச்சிரமத்தில் சீதையும் லக்ஷ்மணரும் சிசுரூஷைபண்ண ஸ்வர்க்க லோகத்தில் இந்திரன் வசிப்பதுபோலக் கொஞ்சக்காலம் வாசஞ்செய்தார்.

---

## பதினாறுஞ்சருக்கம்.

ஒருநாள் பிராதக்காலத்தில் ஸ்நானம் பண்ணக் கோதாவரிக்குச் சென்றபொழுது லக்ஷ்மணர் அக்காலத்து ஹேமந்தருதுவை வருணித்தல்; இராமர் பரதரைப்பார்க்க ஆசைப்படல்.

---

மகாத்துமாவாகிய இராமர் அங்கே சுகமாக வசித்துக் கொண்டிருக்கும்பொழுது சரத்காலங்கழிந்து ஹேமந்தருது தொடங்கிற்று. அக்காலத்தில் ஒருநாள் இரவுகழிந்து பொழுதுவிடியும் வேளையில் பிராதக்காலஸ்நானத்திற்காக இரகுநந்தனர் அழகான கோதாவரிக்குப் போயினர். சீதையோடு இராமருக்குப் பின்னர் வெகுவணக்கமாகக் கையில் கலசமெடுத்துச் சென்ற லக்ஷ்மணர் இராமரைப் பார்த்து "இன்சொலிறையே, தங்களுக்கு வெகு ஆனந்தமானகாலம் இப்பொழுது வந்திருக்கிறது. இந்த ஹேமந்தருதுவால், இவ்வருஷம் தன்னை அலங்கரித்துக்

பனிக்கால வருணனை.

கொண்டு வருவதுபோல் வெகு அழகாக விளங்குகிறது. ஜனங்கள் உடம்பு இக் காலத்தில்தான் பனியால் வெடித்து வறண்டுவிடுகிறது. புவிமுழுதும் பயிர் நிரம்பி இருக்கிறது. நீரில் படிய இக்காலத்தில் மனம் வருகிறதில்லை. அனலண்டை உட்காரச் சுகமாகவிருக்கும். இக்காலத்தில்தான் புதுநெல் குத்தி அவ்வரிசியைக்கொண்டு ஹவிஸ் அமைத்து ஆன்றோர் தங்கள் பிதிரர்களையுந் தேவதைகளையும் ஆராதித்துத் தங்கள் பாவங்களை ஒழிக்கிறார்கள். நாடெங்கும் இப்பொழுதுதான் எல்லாவிதமான சம்பத்துகளும் நிரம்பி விளங்குங் காலம். இப்பொழுது தான் எங்கும் பாலும் தயிரும் நெய்யும் அதிகமாகக் கிடைக்குங் காலம். இக்காலத்திற்றான் வெற்றியை விரும்பிய மன்னவர்கள் யுத்தத்திற்குப் புறப்படுவார்கள். சூரியன் இக் காலத்தில் தென்திசை சென்றுவிடுகின்றமையால் வடதிசை நெற்றியில் திலகமில்லாத பெண்ணைப்போல இருக்கும். எப்பொழுதும் இயற்கையாகவே பனிக்கட்டிகளால் நிரம்பியிருக்கும் இமயமலையும் இப்பொழுது சூரியன் தென்திசைசென்றுவிடுவதால்,தன்பெயருக்கேற்கமுற்றும் பனிமலையாகவே விளங்குங்காலம் இது. இப்பருவத்தில் பகலில் மத்தியான காலத்தில்தான் அலைந்து திரியச் சௌக்கியமாகவிருக்கும்; சூரியகிரணம் மேலேபட இன்பமாயிருக்கும்; நடுப்பகலிலும் நிழலையும் தண்ணீரையும் அணுகக் கூசும். இக்காலத்தில் எப்பொழுதும் சூரியன் உக்கிரமேயின்றி வெகுசாந்தமாக இருப்பன்; பனிவிழுந்து கொண்டிருக்கும்; ஊசிபோல் குத்தும் குளிர்காற்று வீசும்; காடுகள் பனியால் அநேகமாக மனித சஞ்சாரமின்றி வெறுமை யடைந்து விளங்கும். இக்காலத்தில் ஜனங்கள் மற்றக்காலங்களில் போல் வெட்டவெளியில் தூங்கமுடியாது. புஷ்யத்தில் உள்ள பூரணசந்திரன் இக்காலத்தில் உண்டாகும் பனியால் ஒளி மழுங்கியிருப்பன். குளிரதிக

மாகவிருக்கும். இரவுகள் நீடித்திருக்கும். சந்திரனுடைய அழகு சூரியனுக்காய்விட்டது; சந்திரமண்டலம் பனி மூடிச் சிவந்து, மூச்சுப்பட்டு மங்கின கண்ணுடிபோல், இக்காலத்தில் பிரகாசிப்பதேயில்லை. பூரண சந்திரனை யுடைய இரவும் பனியால் மூடப்பட்டு, வெயிலிலலைந்து மேனிகறுத்த நமது சீதைபோல, தன்னழகு குன்றி விளங்குகிறது. எப்பொழுதும் இயல்பாகவே குளிர்ந்து வீசும் மேல்காற்று இப்பொழுது பனியுடன்கலந்து இரட்டிப்பான குளிர்ச்சியோடு வீசுகிறது. புகைக்கொப்பான ஆவியால் மூடப்பட்ட காடுகள் சூரியனுதயமாகுங் காலத்தில் கிரௌஞ்சம், சாரசம் முதலிய பறவைகள் கூவ, நன்ருக விளைந்த வாற்கோதுமைகளையும், கோதுமைகளையும் உடையவாய் விளங்குகின்றன. பேரீந்துப் புஷ்பமளவு பருமனுள்ள மணிகள் நிரம்பிய கதிர்களால் நெற்பயிர்கள் கொஞ்சம்வளைந்து தங்கநிறமாகவிளங்குகின்றன. தூரத்திலுதிக்கும் சூரியன் குளிர்ந்த பனியால் சூழப்பட்ட கிரணங்களால் சந்திரனைப்போல் விளங்குகிருன். காலையில் உஷ்ணமின்றியும், மத்தியானகாலத்தில் அனுபவிக்கச் சுகமான உஷ்ணம்பொருந்தியும், கொஞ்சம் சிவந்தும் வெளுத்தும் வெயில் பூமியில் தோற்றுகின்றது. காடுகளில் பனிமூடிய புல்தரைகள் இளம் வெயிலில் வெகு அழகாய்ப் பிரகாசிக்கின்றன. காட்டானைகள் அதிக தாகத்தால் தண்ணீர் குடிக்க நீட்டிய துதிக்கைகளை அந்நீர் அதிக சீதமாயிருத்தலால் உள்ளிழுத்துக்கொள்ளுகின்றன. நீர்ப்பறவைகள் தண்ணீருக்குச் சமீபத்தில் உட்கார்ந்துகொண்டு, மறமில்லாத போர்வீரர் செருவிற்குச் செல்லக் கூசுவதுபோல, நீரிலிறங்கத் துணியாமலிருக்கின்றன. பூவற்றுப் பனித்துளிகளாலும் ஆவியாலும் மூடப்பட்டு அசைவற்று நிற்கும் காட்டுமரங்கள் தூங்குவனபோலக் காணப்படுகின்றன. நதிகள் பனியாவியால் மூடப்பட்டும், சத்தத்தால் ஊகித்தறியப்படும் சக்கரவாகப் பறவைகளை உடையவாகியும்,

பனிநீரால் நனைந்த மணற் குன்றுகள் பொருந்திய கரைகளையுடையவாகியும் விளங்குகின்றன. பனிபெய்வதாலும், சூரியனுக்கு உக்கிரத்வமில்லாமையாலும், சீதளத்தாலும், நிர்மலமான மலையுச்சியிலிருந்தபோதிலும் ஜலம் குடிப்பதற்கு விஷம்போலிருக்கிறது. தாமரை ஓடைகள் உதிர்ந்த தாமரை இதழ்களையும், மகரந்தத்தையும், பனியால் அழுகியிருக்கும் மலரற்ற காம்புகளையும் உடைமையால் கொஞ்சமேனுஞ் சோபிக்கவேயில்லை. இப்போது புருஷசிம்மமாகிய பரதர் வெகு துயரப்பட்டுக்கொண்டு தங்களிடம் வைத்திருக்கும் அன்பால் நகரத்திலிருந்துகொண்டே தவம்புரிந்து கொண்டிருக்கிறார். அவர் இராச்சியத்தையும் தனக்குரிய மரியாதையையும் பலவிதபோகங்களையும் வெறுத்துவிட்டு, அரிய தபசியாக, நியமமான ஆகாரத்தைப் புசித்து, குளிர்ந்திருக்கும் வெறுந்தரையில் படுத்துத் தனது வாழ்நாட்களைக் கழிக்கிறார். அவரும் இதேகாலத்தில் எழுந்து தமது குடிகள் சூழ ஸ்நானம்பண்ணும்பொருட்டுச் சரயு நதிக்குப் போய்க்கொண்டிருக்கலாம். வெகு சௌக்கியமாக வளர்க்கப்பட்ட மெல்லிய இயல்பையுடைய பரதர் எவ்விதமாக இப்பொழுது குளிர்ந்த சலத்தில் விடியற்காலத்தில் ஸ்நானம் பண்ணுவாரோ தெரியவில்லை. கமலவிதழ்போன்ற கண்கள்பொருந்தி, வெகுபராக்கிரமசாலியாய், நீலவருணராய், தொந்தியில்லாது கம்பீரமாய் விளங்கிக்கொண்டு, தருமத்தை நன்றாகவறிந்து, உண்மையே பேசிக்கொண்டு, ஒருவித கெட்டகாரியமும் செய்யாமல் நடுங்கிக்கொண்டு, தமது ஐம்புலன்களையும் அடக்கி, எல்லாரிடமும் அன்பாகவும் இனிமையாகவும்பேசிக்கொண்டு, நீண்டகைகள் பொருந்தி, பகைவரை அடக்கும் திறலுள்ள பரதர் இராச்சியாதிபோகங்கள் எல்லாவற்றையும் துறந்து, முற்றிலுந் தங்களிடமே பிரீதியை வைத்துவிட்டார். நாட்டிலிருந்துகொண்டே காட்டிலிருந்து தவம்

பரதர் செய்கை.

புரியுந் தங்களைப் பரதர் தமது தவத்தால் பின்பற்று கிறபடியால் அவர் தமக்குக் கிடைக்கவேண்டிய சுவர்க்க லோகத்தை முன்னரே தேடிக்கொண்டார். உலகத்தில் மனிதர்கள் விசேஷமாகத் தங்கள் தந்தைகள் குணத்தைக் கொள்ளாமல் தங்கள் தாயர்களுடைய குணத்தையே கொள்ளுகிறார்களென்று பிரசித்தமாக வழங்கிவரும் உலக வசனமானது பரதரிடம் பொய்யாகிவிட்டது. தசரத மன்னவரை நாயகராகவும் பரதரைக் குமாரராகவும் உடைய நமது தாய் கைகேயிக்குமட்டும் இந்தக் கொடிய எண்ணம் எவ்விதமாக உதித்தது'' என்றனர்.

வெகு தர்மிஷ்டராகிய லக்ஷ்மணர் அன்பால் இவ்வாறு பேச, இராமர் தாய்மேல் சொல்லிய குற்றத்தைச் சகிக்கமுடியாமல் அவரைப்பார்த்து "தம்பி, நீ நமது இளையதாயான கைகேயியை ஒருபொழுதும் நிந்திக்கலாகாது. இக்ஷ்வாகு வம்சத்தின் கொழுந்தாகிய பரதனைப்பற்றி இன்னும் வேண்டியமட்டுஞ் சொல். காட்டில் தவம்புரிந்து வசிப்பதில் என்மனமெவ்வளவோ தைரியமாக இருந்தபோதிலும், பரதனிடத்துள்ள அன்பினால் என்புத்தி மயங்குகின்றது. அவனுடைய பிரியமாயும், மதுரமாயும், மனோகரமாயும், அமிருதத்துக் கொப்பாயும், மனத்தைச் சாந்தப் படுத்திவைப்பதில் அதிக ஆற்றலுடையவைகளாயும் உள்ள வசனங்கள் என் மனத்தில் இருக்கின்றன. மகாத்துமாவாகிய பரதனையும் நமது வீரனான சத்துருக்கனனையும் நான் எப்பொழுது உன்னுடன் காணப்போகிறேன்'' என்று இவ்விதமாகக் கூறித் துயரப்பட்டுக் கொண்டே கோதாவரி நதிசேர்ந்து தமது தம்பியோடும் சீதையோடும் ஸ்நானம் முதலியவைகளைச் செய்துமுடித்தார். பிறகு அவர்கள் தீர்த்தத்தால் தங்கள் பிதிரர்களுக்கும் தேவதைகளுக்கும் செய்யவேண்டிய தர்ப்பணங்களைச் செய்துமுடித்து உதயஞ்செய்த சூரியனையும் மற்

இராமர் பரதரை நினைத்துத் துக்கித்தல்.

றத்தேவதைகளையும் விதிப்பிரகாரம் ஸ்தோத்திரம் பண்ணினார்கள். சீதையைத் தம்பக்கத்தில் வைத்துக்கொண்டு லக்ஷ்மணருடன் ஸ்நானம் செய்து திரும்பின இராமர் நந்திபகவானை முன்னிட்டுக்கொண்டும் பார்வதிதேவியைத் தமது பக்கத்தில் வைத்துக்கொண்டும் ஸ்நானம் செய்துவரும் ருத்திரமூர்த்திபோல் விளங்கினார்.

---

## பதினேழாஞ்சருக்கம்.

### பஞ்சவடியில் சூர்ப்பணகை இராமாதிகளைச் சந்தித்தல்.

---

இராமர் சீதை லக்ஷ்மணர் மூவரும் கோதாவரி நதியில் ஸ்நானஞ் செய்துவிட்டுத் தங்களாச்சிரமத்துக்குத் திரும்பிச் சென்றார்கள். ஆச்சிரமஞ் சேர்ந்து, இராமர் தாம் செய்யவேண்டிய காலைக்கடன்களைச் செய்து முடித்துப் பர்ணசாலையுள் நுழைந்தார். அவர் அவ்விடத்தில் மகரிஷிகள் ஆராதிக்கத் தமது தம்பி லக்ஷ்மணரோடு அனேக விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். சீதாதேவியுடன் இராமர் தமது ஆச்சிரமத்தில் வீற்றிருந்தது, சித்திரையோடு சந்திரன் கூடியிருந்ததுபோல் விளங்கிற்று. அவ்விதமாக அவர் பேசிக்கொண்டிருந்த காலத்தில் அரக்கி யொருத்தி தற்செயலாக அவ்விடம் வந்தாள். தசக்கிரீவன் தங்கையாகிய சூர்ப்பணகை அகன்ற மார்பும், அழகிய புஜங்களும், தாமரையிதழ் போன்ற கண்களும், முழங்கால்வரையில் தொங்கும் கரங்களும் உடையவராய் அதிகமாக நின்றொளிரும் முகத்துடன் வீற்றிருந்த தேவர்க்கொப்பான இராமரைக் கண்டாள்.

*சூர்ப்பணகை வரவு.*

அவருடைய யானைபோன்ற நடையும், சடைமுடியும், அழகும், பலமும், இராஜ லக்ஷணங்களும், குவளை நிறமும், அனங்கனது சாயலும், இந்திரனுக்கொப்பான

வலியும் அவள் மனத்தைக் கவர்ந்தன. இவளுக்கும் அவருக்கும் எவ்வளவுதூரம்? அவரது சுமுகமெங்கே? இவளது துர்முகமெங்கே? அவரது குறுகிய வயிறெங்கே? இவளது சரிந்த பெருத்த வயிறெங்கே? அவரது நீண்ட பெரிய கண்களெங்கே? இவளது விகாரமான கண்களெங்கே? அவருடைய அழகிய குஞ்சியெங்கே? இவளது சிவந்து விரிந்த கூந்தலெங்கே? கண்டோர் மனத்தைக் கவரும் அவரது வனப்பெங்கே? எல்லாரும் நடுங்கத்தக்க இவளது கோரமான உருவெங்கே? அவரது இனியகுரல் எங்கே? இவளது பயங்கரமான குரலெங்கே? அவரது இளமையெங்கே? இவளது மூப்பெங்கே? அவரது இனிய பிரிய வசனமெங்கே? இவளது வன் சொல்லெங்கே? அவரது அறநெறியெங்கே? இவளது மறநெறியெங்கே? இராமரோ அழகுள்ள சுந்தரபுருஷர். சூர்ப்பணகையோ வெகு விகாரமான அரக்கி. இவ்வளவு வித்தியாசங்கள் காமத்தால் கட்டுண்டவர்களுக்குத் தோற்றுமா? ஆகையால், சூர்ப்பணகை இராமரைக்கண்டு மயங்கி, அவரை நோக்கிச் "சடைமுடிதரித்துத் தவவேடம்பூண்டு வில்லேந்திக்கொண்டு மனைவியுடன் ராக்ஷசர்கள் சஞ்சரிக்கும் இந்த இடத்துக்கு ஏன் வந்திருக்கிறீர்? நீர் வந்தகாரணமென்ன? அதின் உண்மையை எனக்குச் சொல்லவேண்டும்" என்று வினவினள். இவ்வாறு அரக்கியாகிய சூர்ப்பணகை தம்மைக்கேட்கவே, எல்லாவிஷயங்களையும் நேரியனவாக எண்ணுங் குணமுள்ள இராமர் அவளைப் பார்த்து "இந்திரனுக்கொப்பான பராக்கிரமம் பொருந்திய தசரதர் என்ற மன்னவரொருவரிருந்தார். நான் அவருடைய மூத்தகுமாரன். என்னை இராமன் என்று சொல்லுவார்கள். அதோ இருக்கிறாரே அவர் என் தம்பி லக்ஷ்மணர். எப்பொழுதும் என்னைச்சார்ந்து நிற்பவர். இவள் என் மனைவி; சீதை இவள் பெயர்.

சூர்ப்பணகை வர்ணனை.

நாங்கள் எங்கள் தாய்தந்தையர்கள் உத்தரவுப்படி அறம் வளர்க்க இக்காட்டிற்கு வந்திருக்கிறோம். நீ யார் என்று அறிய விரும்புகிறேன். நீ யார் மகள்? உன் பெயர் யாது? நீ யாரைச் சேர்ந்தவள்? மனோகரமான உருவமுடைமையால் நீ அரக்கிபோலும். நீ இங்கு வந்தகாரண மென்ன? அதை உள்ளபடி சொல்லவேண்டும்" என்று கூறினர்.

சூர்ப்பணகை இராமரைக் கணவனாகும்படி கேட்டது.

இதைக்கேட்டுக் காமத்தால் வருத்தப்பட்டுக்கொண்டிருந்த சூர்ப்பணகை இராமரைப்பார்த்து "கேளும் இராமரே, நானுண்மையைச் சொல்லுகிறேன். நான் சூர்ப்பணகை என்னும் அரக்கி. இஷ்டப்படி உருவங்கொள்ளுஞ் சக்தி எனக்குண்டு. பார்ப்பவர்கள் உள்ளத்தை நடுங்கச் செய்துகொண்டு நானிந்தக்காட்டில் தனிமையாக எப்பொழுதும் சஞ்சரிப்பவள். இராவணன் என் தமையன். அவன் வெகு பலசாலி; அரக்கர்களுக்கெல்லாம் இறைவன். அவ்வீரன் விசிரவசுவுடைய குமாரன். அவனைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். எப்பொழுதுந் தூங்கிக்கொண்டேயிருக்கும் மகாபலம் பொருந்திய கும்பகர்ணனும், ராக்ஷசகுலத்தில் பிறந்தும் வெகு தர்மாத்துமாவாய் ராக்ஷச குணமேயில்லாத விபீஷணனும், போரில் கீர்த்தி பெற்ற கரனும், தூஷணனுமாகிய இவர்களெல்லாரும் என் சகோதரர்கள். நான் இவர்கள் எல்லாரையும் விட்டுவிட்டு என்னிஷ்டப்படி சஞ்சரிக்க வல்லவள். இராமரே, நான் தங்களைக் கண்டமாத்திரத்தில் தாங்கள் எனக்குப் புருஷனாகவேண்டுமென்று எண்ணங்கொண்டு தங்களிடம் வந்திருக்கிறேன். நான் வெகு பலமுள்ளவள். என்னுடைய மகாபலத்தால் என்னிஷ்டப்படி எங்கும் சஞ்சரிக்கவல்லவள், என்றென்றைக்கும் என் கணவராகத் தாங்கள் ஆகவேண்டும். சீதை உங்களுக்கு என்னசெய்யப்போகிறாள். வெகு விகாரமும் அவலக்ஷணமுமுள்ள

சீதை உங்களுக்குச் சரியான மனைவியல்லள். நான்தான் தங்களுக்கு ஏற்றமனைவி. ஆகையால் நீங்கள் என்னைமனைவியாக ஒப்புக்கொள்ளுங்கள். மகா விகாரமுள்ளவளும், கெட்டவளும், குரூபியும், சரிந்தவயிறுள்ளவளும், மனிதப்பிறப்பினளுமான இச்சீதையைத் தங்களுடைய தம்பி லக்ஷ்மணனுடன் சேர்த்து நான் புசித்துவிடுகிறேன். அதன்பிறகு என்கணவரே, அநேக மலைகளின் சிகரங்களையும் அநேக அரணியங்களையும் என்னுடன்கூடப் பார்த்துக் கொண்டு தாங்கள் சுகமாகச் சஞ்சரிக்கலாம்" என்றனள்.

மயக்கங்கொண்ட சூர்ப்பணகை இவ்வாறு சொல்லப் பேசுவதில் வெகுசமர்த்தரான இராமர்சிரித்து அவ்வரக்கியைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினர்.

---

## பதினெட்டாஞ்சருக்கம்.

சூர்ப்பணகை
மூக்குங் காதும் அறுபட்டது.

---

இராமர் கூறிய மறுமொழி.

இவ்வண்ணம் காமவலையில் கட்டுண்டு பேசின சூர்ப்பணகையைப்பார்த்து இராமர் சிறிதுமுறுவலித்துப் பரிகாசமாகக் கூறலுற்றார்:— "மெல்லியலே, நான் கல்யாணமானவன். இவள் என் மனைவி. உன்னைப்போன்ற மங்கையர்கள் மாற்றவளைக்கண்டால் சகியார்கள். என்தம்பி லக்ஷ்மணன் மிகநல்லவன்; அழகுள்ளவன்; நல்லபாக்கியவான். அவனுக்கு மனைவியில்லை. அவன் அதிபலசாலி. அவன் மனைவியாற் பெறும் இன்பத்தை அறியான்; சிறுபிராயத்தான். உன்னுடைய அழகான உருவத்துக்கு அவன்தான் சரியான புருஷன். ஆகையால் மேருமலையைச் சூரியனுடைய கிரணம் போய் அடைவதுபோல நீ அவனைப் புருஷனாக அடைந்தால் சக்களத்தி பயமில்லாமல் இருக்கலாம்." இவ்வாறு

இராமர் சொல்லவே, காமத்தால் மோகித்திருந்த சூர்ப் பணகை உடனே அவரை விட்டுவிட்டு விரைவாக லக்ஷ் மணரிடமோடி அவரைப்பார்த்து "வெகுவழகான உருவம் படைத்த தங்களுக்குத் தகுந்த மனைவி நானொருத்தியே. தாங்களும் என்னுடன் சுகமாகத் தண்டகையின் இடமெங்கும் சஞ் சரிக்கலாம்" என்று சொன்னாள். இவ்விதமாகத் தம்மைப் பார்த்துச் சூர்ப்பணகை சொல்ல, பேசுவதில் சமர்த்த ராகிய லக்ஷ்மணர் புன்னகைசெய்து அவளை நோக்கி

சூர்ப்பணகை லக்ஷ்மணரை வரித்தது.

"தாமரைபோன்ற அழகான நிறமுள்ள மாதே, நான் சுவதந்தரம் உள்ளவனல் லன். என் தமையனுருடைய தாஸன். தாஸபூதனான எனக்கு நீ மனைவியாகுவது நன்றாகவிருக்க வில்லை. மிக்க சிறுபெண்ணாகிய நீ உன் மனோரதங்களை நிறைவேற்றிக்கொள்ள விரும்பின் வெகு பாக்கியசாலி யான என் தமையனுருடைய மனைவி யாகிவிடு. அதி குரூபியும், கெட்டவளும், அழகற்றவளும், சரிந்தவயிறுள்ள வளும், கிழவியுமாயிருக்கிற சீதையை அவர் கைவிட்டு உன்னையே மணம்புரிவார். நிகரற்ற நேரிழையே, வரு ணிக்க முடியாத அழகமைந்தவளே, கொஞ்சமாவது பகுத் தறிவுள்ள ஒருவன், இவ்வித சிலாக்கியமான வடிவத்தைத் தனக்கு வேண்டாமென்று தள்ளிவிட்டு மனிதசாதியில் பிறந்த மாதினிடத்திலும் அன்புவைப்பானு" என்று கூறி னார். இதுபரிகாசம் என்றறியும் புத்தியில்லாத, சரிந்த வயிறுடைய அக்கொடிய ராக்ஷசி அவர்சொன்னசொல்லை உண்மையென்றெண்ணிக் காதலால் மயங்கிச் சீதாதேவி யுடன் பர்ணசாலையில் உட்கார்ந்திருந்த, தெவ்வரை அடக்கும்திறலுடைய, நிகரற்ற பராக்கிரமமுள்ள இராமரை நாடிச்சென்று அவரைநோக்கி "இந்த அழகற்ற, கெட்ட நடக்கையுள்ள, சரிந்தவயிறுள்ள கிழவியை மனைவியாக அடைந்திருக்கிறபடியால் தாங்கள் என்னிடம் அன்பற்

லக்ஷ்மணர் கூறிய மறுமொழி.

றிருக்கிறீர்கள். மனுஷியாகிய இப்பேதையை நானிதோ தாங்கள் பார்த்துக்கொண்டிருக்கப் புசித்துவிடுகிறேன். அதன்பிறகு சக்களத்தி பயமின்றி நான் தங்களுடன்கூடச் சுகமாக வசிக்கிறேன்" என்று சொல்லி, எரிகிற அக்கினி போன்ற கண்ணையுடைய அவ்வரக்கி வெகு கோபத்துடன் உரோகிணி நக்ஷத்திரத்தை ஒரு தூமகேது சீறிச் செல்லுவதுபோல மான்போன்ற பார்வையுடைய சீதையை நோக்கி ஓடினாள். காலபாசத்துக்கொப்பாக அவ்வாறு ஓடிவருவம் அரக்கியை வலிமிகுந்த இராமர் தடுத்து வெகு கோபங்கொண்டு லக்ஷ்மணரைப்பார்த்து "லக்ஷ்மணா, கொடிய குணமுள்ள துஷ்டர்களுடன் விளையாடல் ஒருபொழுதும் கூடாது. சீதையினுடைய உயிருக்கு நாசம்வரப் பார்த்தது. குரூபியும், கொடியவளும், மதம் பிடித்தவளும், வயிறு பெருத்தவளுமான இந்த ராக்ஷசியை உருவங் குலைத்துவிடு" என்றார். இராமர் அவ்வாறு சொல்ல, லக்ஷ்மணர் சூர்ப்பணகையைப் பார்த்து வெகு கோபங்கொண்டு தமது கத்தியை எடுத்து அவளுடைய காதுகளையும் மூக்கையும் அறுத்துவிட்டார். தனது மூக்கும் காதும் வெட்டுண்டவுடன் சூர்ப்பணகை வெகு பயங்கரமாகக் கதறிக்கொண்டு தான் வந்தவழியாகவே காட்டுக்குள் ஓடினாள். மகா கோரமுள்ள அவ்வரக்கி அங்கபங்கமடைந்தவுடன் தேகமெல்லாம் இரத்தம் வழிந்தோட மழைகாலத்தில் மேகமொலிப்பதுபோலச் சத்தமிட்டுக்கொண்டு தனது கைகளை மேலே உயர்த்திக்கொண்டு காட்டில் புகுந்தாள். அதன்பிறகு அவள் கரன் என்ற தனது தமையனிருந்த ஜனஸ்தானத்துக்குச்சென்று ராக்ஷசர்கள் சூழச் சபையில் பயங்கரமாக விளங்கிக்கொண்டிருந்த அவன் முன்பாக ஆகாசத்திலிருந்து இடிவிழுவதுபோலப் போய் விழுந்தாள்.

சூர்ப்பணகை சீதையைக் கொல்ல ஓடியது.

சூர்ப்பணகை மூக்கும் காதும் வெட்டுண்டது.

அதன்மேல் அவள் பயத்தாலும் மோகத்தாலும் மூர்ச்சை யடைந்து அதுதெளிந்தவுடன், அவனுக்கு, சீதா லக்ஷ் மணர்களோடு இராமர் பஞ்சவடியில் வந்திருப்பதையும் தான் அங்கபங்கமடைந்த கதையையும் தன்மேல் இரத்த மோடும் வகையையும் மற்றெல்லாச் சமாசாரங்களையும் தெரிவித்தாள்.

---

## பத்தொன்பதாஞ்சருக்கம்.

இராமரைக்கொல்லக் கரன் பதினான்கு ராக்ஷசத் தலைவர்களை அனுப்பியது.

---

உருவங்குலைந்து, இரத்தம் பெருகிக்கொண்டு, தன் முன் கதறிக்கொண்டு வந்துவிழுந்த தனது தங்கையாகிய சூர்ப்பணகையைக் கரன்பார்த்து மனங் கொதித்து 'எழுந்திரு; உனது பயத்தை யும் கலக்கத்தையும் விட்டு விடு; இவ்வித மாக நீயாரால் உருக்குலைக்கப்பட்டாய் என்பதைத் தெளிவாகச் சொல்லு. ஒரு வருக்கும் எவ்வித உபத்திரவமுஞ் செய்யாமலிருந்த விஷ முடைய கிருஷ்ணசர்ப்பத்தின் வாயில் விளையாட்டாக விரலிட்டவன் எவன்? எவன் இவ்விதமாகத் தனது கழுத்தில் காலபாசத்தை வேண்டுமென்று மாட்டிக் கொண்டு அடுத்த நிமிஷத்தில் தனக்கு வரப்போகிற தீமையை அறியாமலிருக்கிறான்? எவன் இன்று உன்னை இவ்வாறுசெய்து உத்தமமான விஷத்தைப் பானம்பண்ணி னான்? பலமும் பராக்கிரமமும்பொருந்தி, வேண்டிய உருக் கொண்டு, இஷ்டமான இடத்தில் சஞ்சரித்துக்கொண்டு, யமனுக்கொப்பாக விருக்கும் நீ இவ்வித அவஸ்தையை யாரால் அடைந்தாய்? தேவர்கள்,கந்தர்வர்கள், மகாத்து மாக்களான இருஷிகள் ஆகிய இவர்களுள் மகாவீரியம் பொருந்திய யாவன் உன்னை இவ்வாறு அங்கபங்கம் பண்ணினான்? இவ்வுலகத்தில் எனக்குக் கெடுதல் செய்யத்

கரன் மூக்கும் காதும் வெட்டினது யாரென்று வினவியது.

தக்கவன் ஒருவனுமில்லை. பாகாசுரனை வதைசெய்து ஆயிரங் கண்கள் படைத்திருக்கும் இந்திரனானாலும் இருக்கட்டும். அவனை நீருடன் கலந்திருக்கும் பாலைப் பிரித்து அன்னப்பறவை பானம் பண்ணுவது போல, யமனுக்கொப்பான என் பாணங்களால் பிடித்திழுத்து வதைக்கிறேன். என் பாணத்தால் மார்பு பிளக்கப்பட்டு யுத்தத்தில் என்னால் கொல்லப்பட்ட அவன் தேகத்திலிருந்து குமிழியிட்டோடும் இரத்தத்தைப் பூமியானது இன்று குடிக்கட்டும். அவன் இன்று என்னால் யுத்தத்தில் அடிபட்டுமாள அவன் சவத்தைப் பறவைகள் கூட்டங்கூட்டமாக உட்கார்ந்துகொண்டு சந்தோஷமாகக்கிழித்துப் புசிக்கட்டும். என்னால் இந்தக்கேடு செய்யப்படுபவனை யுத்தத்தில் தேவர்கள், கந்தர்வர்கள், பிசாசர்கள், ராக்ஷசர்கள் ஒருவராலும் காப்பாற்ற முடியாது. ஆகையால், மெல்லவாக நீ தெளிவடைந்தவுடன் எந்தத் துஷ்டன் இவ்வாறு உன்னைக் காட்டில் அவமானப்படுத்தினான் என்பதைத் தெரிவி'' என்றான்.

இவ்விதமாக வெகு கோபத்தோடு தனது தமையன் மொழிந்ததைச் சூர்ப்பணகை கேட்டு, கண்ணுங்கண்ணீருமாக அவனைப்பார்த்துச் சொன்னாள் :—"யௌவனமான மிக அழகிய உருவமுள்ளவர்களாய், மகாபலசாலிகளாய், தாமரைபோல விசாலமான கண்களுடையவர்களாய், மரவுரியும் மான்தோலும் உடுத்து, பழங்களையுங் கிழங்குகளையும் புசித்து, வெகுபரிசுத்தர்களாய், ஐம்புலன்களையுமடக்கித் தருமத்தை நடத்தும் தபசிகளாய், கந்தர்வ மன்னவருக்கொப்பானவர்களாய், ராஜலக்ஷணங்கள் அமைந்த தசரதருடைய குமாரர்களான இராமலக்ஷ்மணர்களென்ற இரண்டு சகோதரர்கள் இப்பொழுது இக்காட்டில் வந்திருக்கிறார்கள். அவர்கள் தேவர்களோ அல்லது மனிதர்களோ என்பதையான் அறியேன். எல்லாவிதலக்ஷணமுமமைந்து

சூர்ப்பணகை ராமலக்ஷ்மணர்கள் என்றது.

எல்லாவித நகைகளும் பூண்டிருக்கும் ஒரு அழகான சிறுபெண் அவர்களுடனிருக்கிறாள். அந்தப் பெண்ணின் நிமித்தம் அவர்களால் நான் அநாதையாய் நெறிநீங்கி அலையும் ஒருபெண்போல அவமானம் அடைந்தேன். தீயநெறியில் ஒழுகும் அந்தப்பெண்ணையும் அவர்களையும் சண்டையில் கொன்று அவர்களுடைய இரத்தத்தை நான் நுரையுடன் குடிக்க விரும்புகிறேன். இதுதான் என் முதல் கோரிக்கை. அண்ணா, நீதான் இதை நிறைவேற்றிவைக்க வேண்டும்; அம்மூவர்களுடைய இரத்தத்தையும் சண்டையில் நான் குடிக்கவேண்டும்.'' இவ்விதமாக அவள்சொல்லக் கேட்ட கரன், வெகுகோபங்கொண்டு, யமனுக்கொப்பான மகாபலம் பொருந்திய பதினான்கு ராக்ஷஸர்களைப் பார்த்து "ஆயுதபாணிகளாய் மரவுரி மான்றோல் உடுத்து இரண்டு மனிதர்கள் ஒரு பெண்ணுடன் இந்தப் பயங்கரமான தண்டகாரணியத்துக்கு வந்திருக்கிறார்களாம். அவர்களையும் அக்கொடிய பெண்ணையும் நீங்கள் கொன்றுவிட்டு வரவேண்டும். அம்மூவர்களுடைய இரத்தத்தை என் தங்கை குடிக்கட்டும். ராக்ஷசர்களே, இதுதான் என் தங்கையின் விருப்பம். அவ்விருவர்களையும் உங்கள் பராக்கிரமத்தால் கொன்று இவ்விருப்பத்தைச் சீக்கிரமாக நிறைவேற்றுங்கள்'' என்று கட்டளையிட்டான். அவ்வாறு கட்டளை இடப்பட்ட பதினான்கு ராக்ஷசர்களும் காற்றினால் ஓட்டப்பட்ட மேகங்கள்போல இராமரிருந்த இடத்தை நாடிச் சூர்ப்பணகையுடன் சென்றார்கள். எவ்வளவு கூரான பாணங்களை அவ்வரக்கர்கள் வைத்திருந்தபோதிலும் வெகு காந்தியாலும் பராக்கிரமத்தாலும் விளங்கும் இராமரை வெல்ல அவர்களால் முடியாது. நன்றாகக்கொழுந்துவிட்டெரியுங் காட்டுத்தீயை அணுக்க யானைகளால் முடியுமா?

கரன் ராம லக்ஷமணர்களைக் கொல்லக் கட்டளையிடல்.

---

## இருபதாஞ்சருக்கம்.

இராமர் தம்மைக்
கொல்லவந்த பதினன்கு ராக்ஷசத்தலைவர்களையும் வதைத்தல்.

---

ராக்ஷசத்தலைவர்கள் இராமரைக் கண்டது.

பிறகு அப்பயங்கரமான சூர்ப்பணகை அவ்வரக்கர்களோடு இராமருடைய ஆச்சிரமஞ்சேர்ந்து அவ்விடத்தில் சீதையுடன் உட்கார்ந்திருந்த அவ்விருசகோதரர்களையும் அவர்களுக்குக்காண்பித்தாள். அவர்கள் விதேக நகரத்து இராஜகுமாரியான சீதையோடும் தமது தம்பி லக்ஷ்மணரோடும் உட்கார்ந்திருந்த மகாபலம்பொருந்திய இராமரைக் கண்டார்கள். அவ்வாறு வந்த ராக்ஷசர்களையும் சூர்ப்பணகையையும் இராமர் கண்டு தமது பலத்தால் விளங்கிக்கொண்டிருக்கும் லக்ஷ்மணரைப் பார்த்து, "லக்ஷ்மண, கொஞ்சநேரம் சீதையைக் காத்துக்கொண்டிரு. இவ்விடம் வந்திருக்கும் அரக்கர்களை நான் வதஞ்செய்கிறேன்" என்றார். எல்லாமறிந்த இராமர் சொன்னதைக் கேட்டு லக்ஷ்மணர் "அப்படியேயாகட்டும்" என்று சொல்லி அவ்வாறே செய்தார். உடனே தர்மாத்துமாவாகிய இராமர் தங்கக்கட்டமைந்த தமது பெரிய வில்லை நாணேற்றிக் கையிற் பிடித்துக்கொண்டு அங்கு வந்திருந்த அரக்கர்களைப் பார்த்துப் பின்வருமாறு கூறினர்:—"நாங்களிருவரும் தசரதமன்னவரின் குமாரர்கள். எங்கள்பெயர் இராம லக்ஷ்மணர்கள். எளிதில் கடக்கமுடியாத இத்தண்டகாரணியத்துக்குச் சீதையுடன் நாங்கள் வந்திருக்கிறோம். நாங்கள் பழங்களையும் கிழங்குகளையும் புசித்துப் புலன்களை அடக்கித் தவஞ்செய்துகொண்டு தருமநெறி தவறாது இந்தத் தண்டகாரணியத்தில் வசித்துக்கொண்டிருக்கிறோம். எங்களைநீங்கள் ஏன் இம்சிக்க வந்தீர்கள். இருஷிகள்

இராமர் ராக்ஷசர்களை ஓடிவிடும்படி சொல்லல்.

நடத்தும் பெரிய யாகங்களுக்கு எப்பொழுதும் இடையூறியற்றும் பாபிகளாகிய உங்களை வதைக்கவேண்டுமென்று, அவர்களுடைய வேண்டுகோளின்படி, நான் எனது பாணங்களையும் மற்ற ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு இங்கு வந்திருக்கிறேன். என்னுடன் போர்புரிய வேண்டுமென்ற எண்ணமிருந்தால் இவ்விடமே பின் வாங்காமல் நில்லுங்கள். அல்லது இவ்வுலகத்தில் உங்களுக்கு உயிருடனிருக்க வேண்டுமென்ற ஆசையிருந்தால் இவ்விடம் விட்டு, நிசாசரர்களே, ஓடிவிடுங்கள்.'' எப்பொழுதும் பிராமணர்களை வதைக்குங் குணமுடையவர்களான சூலந்தரித்த கையுடைய அப்பதினான்கு ராக்ஷசர்களும் இராமர்சொன்ன சொல்லைக் கேட்டு வெகு கோபங்கொண்டு அவரை நோக்கி "மிக்க பெருமைபொருந்திய எங்கள் அரசன் கரனுக்கு நீ கோபமுண்டாகும்படி நடந்துவிட்டபடியால் நீதான் இன்று யுத்தத்தில் எங்களால் வதைக்கப்பட்டு உன்னுடைய பிராணனை இழக்கப்போகிறாய். ஒருவனாகிய உனக்குப் பலராகிய எங்கள்முன் செருமுகத்தில் எதிர்த்து நிற்க என்ன பலமுண்டு? அப்படியிருக்க, எங்களுடன்போர் புரிய வந்துள்ள உன்னை நாங்கள் என்னசொல்வது? எங்கள் கையிலிருந்து விடப்படும் கதைகளாலும், சூலங்களாலும், கத்திகளாலும் உனது பிராணனையும் பலத்தையும் அவ்வாறே உன்து கையிற்பிடித்திருக்கும் வில்லையும் நீ இழக்கப்போகிறாய்'' என்று கூறி, வெகு கோபத்துடன் அப்பதினான்கு அரக்கர்களும் ஒருவராலும் எதிர்க்கமுடியாத இராமர்மேல் தாங்கள் கையில் பிடித்திருந்த சூலங்களை விசைகொண்டு எறிந்தார்கள். அவ்விதமாகத் தம்மீது விடப்பட்ட பதினான்கு சூலங்களையும் இராமர் பொன்னிழைத்த பாணங்களைச் செலுத்தித் துணித்தெறிந்தார். பிறகு வெகு கோபங்கொண்டு இராமர் சூரியனுக்கொப்பாகிய, கல்லையுந் துளைக்குங் கூர்மையுள்ள பதினான்கு பாணங்க

ராக்ஷசத்தலைவர்கள் யுத்தம்.

ளைக் கையிலெடுத்து, தமது வில்லை நேராக நிறுத்தி அதில் பூட்டி, அவ்வரக்கர்களைச் சரியாகக் குறிப்பிட்டு, இந்திரன் தனது வச்சிராயுதத்தை விடுவதுபோல விடுத்தனர். தங்கமிழைத்து மின்னிக்கொண்டிருந்த அப்பாணங்கள் வெகு வேகமாகச் சென்று அரக்கர்களுடைய மார்புகளைப் பிளந்து இரத்தத்தில் தோய்ந்து இடிமுழக்கம்போலக் கர்ச்சித்துக்கொண்டு பூமியில் விழுந்தன. அரக்கர்கள் தங்கள் மார்புகள் பிளவுண்டு தேகம் முழுதும் இரத்தமோடப் பாணத்தால் உடம்புகள் துளைக்கப்பட்டுப் பிராணனை இழந்து வேர்வெட்டுண்ட விருக்ஷங்கள் போலப் பூமியிற் சாய்ந்தார்கள். அவர்கள் அவ்வாறு பூமியில் விழுந்ததைக் கண்ட சூர்ப்பணகை வெகு கோபமடைந்து நடுநடுங்கி அவ்விடத்தில் மிகப் பயங்கரமாகக் கர்ச்சித்தாள். பிறகு அவ்வண்ணம் கர்ச்சித்துக்கொண்டே அவள் வெகு வேகமாகச் சிறிது உலர்ந்த இரத்தத்துடன் கரன்முன் சென்று பட்டை சீவப்பட்டுப் பால் வடிக்கும் சபலகி விருக்ஷம்போலத் தரையில் விழுந்தாள். தனது தமையன் முன்பாக அவள் பெருஞ்சத்தமாகக் கதறினாள்; பின்பு முகம்வாடி அழுது கண்ணீர் விட்டாள். ராக்ஷசர்கள் போரில் மடிந்ததைக் கண்டு அவ்விடம் விட்டோடிப் போன சூர்ப்பணகை தன் தமையனான கரனிடம் அவர்கள் மாண்ட விஷயத்தை ஒன்றும் விடாமல் சொல்லினாள்.

---

## இருபத்தொன்றாஞ்சருக்கம்.

*பதினான்கு ராக்ஷசத்தலைவர்களும் மாண்ட செய்தியைக் கரன் தனது தங்கையிடமிருந்து தெரிந்துகொள்ளல்.*

---

அவ்வாறு மறுபடியும் தன் முன்விழுந்து அழுகின்ற, அழிவுக்குக் காரணமாய் வந்தவளாகிய சூர்ப்பணகையைக் கரன் பார்த்து, அவளிருந்த நிலைமையைக் கண்டு கோபங் கொண்டவனாகி "எப்பொழுதும் இரத்தங்குடிப்

பதில் அதிக ஆசையுள்ள சூரர்களான ராக்ஷசர்களை இப்பொழுதுதான் உனக்காக நான் அனுப்பினேனே, அப்படியிருக்க நீ மறுபடியும் அழவேண்டிய காரணமென்ன? அவர்கள் என்னிடத்து அதிக அன்பும் விசுவாசமும் உள்ளவர்கள்; எப்பொழுதும் என் நன்மையையே நாடி நடப்பவர்கள்; எதிர்த்தவர்களால் கொல்லமுடியாதவர்கள்; என் கட்டளைக்கு அடங்காதவர்களுமல்லர். அப்படியிருக்க ஏன் நீ இப்பொழுது அப்பா, ஐயா, என்று கதறிக்கொண்டு பூமியில் விழுந்து பாம்பு புரளுவதுபோலப் புரளுகிறாய்? அதன் காரணமெனக்குப் புலப்படவில்லை; அதை நான் கேட்கவிரும்புகிறேன். உனக்கு நாதனாகிய நான் இருக்கையிலேயே நீ ஏன் அநாதைபோல் புலம்புகிறாய். எழுந்திரு; எழுந்திரு. உனது பயத்தை விட்டுவிடு" என்று கூறினான். கரனால் சாந்தம்பண்ணப்பட்ட அந்த அடங்காத அரக்கி தனது கண்களைத் துடைத்துக்கொண்டு தமையனைப் பார்த்து, "காதுகளும் மூக்கும் வெட்டுண்டு இரத்தஞ் சொரிய நான் தங்களிடம் வந்தேன். தாங்கள் என்னை அன்பாகச் சமாதானம் பண்ணிவைத்தீர்கள். பதினான்கு ராக்ஷச வீரர்களையும் என் பொருட்டு அனுப்பினீர்கள். என் மனதைக் களிப்பிக்க அவர்களை இராமனையும் லக்ஷ்மணனையும் வதைக்கக் கட்டளையிட்டீர்கள். கையில் தரித்த சூலங்களையும் கத்திகளையும் உடைய கோபிகளான அவ்வரக்கர்கள் மார்பைப் பிளந்து சென்ற பாணங்களால் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். மகாபலம்பொருந்திய அவர்கள் ஒரு நொடியில் மாண்டு பூமியில் விழுந்ததையும், இராமனது ஆச்சரியமான செய்கையையும் கண்டு எனக்குப் பெரும்பய முண்டாயிருக்கிறது. என் ராக்ஷச சிங்கமே, நான் பயந்து நடுங்கிக் குலைகுலைந்திருக்கிறேன். நான்கு பக்கங்களிலும் பயம்வரக்

கரன் சூர்ப்பணகையைத் துக்கத்திற்குக் காரணம் வினவல்.

சூர்ப்பணகை கரனை இகழ்தல்.

கண்டு நான் உன்னைச் சரணமடைந்தேன். சோகமாகிய பெருமுதலைகளையும் பயமாகிய அலைகளையுமுடைய இந்தத் துக்கசாகரத்தில் மூழ்கியிருக்கும் என்னை நீ காப்பாற்ற மாட்டாயா? அங்கே சென்ற மாமிச பக்ஷணிகளாகிய அரக்கர்கள் எல்லாரும் இராமனுடைய கூர்மையான அம்புகளால் மடிந்துவிட்டார்கள். என்மீதும் அவ்வரக்கர்கள் மேலும் உனக்குக் கருணை இருப்பதும் இராமர் முன்நின்று போர்புரிய உனக்குச் சக்தி இருப்பதும் உண்மையானல், இப்பொழுது தண்டகாரணியத்தில் குடிவந்த இவ்வரக்கர்குல கோடரியை நீ நாசம் பண்ண வேண்டும். எனக்குச் சத்துருவாகிய இராமனை நீ இன்று கொல்லாவிடில், நான் வெட்கம் மானம் என்பவைகளை விட்டு நின் கண்முன்பாக என் உயிரை விட்டுவிடுவேன். இராமன் முன்பாகச் செருமுகத்தில் சைநியங்களுடன் எதிர்த்து நின்று பெரும்போர் செய்ய உன்னல் முடியாதென்று என் புத்திக்குத் தோன்றுகிறது. நீ நின்னை நின் மனத்தில் வெகு சூரனுக எண்ணிக்கொண்டிருக்கிருய்; ஆனல் உண்மையாக நீ சூரனல்லன். நின்னிடத்தில் வீரமுண்டென்பது பொய். மானுடர்களாகிய இராம லக்ஷ்மணர்களை நின்னல் கொல்ல இயலாதாயின், அரக்கர் குலநாசகா, வலியில்லாத நீ இவ்விடத்தில் எங்ஙனம் வசித்தல்கூடும்? நீ நின் உறவினர்களுடன் தாமசமின்றி இந்த ஜனஸ்தானத்தை விட்டோடிப்போ. இராமனுடைய பராக்கிரமத்தால் வெகு சீக்கிரத்தில் தோல்வியடைந்து மாண்டுவிடப்போகிருய். ஏனெனில், தசரதகுமாரனுன இராமன் வெகு பராக்கிரமமுள்ளவன். என்னை உருக்குலைத்த அவன் தம்பி லக்ஷ்மணனும் அதிக வீரமுள்ளவன்" என்ருள். பெரிய வயிற்றையுடைய அந்த அரக்கி இவ்வாறு நெடுநேரம் புலம்பித் தனது கைகளால் மார்பிலடித்துக்கொண்டு வெகு துக்கத்துடன் கதறினள்.

---

## இருபத்திரண்டாஞ்சருக்கம்.

*கரன் பதினாலாயிரம் ராக்ஷசர்களுடன் யுத்தத்திற்குச் சென்றது.*

---

அரக்கர்கள் மத்தியிலிருந்த மகாசூரனாகிய கரன், சூர்ப்பணகை இவ்வாறு இடித்திடித்துச் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டுச் சகிக்கமுடியாதவனாகி, அவளைப்பார்த்து "அம்மா, நீ சொன்ன அவமானச் சொற்களால் எனக் குண்டாயிருக்குங் கோபத்துக்கு அளவேயில்லை. பொங்கி வரும் சமுத்திரத்தைத் தாங்கமுடியாத கரைபோல் அதனை என்னால் சகிக்கமுடியவில்லை. என் வீரத்துக்கு மானுடனாகிய இராமனை நானொரு பொருளாக எண்ணவேயில்லை. தான் செய்த குற்றத்திற்காக அவன் இன்று என்னால் வதைக்கப்பட்டுத் தன் பிராணனை இழக்கப்போகிறான். ஆகையால், நீ கண்ணீரைச் சொரிவதை அடக்கு; உன் பயத்தை விட்டுவிடு. நானின்று இராமனை அவன் தம்பியுடன் யமன்வீட்டுக்கு அனுப்பி விடுகிறேன். போரில் கோடரியால் பிளக்கப்பட்டு உயிரற்று விழுந்த இராமனுடைய இரத்தத்தைச் சுடச்சுட நீ இன்று குடிக்கலாம்" என்றனன். இவ்வாறு அவன் சொன்னதைக்கேட்ட சூர்ப்பணகை வெகு சந்தோஷமடைந்து ராக்ஷசர்களுக்குள் உத்தமனான தனது தமையனைத் தனது ஸ்திரமற்ற புத்தியினால் மறுபடி புகழ்ந்து கூறினாள். இவ்விதமாக முதலில் அவளால் தூஷிக்கப்பட்டுப் பிறகு புகழப்பட்ட கரன், தனது சேனாபதியான தூஷணனைப்பார்த்து, "அன்பனே, எனது சொற்றவறாமல் நடப்பவர்களும், அஞ்சத்தக்க வேகத்தை உடையவர்களும், போர்முகத்தில் பின் வாங்காமல் நிற்கும் திறலுள்ளவர்களும், நீலமேகம் போலக்

*கரன் சூர்ப்பணகையைச் சமாதானம் செய்தல்.*

*கரன் யுத்தத்திற்குப் புறப்படல்.*

கரிய தேகத்தை உடையவர்களும், கொடுமைசெய்தலைத் தங்களுக்கு விளையாட்டாகக் கொண்டவர்களும், புலிகள் போலச் செருக்குள்ளவர்களும், பெருவாயும் பெரும்பலமும் படைத்தவர்களும், பராக்கிரமமுள்ளவர்களுமான பதினாலாயிரம் ராக்ஷசர்களைத் தண்டுசேர். என் அன்பனே, எனது இரதத்தையும் எனது வில்லையும் பாணங்களையும் வாள்களையும் கூரிய பல வேல்களையும் கொண்டுவா. போரில் வல்லோனே, செருக்குற்ற இந்த இராமனை வதைக்கப் பெருமிதமுள்ள ராக்ஷசர்களுக்கு முதலில் நானே போகிறேன்" என்றனன். இவ்வாறு கரன் சொல்லத் தூஷணன் அநேக வித வர்ணமுடைய குதிரைகளைப் பூட்டிச் சூரியனுக்கொப்பாகிய காந்தியையுடைய இரதத்தைக் கொண்டுவந்தனன். மேருமலையின் சிகரம்போல் விளங்குவதும், மாற்றுயர்ந்த தங்கத்தால் இழைக்கப்பட்டதும், தங்கச் சக்கரங்களை யுடையதும், சிறந்ததும், வைடூரிய மணிகளிழைத்த நுகத்தடியையுடையதும், தங்கத்தால் இயற்றப்பட்ட மீன்கள், புஷ்பங்கள், மரங்கள், மலைகள், சந்திரன், சூரியன், மங்கள வஸ்துக்கள், பறவைக்கூட்டங்கள், நக்ஷத்திரங்கள் முதலிய சித்திர வேலைகள் செய்யப்பட்டதும், கொடிகளையும் வாள்களையுமுடையதும், மணிகள் கட்டப்பட்டதும், மிக்க அழகான குதிரைகள் பூட்டப்பட்டதுமான அந்த இரதத்தின்மேல் கரன் வெகுகோபத்தோடு ஏறினான். தேரிலேறி இரதங்களும் ஆயுதங்களும் கொடிகளும் நெருங்கிய பெரிய சேனையிலுள்ள ராக்ஷசக் கூட்டங்களைப் பார்த்துக் கரனும் தூஷணனும் "நடவுங்கள்" என்று சொன்னார்கள். உடனே பெரிய அட்டகாசம்பண்ணிக்கொண்டு வெகு வேகமாகக் கைகளில் கதைகள், பட்டிசங்கள், சூலங்கள், கூரிய கோடரிகள், வாள்கள், சக்கரங்கள், மிகவழகாகப் பிரகாசிக்கும் வல்லயங்கள், ஈட்டிகள், குண்டாந்தடிகள், பெரியவில்லு

கரனுடைய ரதம்.

கள், முசலங்கள், அரிவாட்கள், பார்ப்பதற்குப் பயங்கரமான வச்சிராயுதங்கள்முதலியவைகளை எடுத்துக்கொண்டு கொடிய பதினாலாயிரம் ராக்ஷசர்கள் கரனுடைய எண்ணப்படி நடப்பவர்களாய் ஜனஸ்தானத்தை விட்டுக் கிளம்பினார்கள். பயங்கரமான பராக்கிரமம்பொருந்திய ராக்ஷசர்கள் அவ்வளவு வேகமாக ஓடுவதைக்கண்டு கரனுடைய இரதம் சற்று விலகி நின்று, சிறிதுநேரம் பொறுத்துச் சென்றது. அதன்பிறகு கரனுடைய அநுமதிபெற்று, பொன்னினல் அலங்கரிக்கப்பட்டு விளங்கும் வலிமை மிக்க குதிரைகளைச் சாரதி வேகமாக ஓட்டலானுன். அவ்வாறோட்டப்பட்ட சத்துருக்களை வதைக்கும் பராக்கிரமமுள்ள கரனுடைய இரதம் சத்தத்தால் எண்டிசைகளையும் நிரப்பிற்று. பெருஞ் சப்தத்தையுடைய கரனும் மிகச் சினந்து யமன்போலத் தனது சத்துருவைக் கொல்வதற்கு விரைந்து சீறிக்கொண்டு கன்மழைபொழியும் பெரிய மேகம்போல முழங்கிச் சாரதியை இரதத்தை ஓட்டும்படி ஏவினுன்.

---

## இருபத்துமூன்றுஞ்சருக்கம்.

### கரன் படையெழுந்தபொழுது உண்டான அபசகுனங்கள்.

---

அவ்வாறு கரனுடைய கொடிய அமங்களமான படை செல்லுகையில், ஆகாசத்தில் ஒரு கார்மேகந் தோன்றிப் பயங்கரமாகக் கர்ச்சித்துக் குருதிமழை பொழிந்தது. அவன் இரதத்தில் கட்டியிருந்த மகாவேகமுள்ள குதிரைகள் புஷ்பங்கள் சொரிந்து சமதரையாகவிருந்த ராஜமார்க்கத்தில் இடறென்று விழுந்தன. சூரியனுக்கயலில்சிவந்த ஓரத்தையுடைய கொள்ளிக்கட்டை போன்ற ஒரு கறுப்புவட்டந் தோன்றிற்று. பருத்த உட

கரனுக்குண்டான அபசகுனம்.

லும் பயங்கரமான தோற்றமுமுடைய பருந்தொன்று வந்து அவன் கொடியையணுகி உயர்ந்த தங்கக்கொடிக் கம்பத்தில் உட்கார்ந்தது. வெடித்த குரலையுடைய மாமிசத்தைப்புசிக்கும் மிருகங்களும் பறவைகளும் ஜனஸ்தானத்துக்கருகில் அபசுரமாகக் கத்தத் தலைப்பட்டன. சூரியன் உதிக்கின்ற கிழக்குத் திக்கில் பெருங்குரலையுடைய பயங்கரமான நரிகள் அரக்கர்களுக்கு அபசகுனமாக ஊளையிட்டன. ஜலத்தையும் இரத்தத்தையும் தரித்துக்கொண்டு பயங்கரமான கார்மேகங்கள் இந்திரன் வச்சிராயுதத்தால் செதுக்கப்பட்ட மலைகளைப்போல் ஆகாசத்தை மூட, பார்ப்பவர்கள் மயிர்க்கூச்செறியும்படியாக ஒரு பெரிய இருள் தோன்றித்திசைகளையெல்லாம் மறைத்தது. அகாலத்தில் இரத்தத்தால் நனைந்த துணிபோலச் செக்கர் மேகந் தோன்றிற்று. மிருகங்களும் பறவைகளும் கரனுக்கெதிரில் நின்று பயங்கரமாகச் சத்தித்தன. பருந்தும், கோமாயுவும், கழுகும், பயம் வந்துவிட்டதென்பதைத் தெரிவித்துக் கத்தத் தலைப்பட்டன.

எப்பொழுதும் யுத்தத்துக்கு அபசகுனமான நரிகள் பயங்கரமான தோற்றத்துடன் நெருப்புப் பொறியைக் கக்குகின்ற தங்கள் வாயைப் பிளந்துகொண்டு படைக்கெதிர்முகமாக நின்று ஊளையிட்டன. சூரியனுக்குச் சமீபத்தில் தலையற்ற முண்டமொன்று கதைபோல் ஆகாசத்தில் காணப்பட்டது. அன்று பூரணை இல்லாதிருப்பினும் சூரியனை இராகு பற்றிற்று. கொடிய சுழல்காற்று வேகமாக வீசிற்று; சூரியனும் ஒளி இழந்து தோன்றினன். இராக்கால மல்லவாயினும் ஆகாயத்திலிருந்து மின்மினிப் பூச்சிபோல நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன. குளங்களில் மீன்களும் பறவைகளும் செயலற்றிருந்தன; தாமரைப் புஷ்பங்கள் வாடிப்போயின. அப்போது விருக்ஷங்கள் புஷ்பங்களையும் பழங்களையும் இழந்தன. காற்றில்லாமலே மேகம்போலக் கறுப்பாகப் பூதூளி கிளம்பிற்று. கிளிகள் வீசீ கூசீ யென்று சுரந்தப்பிக் கத்தின. இடி

முழக்கங்களுடன் பயங்கரமான எரிநக்ஷத்திரங்கள் வீழ்ந்தன. மலைகளுடனும் காடுகளுடனும் பூமி கிடுகிடு என்று நடுங்கிற்று. இரதத்திலிருந்து கர்ச்சித்துக்கொண்டிருக்கும்பொழுதே, கரனுக்கு இடதுதோள் துடித்தது; வாய் குழறிற்று; கண்களிலிருந்து நீரோடிற்று; தலைவலி உண்டாயிற்று. இவ்வாறுயும் புத்தியின்மையால் கரன் திரும்பவில்லை. பயங்கரமான இந்த அபசகுனங்களையெல்லாம் பார்த்துச் சிரித்து, தன் சேனையிலிருந்த ராக்ஷசர்களை நோக்கிப் "பலமுள்ளவன் எவ்வாறு பலமற்றவர்களை ஒரு பொருளாக எண்ணமாட்டானோ அதுபோல் இப்பொழுது பயங்கரமாக உண்டாகும் இப்பெரிய அபசகுனங்களை நான் ஒருபொருளாக எண்ணவேயில்லை. கூர்மையான எனது பாணங்களால் நக்ஷத்திரங்களைக் கூட ஆகாசத்திலிருந்து கீழே விழச்செய்வேன். இஷ்டப்பட்டால் நான் யமனையும் சாம்படி செய்வேன். செருக்குற்றுத் துள்ளிக்கொண்டிருக்கும் இராமனையும் அவன் தம்பியையும் எனது கூரியபாணங்களால் கொல்லாமல் நான் திரும்பவேமாட்டேன். இராமனும் லக்ஷ்மணனும் மதிமயங்குதற்குக் காரணமான என் தங்கை அவர்களுடைய இரத்தத்தைக் குடித்துத் தனது மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ளட்டும். இதுவரையில் நான் சண்டையில் ஒருபொழுதும் தோல்வி அடைந்ததே யில்லை. இது உங்களுக்கு நேரில் தெரிந்த சங்கதிதான். நான் பொய்சொல்லுகிறவனல்லன். கையில் வச்சிராயுதம் தரித்து மதம் பிடித்த ஐராவதத்திலேறிச் செல்லுந் தேவேந்திரனைக் கூட நான் செருவில் வதைக்கவல்லவனாயிற்றே! அப்படியிருக்க, இந்த இரண்டு மானிடர்கள் எனக்கொரு லக்ஷயமா?" என்றான். காலபாசத்தைக் கழுத்தில் மாட்டிக்கொண்டிருந்த அவ்வரக்கர் பெரும்படை கரன் இவ்வாறு சொன்னதைக் கேட்டு அடங்காத ஆனந்தமடைந்தது.

கரனுடைய வீரவார்த்தை.

இராமருக்கும் கரனுக்கும் நடக்கப்போகிற யுத்தத்தைப் பார்ப்பதற்காக மகாத்துமாக்களாகிய ரிஷிகள், தேவர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், சாரணர்கள் எல்லாரும் அவ்விடம்வந்து சேர்ந்தார்கள். அவர்கள் தங்களுக்குள் "இவ்வுலகத்திலுள்ளபசுக்களுக்கும், பிராமணர்களுக்கும், இவ்வுலகத்து நன்மையை நாடியிருக்கிறவர்களுக்கும் நன்மையுண்டாகுக. இராமர் புலஸ்திய வம்சத்தில் பிறந்த அரக்கர்களெல்லாரையும் யுத்தத்தில் வெல்லுக. சக்கராயுதத்தைக் கையிற்பற்றிய விஷ்ணுபகவான் எவ்வாறு அசுரர்களை வென்றாரோ அவ்வாறு இராமர் அரக்கர்களை வெல்லுக" என்று பேசிக்கொண்டார்கள்.

தேவாதிகள் இராமரை வாழ்த்தல்.

இவ்விதமாகவும் இன்னும் பலவிதமாகவும் சொல்லிக்கொண்டு யுத்தத்தைக் காண ஆவல்கொண்டு தேவதைகள் தங்கள் விமானங்களில் அங்குவந்து சேர்ந்து ஆயுள் மாய்தலினால் யுத்தத்திற்கு வந்துகொண்டிருந்த அரக்கர்களைக் கண்டார்கள். கரன் இரதத்திலேறித் தனது பயங்கரமான சேனையின் முன்வந்து நின்றான். அவன் அவ்வாறு நின்றதைக் கண்ட, சியேனகாமி, பிருதுக்கிரீவன், யக்ஞசத்துரு, விஹங்கமன், துர்ஜயன், கரவீராக்ஷன், பருஷன், காலகார்முகன், மேகமாலீ, மகாமாலீ, சர்ப்பாசியன், உதிராசனன் என்ற மகாவீரர்களான பன்னிரண்டு ராக்ஷசர்கள் கரனைச் சூழ்ந்துநின்றார்கள். தூஷணனுக்குப் பின்னர், மஹாகபாலன், ஸ்தூலாக்ஷன், பிரமாதி, திரிசிரன் என்ற நான்கு சேனைத்தலைவர்கள் சென்றார்கள். பயங்கரமான அந்த அரக்கர்பெருஞ்சேனை இராமலக்ஷ்மணர்களை நோக்கி, அங்காரகன் முதலிய கிரகங்கள் சந்திர சூரியர்களை எதிர்த்துச் செல்லுவதுபோல, அதிவேகத்துடன் சென்றது.

## இருபத்துநான்காஞ்சருக்கம்.

*கரன்சேனை வரக்கண்ட இராமர் சீதையை அழைத்துக்கொண்டு குகைக்குள் சென்றிருக்கும்படி லக்ஷ்மணருக்குக் கட்டளையிட்டுவிட்டுத் தாம் யுத்தம்பண்ணச் சித்தமானது.*

---

பராக்கிரமமுள்ள கொடிய கரன் இராமரது ஆச்சிர மத்துக்குச் சமீபத்தில் வரும்பொழுது அவர் தமது தம்பி யுடன் அங்குண்டான அபசகுனங்களையெல்லாம் கண் டார். அப்பயங்கரமான நிமித்தங்களைக் கண்டு இரா மர் தமது தம்பி லக்ஷ்மணரைப்பார்த்து "மகா பலம்பொருந்தியவனே, எல்லாப் பிராணிகளையும் ஒழித்துவிடக் கூடிய இப்பெரிய நிமித்தங்களைப் பார்! இவைக ளெல்லாம் இப்பொழுது ராக்ஷசர்கள் நாசத்துக்காக வே தோன்றுகின்றன. வெகு பயங்கரமாகக் கர்ச்சித்துக் கொண்டு ஆகாசத்தில் தோன்றியிருக்கும் கழுதை வர்ணமான மேகங்கள் இரத்தமழை பொழிகின்றன; அவைகளைப்பார். யுத்தம்வந்துவிட்டதென்று களிக்கும் எனது பாணங்களைப்பார்; அவைகள் சந்தோஷத்தால் புகையைக்காலுகின்றன. பின்பக்கத்தில் தங்கத்தகடு தைக் கப்பட்ட எனது விற்களும் சந்தோஷத்தால் சுழலுகின் றன. காட்டில் உள்ள பறவைகள் கூவுகிறதைப் பார்த் தால் பிராணபயம் வந்திருக்கிறதென்று தோன்று கிறது. பெரும்போர் இப்பொழுது விளையப்போகிற தென்பதற்குச் சந்தேகமேயில்லை. ஆனால், அடிக்கடி துடிக் கும் எனது வலக்கை நமக்கு வெற்றியுண்டாகு மென்ப தையும் சத்துருக்களுக்குத் தோல்வியுண்டாகப் போகிற தென்பதையுங் காட்டுகிறது. வீரனே, உனது முகம்

இராமர் லக்ஷ்மணரைச் சீதையைக் காக்க ஏவல்.

வெகு தெளிவாயும் சந்தோஷகரமான ஒளியை உடைய தாயும் இருக்கிறது. தம்பி லக்ஷ்மணா, நம்மோடு சண்டை செய்ய எத்தனித்து வருகிறவர்களுடைய முகம் காந்தி யற்று அவர்களுக்கு ஆயுள் போய்விடும் என்பதைக் காட்டுகிறது. கொடிய செயல்களைப்புரியும் ராக்ஷசர்க ளுடைய கர்ச்சனையோடுகூட அவர்களது பேரியின் முழக்கமும் கேட்கின்றது. புத்திமானாயிருக்கப்பட்டவன் தனக்கு ஆபத்து வரப்போகிறதென்று எப்பொழுதுசந்தே கிக்கிறானோ அப்பொழுதே அதை வருமுன்னரே தடுக்க வேண்டிய பிரயத்தனங்கள் பண்ணவேண்டுமன்றோ? அப் பொழுதுதான் அவனுக்கு நன்மையுண்டு. ஆகையால் நீ உன்கையிற் பாணங்களையும் விற்களையும் சித்தமாக எடுத் துக்கொண்டு வைதேஹியோடு நான்குபக்கங்களிலும் மர மடர்ந்து ஒருவரும் எளிதில் அணுகக்கூடாத அம்மலையின் குகையில் போயிரு. என்பேச்சை நீ தட்டக்கூடாதென்று நானுன்னைக் கட்டளையிடுகிறேன். ஆகையால், நீ தாமதிக் காமல் உடனே செல். நீ சூரனென்பதிலும் வீரனென்பதி லும் இவ்வரக்கர்கள் எல்லாரையும் ஒருவனாகவே வதைக்க வல்லமையுள்ளவன் என்பதிலும் ஐயமேயில்லை. ஆனால் இவ்வரக்கர்களெல்லாரையும் நானே தனியாய் வதைக்க விரும்புகிறேன்" என்று சொன்னார். இவ்விதமாக இராமர் சொல்லியதைக் கேட்டு, லக்ஷ்மணர் வில்லையும் அம்பையும் கையிலெடுத்துக்கொண்டு சீதையுடன் ஒருவராலும் அணு கக்கூடாத குகையொன்றைச் சேர்ந்தார். லக்ஷ்மணர் அவ்வண்ணம் சீதையை அழைத்துக்கொண்டு குகை சேர, இராமர் "நாம் சொன்னபடி நமது தம்பிநடத்தி னன்" என்று சந்தோஷமடைந்து தமது கவசத்தை யெடுத்து அணிந்துகொண்டார். அக்கினிக்குச் சமமான கவசத்தைப் பூண்ட இராமர் இருட்டறையில் விளங் கும் புகையில்லாத நெருப்புப் போலப் பிரகாசித்தார். அவர் கையில் வில்லை ஏந்திப் பாணங்களைத் தெரிந்து

கொண்டு எத்திசையிலும் நாண் சத்தத்தைக் கேட்பித்து நின்றார்.

இவர்களுக்குள் நடக்கப்போகிற யுத்தத்தைப்பார்க்க மகாத்துமாக்களாகிய தேவர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், சாரணர்கள், மகாத்துமாக்களாகிய முநிவர்கள், உலகத்திலுள்ள முக்கியமான பிரமரிஷிகள் எல்லாரும் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். அப்புண்ணியாத்மாக்கள் ஒன்று சேர்ந்துதங்களுக்குள் "இவ்வுலகத்திலுள்ள பசுக்கள் அந்தணர்கள் இன்னும் இவ்வுலகத்தின் நன்மையைக் கருதியிருக்கப்பட்டவர்கள் எல்லாருக்கும் க்ஷேமமுண்டாகட்டும். சக்கரபாணியான விஷ்ணுபகவான் எவ்வாறு அசுர வீரர்களை வென்றாரோ அதுபோல இராமரும் புலஸ்திய வம்சத்தில் பிறந்த ராக்ஷசர்களையெல்லாம் வெல்லட்டும்" என்றார்கள். அன்றியும் அங்குவந்த ராஜரிஷிகளும் சித்தர்களும் அந்தணசிரேஷ்டர்களுடைய கூட்டங்களும் வெகு வியப்புடன் "கொடிய செயல்கள்புரியும் அரக்கர்கள் பதினாலாயிரம்பேர் ; இராமர் ஒருவர் ; இவர்களுக்குள் யுத்தம் எவ்வாறு நடக்கப்போகிறதென்பதைப் பார்க்க வேண்டும்" என்றார்கள். இவ்விதமாக ராஜரிஷிகளும், சித்தர்களும், பிராமணோத்தமர்களின் கூட்டங்களும், தேவதைகளும் வெகுவியப்புடன் தங்கள் தங்கள் விமானங்களில் காத்துக்கொண்டு நின்றார்கள். செருக்களத்தில் பெருமிதத்துடன் இராமர் நிற்பதைக்கண்ட பிராணிகளெல்லாம் பயத்தால் நடுநடுங்கின. மாசற்றசெயலுள்ள இராமருடைய ஒப்பற்ற உருவம் அப்போது பிநாகபாணியாகிய ருத்திர மூர்த்தியுடைய உருவம்போல மிகப் பயங்கரமாக விளங்கிற்று. அரக்கர்சேனை வெகு கம்பீரமாகக் கர்ச்சித்துக் கொண்டு, பயங்கரமான கவசங்களையணிந்து, ஆயுதங்களைக் கையிலேந்தி, கொடிகளை எடுத்துக்கொண்டு, அவ்வாச்சிரமத்தை நான்குபக்கங்களிலும் வந்து சூழ்ந்தது. அச்சமய

தேவாதிகள் இராமரை வாழ்த்தல்.

அரக்கர்கள் இராமரை வந்து சூழல்.

த்தில் அரக்கர்களில் சிலர் சிங்கம்போலக் கர்ச்சித்துக்கொண்டும், ஒருவரை நோக்கி ஒருவர் அட்டகாசம் பண்ணிக்கொண்டும், விற்களை வளைத்துக்கொண்டும், அடிக்கடி கொட்டாவிவிட்டுக்கொண்டும், வெகு பயங்கரமாகப் பலவித சத்தங்கள் பண்ணியும் பேரிகளை அடித்தும் அக்கானகத்தை ஒலிக்கச்செய்துகொண்டும் அங்குவந்து சேர்ந்தார்கள். காட்டில் உள்ள மனிதர்களும் மிருகங்களும் அச்சத்தத்தைக்கேட்டு நடுங்கிச் சத்தமற்ற இடத்தைநாடிப் பின்னே திரும்பிப்பாராமல் ஓடினார்கள். கடலுக் கொப்பான அப்பெருந்தானை அநேகவிதமான ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு வெகு கம்பீரமாகவும் அதி வேகமாகவும் இராமரை எதிர்த்துவந்தது. யுத்தத்தில் வல்ல இராமர் நான்குபக்கங்களிலும் பார்த்து யுத்தமுயற்சியுடன் கரனுடைய சைநியம் தம்மை எதிர்த்து வருவதைக் கண்டார். உடனே அவர் வெகுகோபத்துடன் அதிசீக்கிரமாக அவ்வரக்கர்களை வதைக்கும்பொருட்டுத் தமது வில்லை வளைத்துப் பயங்கரமான பாணங்களைத் தூணீரத்தில் இருந்து எடுத்துவைத்துக்கொண்டு சித்தமாக நின்றார். அப்போது அவர் கற்பாந்தத்தில் உண்டாகும் அக்கினிபோல விளங்கினார். அவ்வித காந்தியால் விளங்கும் இராமரைக்கண்டு வனதேவதைகள் கூட நடுங்கினார்கள். கோபத்துடன் நின்ற இராமருடைய தோற்றம் தக்ஷனுடைய யாகத்தைச் சிதைக்கவந்த பிநாகபாணியினுடைய தோற்றம்போலக்காணப்பட்டது. விற்களையும், ஆபரணங்களையும், கொடிகளையும், அக்கினிக்கொப்பானகாந்தியுடைய கவசங்களையும் தரித்து விளங்கும் பிசிதலுணர் சேனை சூரியோதய காலத்தில் ஆகாயத்தில் தோன்றும் நீல மேகங்களின் கூட்டம்போலக் காணப்பட்டது.

---

## இருபத்தைந்தாஞ்சருக்கம்.

கரனுடைய சேனைக்கும் இராமருக்கும் நடந்த பலமான யுத்தம்.

கரன் இராமரை எதிர்த்தல்.

கரன், தன்முன்னேபோன சைநியத்துடன் இராமருடைய ஆச்சிரமத்துக்குச் சென்று, அவ்விடத்தில் பகைவரையடக்கும் பராக்கிரமமுள்ள இராமர் கையில் வில்லேந்தி வெகு கோபமாக நிற்பதைக்கண்டான். அவரைப் பார்த்தவுடன் கரன், வில்லையும், பாணங்களையும் கையில் எடுத்து உயர்த்திக்கொண்டு, அவருக்கு நேர்முகமாக இரதத்தை நடத்தும்படி "ஓட்டு, ஓட்டு" என்று சாரதியை நோக்கிப் பெருஞ் சத்தமாகக் கட்டளையிட்டான். கரனுடைய உத்தரவுப்படி, இராமர் வில்லைப்பிடித்துக்கொண்டு தனிமையாக நின்ற இடத்திற்குக் குதிரைகளைச் சாரதிநடத்தினான். அவ்வாறு கரன் இராமருக்கு எதிரில் சென்றதை அவன் மந்திரிமார்களான அரக்கர்கள் கண்டு அட்டகாசம் பண்ணிக்கொண்டு வந்து அவனைச்சூழ்ந்துநின்றார்கள். அரக்கர்கள் மத்தியில் கரன் இரதத்திலிருந்தது நக்ஷத்திரங்கள் மத்தியில் அங்காரகன் உதித்ததுபோல் விளங்கிற்று. பிறகு, கரன் பெரிய அட்டகாசம் செய்துகொண்டு, ஒப்பற்ற காந்தியால் விளங்கும் இராமர்மேல் ஆயிரம் பாணங்களைத் தொடுத்தான். அவ்வண்ணமே, மற்ற அரக்கர்களும் வெகு கோபத்துடன் வில்லேந்திப் பயங்கரமாக நின்ற இராமர்மேல், அவரை வெல்ல முடியாதென்பதை அறியாமல், பலவித சஸ்திரங்களைப் பொழிந்தார்கள். அன்றியும் அவ்வரக்கர்கள் வெகு மானத்துடனுங் கோபத்துடனும் பெருங்கதைகளையும், கத்திகளையும், சூலங்களையும், பிராசங்களையும், அரிவாட்களையும், கோடரிகளையும் எடுத்துக்கொண்டு இராமரை எதிர்த்தார்கள். நீருண்ட மேகம்போன்ற கரிய தேகங்களையுடைய ராக்ஷசர்கள் சிலர் அட்டகாசம் பண்

ணிக்கொண்டு, தங்கள் பலத்தின் செருக்கால் இரதங்களி லும் குதிரைகளிலும் ஏறி, ஓடிவந்தெதிர்த்தார்கள். சிலர் இராமரை யுத்தத்தில் வெல்லவேண்டி மலைகளின் சிகரங்கள் போன்ற யானைகளைச் செலுத்திவந்தார்கள்.

அரக்கர்களுக்கும் இராமருக்கும் யுத்தம்.

அன்றியும், அவ்வரக்கர் கூட்டங்கள் அநேக மேகங்கள் கூடி இமயபர்வதத்தின்மேல் மழையைத் தாரைதாரையாகப் பொழிவதுபோல் இராமர்மேல் சரவருஷங்களைப் பொழிந்தார்கள். அவ்வாறு அரக்கர்களால் விடப்பட்ட மிக்க கூர்மையான ஆயுதங்களையெல்லாம் ஆறுகளுடைய வெள்ளங்கண் முழுதையும் சமுத்திரம் அடக்கிக் கொள்வதுபோல் இராமர் தமது பாணங்களால் அடக்கினார். வச்சிராயுதத்தால் தாக்கப்பட்ட பெரியமலை எவ்வாறுவருத்தமடையமாட்டாதோ அதுபோல இராமருடைய தேகம் அரக்கர்கள் செலுத்திய பயங்கரமான காந்தியுடைய ஆயுதங்களால் பிளக்கப்பட்டும் கொஞ்சமேனும் வருத்தத்தை அடையவில்லை. ஆனல், மெய்ம்முழுதும் ஆயுதங்கள் பாய்ந்து இரத்தமோடிக்கொண்டிருந்த இராமர் சாயங்காலத்தில் சிவந்த மேகங்களால் மூடப்பட்ட சூரியன் போலவிளங்கினார். இம்மாதிரி அநேக ஆயிரம்அரக்கர்கள் இராமர் ஒருவரைச் சூழ்ந்து போர் புரிவதைத் தேவர்களும், கந்தர்வர்களும், சித்தர்களும் பெரிய ரிஷிகளுங் கண்டு துக்கப்பட்டார்கள். பிறகு இராமர் வெகுகோபங் கொண்டு தமது வில்லைச் சக்கரமாகவளைத்து அதினின்று ஒருவராலுந் தடுக்கமுடியாதனவும், சகிக்க முடியாதனவும், காலபாசத்துக் கொப்பாயினவும், கழுகின் இறகு கட்டப்பட்டனவும், பொற்கட் டமைந்தனவுமான அநேக பாணங்களை நூற்றுக் கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் விளையாட்டுப்போல விடுத்தார். அவ்வாறு இராமரால் விளையாட்டாக விடப்பட்ட பாணங்கள் காலனல் வீசப்பட்ட பாசங்கள்போல அரக்கர்களுடைய உயிர்களை உறிஞ்

சத் தலைப்பட்டன. அவைகள் ராக்ஷசர்களுடைய தேகங்களைப் பிளந்து அவர்களுடைய இரத்தத்தில் தோய்ந்து ஆகாசத்தில் கிளம்பும்பொழுது கொழுந்துவிட்டெரியும் அக்கினியைப்போல விளங்கின. ராக்ஷசர்களுடைய பிராணன்களைப் போக்க இராமருடைய கூர்மையான பாணங்கள் அவருடைய வில்லிலிருந்து கணக்கில்லாமல் வெளிப்பட்டுக் கொண்டிருந்தன. அவைகளால் அவர் அன்று நடந்த யுத்தத்தில் அரக்கர்களுடைய விற்களையும், கொடியின் நுனிகளையும், கவசங்களையும், தலைகளையும், ஆபரணங்களணிந்த தோள்களையும், யானைத்துதிக்கையை ஒத்த துடைகளையும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக் கணக்காகவும் துணித்தெறிந்தார். அன்றியும், சாரதிகளுடன் அழகாகப் பொன்னால் அலங்கரிக்கப்பட்டு இரதத்தில் பூட்டியிருந்த குதிரைகளையும், பாகர்களுடன் யானைகளையும், குதிரைகளுடன் குதிரை வீரர்களையும், காலாட்களையும் இராமர் கொன்று, எல்லாரையும் யமன் மாளிகைக்கனுப்பினர். வெகுகூர்மையான முனைகளும் கொளுக்கிகளுமுடைய நாளீகம், நாராசம் என்ற பாணங்களால் தேகம் முழுமையும் பிளக்கப்பட்ட ராக்ஷசர்கள் வருத்தமடைந்து பயங்கரமாகக் கதறத் தலைப்பட்டார்கள். அரக்கர்சேனை இவ்வண்ணம் இராமருடைய கூர்மையான சரங்களால் துணிபட்டுத் தீப்பட்டெரியும் உலர்ந்த காடு போல் சிறிதும் சௌக்கியம் அடையவில்லை. பயங்கரமான பலம்பொருந்திய அரக்கவீரர்கள் இராமர்முன் ஓடிவந்து நின்று அவர்மேல் சூலங்களையும், கத்திகளையும், கோடரிகளையும்வீசினர்கள். புஜபராக்கிரமமுள்ள மகாவீரரான இராமர் அவைகளைத் தமது பாணங்களால் மாற்றி யுத்தத்தில் அவர்களுடைய தலைகளை அறுத்து உயிரையும் வாங்கினர். அரக்கர்கள் தலையறுபட்டுக் கவசங்களும் விற்களும் துண்டிக்கப்பட்டுக் கருடனுடைய இறக்கைகளின் காற்

இராமர் ராக்ஷசர்களைக் கொல்லல்.

ருல் விருக்ஷங்கள் சாய்ந்தாற்போலப் பூமியில் விழுந்தார்கள். இவ்வண்ணம் அநேகராக்ஷசர்கள் மடிந்தபிறகு மிகுந்திருந்த அரக்கர்கள் இராமரால் விடுக்கப்படும் பாணங்களைச் சகிக்கமுடியாமல் வருந்தி, வெகுதுயரமடைந்து, கரனிடமோடி அவனைச் சரணமடைந்தார்கள். அவர்களெல்லாரையும் தூஷணன் மறுபடி திரட்டித் தைரியப்படுத்தி, தன்வில்லை எடுத்துக் கொண்டு கோபம்கொண்ட யமனைப்போல இராமரை எதிர்த்து அதிவேகமாக ஓடிவந்தான். முதலில் அடிபட்டுத் திரும்பிவந்த அரக்கர்கள் தூஷணனுடைய சார்பால் பயமொழிந்து ஆச்சா, பனை, பாறை முதலியவைகளைக் கைகளில் எடுத்துக்கொண்டு இராமரைநோக்கி ஓடினார்கள். மகாபலம்பொருந்திய சிலர் சூலம், கதை, பாசங்களைக் கைகளில் எடுத்துக்கொண்டு இராமர்மேல் பாணங்களையும் மற்ற ஆயுதங்களையும் மழைபொழிவதுபோலப் பொழிந்தார்கள். சிலர் மரங்களைக் கணக்கில்லாமல் பிடுங்கி வீசினார்கள். வேறுசிலர் பாறைகளையும் மலைகளையும் பிடுங்கி வருஷித்தார்கள். இராமருக்கும் அவ்வரக்கர்களுக்கும் பார்ப்பவர்கள் மயிர்க்கூச்செறியும்படியாக ஆச்சரியமும் பயங்கரமுமான யுத்தம் அன்று நேர்ந்தது. அரக்கர்கள் எல்லாரும் வெகுகோபமடைந்து இராமரை மறுபடியும் நான்கு பக்கங்களிலேயும் சுற்றிக் கொண்டார்கள். அவ்வாறு தம்மைச் சுற்றிக் கொஞ்சமேனும் இடை வெளியில்லாமல் எண்டிசைகளிலும் பாணங்களைப் பொழிந்துகொண்டு ராக்ஷசர்கள் நிற்பதை வெகு பலசாலியான இராகவர் கண்டு, கோபங்கொண்டு, பயங்கரமாகக் கர்ச்சித்து, அவர்கள்மேல், அதிககாந்தியை உடைய கந்தர்வாஸ்திரத்தைத் தொடுத்தார். உடனே சக்கரம்போல் வளைந்த அவருடையவில்லினின்றும் பாணங்கள் ஆயிரக்கணக்காக வெளிப்பட்டன. பத்துத்திசைகளிலும் இராமருடைய பாணக்கூட்டங்கள் வெள்ளிடை

தூஷணன் இராமரை எதிர்த்தல்.

யின்றி நிரம்பின. இராமருடைய பாணங்களால் மாண்ட அரக்கர்கள் அவர் பாணங்களை எவ்விதமாக எடுத்து வில்லில் தொடுத்துவிட்டார் என்பதை அறியவில்லை. இராம பாணங்களால் உண்டான இருள் ஆகாசத்தையும் சூரியனையும் மூடினது. இராமர் மேலும்மேலும் பாணங்களைச் சொரிந்துகொண்டே நின்றார். பாணங்கள் வில்லைவிட்டுக் கிளம்பியதும், அரக்கர்களை வதைத்ததும், அரக்கர்களுடல் பூமியில் விழுந்ததும் எல்லாம் ஒரே காலத்தில் உண்டாயின. பாணங்களாலும் ராக்ஷசப் பிணங்களாலும் பூமி மூடுண்டது. இராமருடைய பாணங்களால் துளைக்கப்பட்டும், குத்தப்பட்டும், பிளக்கப்பட்டும், தறிக்கப்பட்டும் ஆயிரக்கணக்காய் உயிரிழந்த ராக்ஷசர்கள் அங்கங்கு காணப்பட்டார்கள். அப்பொழுது போர்க்களம் தலைப்பாகை தரித்த தலைகளாலும், அங்கதங்க ளணிந்த புஜங்களாலும், பற்பல ஆபரணங்களாலும், அறுபட்ட முழங் கால்களாலும், துடைகளாலும், பிளக்கப்பட்ட குதிரைகளாலும், யானைகளாலும், அநேக இரதங்களாலும், துவஜங்களாலும், சாமரைகளாலும், குடைகளாலும், ஆலவட்டங்களாலும், இராமபாணத்தால் துண்டிக்கப்பட்ட அநேகவித சூலங்களாலும், பட்டிசங்களாலும், கத்திகளாலும், சிதறுண்ட பிராசங்களாலும், கோடரிகளாலும், துகளாக்கப்பட்ட கற்களாலும், சேதிக்கப்பட்ட அநேகவித பாணங்களாலும் நிறைந்து பயங்கரமாகவிருந்தது.

---

## இருபத்தாறுஞ்சருக்கம்.

தூஷணன் வதை.

---

தனது சைசியங்கள் இவ்வாறு கொல்லப்பட்டதைத் தூஷணன் பார்த்து வெகு வேகமுடையவர்களும் பராக்

கிரம முள்ளவர்களும், எளிதில் வெல்ல முடியாதவர்களும், போர்முகத்தில் புறங்காட்டாதவர்களுமான ஐயாயிரம் அரக்கர்களை இராமருடன் போர்செய்யக் கட்டளையிட்டான். அவர்கள் நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு இடைவிடாமல் இராமர்மேல் பாணங்களையும், சூலங்களையும், பட்டிசங்களையும், கத்திகளையும், மலைகளையும், மரங்களையும் மழைபொழிவதுபோலப் பொழிந்தார்கள். உயிரை அழிக்கவல்ல மலை மரங்களின் வருஷத்தைத் தர்மாத்துமாவாகிய இராமர் பாணங்களால் மாற்றினார். அம்மரமாரியைத் தடுத்துவிட்டு ரிஷபம்போன்ற இராமர் அரக்கர்கள் எல்லாரையும் வதை செய்யவேண்டுமென்று கண்களை விழித்துப்பார்த்துப் பெருங் கோபமடைந்தார். அவ்விதமாக அவர் கோபங்கொண்டு, கொழுந்துவிட்டெரியும் தீப்போல விளங்கி, தூஷணன் மேலும் அவன் சைநியத்தின்மேலும் சரமாரிபொழிந்தார். அதைக்கண்டு அரக்கர் படைத்தலைவனாகிய தெவ்வரை அழிக்கும் திறலுள்ள தூஷணன் கோபங்கொண்டு இடிக்கொப்பான பாணங்களை இராமர்மேல் விடுத்தான். இராமர் சினந்து அரிவாள்போன்ற கூரிய பாணங்களால் அவனது பாரமான வில்லை வெட்டி நான்கு பாணங்களால் அவனுடைய நான்கு குதிரைகளையுங் கொன்றார். குதிரைகளைக் கொன்றபின் அவர் ஓர் அர்த்தசந்திரபாணத்தால் சாரதியின் தலையைவெட்டி, இரண்டு பாணங்களைத் தூஷணன் மார்பின்மேல் எய்தார். வில்லற்று, இரதம் அழிந்து, குதிரைகளும் சாரதியும் மாண்டு நின்ற தூஷணன், மலையின் சிகரத்தை நிகர்த்ததும், பொற்பூணமைந்ததும், தேவர்கள் படையை நாசம் பண்ணக்கூடியதும், கூர்மையான இருப்பாணி தைக்கப்பட்டதும், அநேக சத்துருக்களைக் கொன்று அவர்களுடைய கொழுப்பு வழியப்பெற்றதும், வச்சிராயுதம்போல் வலியமைந்ததும், பகை

தூஷணன் யுத்தம்.

வர்களுடைய நகரங்களைத் துகளாக்கும் ஆற்றலுடையதும், மகாநாகம் போன்றதுமான கதை ஒன்றை எடுத்துக் கொண்டு வெகு கொடிய எண்ணத்துடன் இராமரைநோக்கி ஓடினான். அவ்வாறு ஓடிவரும் அக் கொடிய அரக்கனுடைய ஆபரணங்கள் பூண்ட கைகளிரண்டையும் இராமர் இரண்டு பாணங்களால் கண்டங்கண்டார். அப்போது கைகளிலிருந்து நழுவிய திண்ணிய கதை இந்திரன் கொடி அறுபட்டு விழுந்ததுபோலப் போர்க்களத்தில் விழுந்தது. மருப்பொசிந்த மதயானைபோலத் தூஷணன் இரண்டு கரங்களும் வெட்டுண்டு போர்க்களத்தில் சுருண்டு விழுந்தான். அவன் மாண்டுவிழுந்ததைக் கண்ட பிராணிகளெல்லாம் "நல்லகாரியம், நல்லகாரியம்" என்று இராமரைத் தோத்திரம் பண்ணின. அப்போது சேனைத் தலைவர்களான மகாகபாலன், ஸ்தூலாக்ஷன், மகாபலம் பொருந்திய பிரமாதி என்பவர்கள், காலனுடைய பாசத்தில் அகப்பட்டுக்கொண்டு கோபமடைந்து, இராமரை எதிர்த்தார்கள். மகாகபாலன் ஒரு பெரிய சூலத்தையும், ஸ்தூலாக்ஷன் ஒரு பட்டிசத்தையும், பிரமாதி ஒரு கோடரியையும் எடுத்துக்கொண்டு சென்றார்கள். இவ்விதமாகத் தம்மை நோக்கி ஓடிவரும் அரக்கர்களை, வீட்டுக்குவரும் விருந்தினரை முகங்கொண் டழைக்குமாறுபோல, இராமர் தமது கூரிய பாணங்களைச் செலுத்தி உபசரித்தார். அவர் மகாகபாலனுடைய தலையைப் பிளந்து, பிரமாதியின் உடலில் அளவில்லாத பாணங்களை அழுத்தி, ஸ்தூலாக்ஷனுடைய கண்களைக் கூர்மையான பாணங்களால் பொத்தினார். அவர்கள் அடியற்றமரம்போல் பூமியில் விழுந்தார்கள். அவ்வாறே தூஷணனுடைய ஐயாயிரம் போர் வீரர்களையும் இராமர் கோபங்கொண்டு ஐயாயிரம் பாணங்களை விடுத்து யமனுடைய மாளிகைக் கனுப்பினார். தூஷணன் மாண்டதையும் அவனைச்சேர்ந்த ஐயாயி

தூஷணன் வதை.

ரம் வீரர்கள் மடிந்ததையும் கரன்கண்டு மகாபலம்பொருந்திய தனது சேனைத் தலைவர்களை நோக்கி "அற்ப மானிடனான இராமனால் தூஷணனும் அவனைச்சேர்ந்த வீரர்களும் பெருஞ்சேனையுடன் போரில் கொல்லப்பட்டார்கள். ஆகையால், நீங்களெல்லீரும் பலவிதமான ஆயுதங்களைச் செலுத்திச் சீக்கிரம் இராமனை எப்படியாவது கொன்றுவிடுங்கள்" என்று கட்டளையிட்டான். இவ்விதமாகச் சொல்லிவிட்டுக் கரன் வெகுகோபமாக இராமரை நோக்கிச் சென்றான். அவனுடைய சேனைத்தலைவர்களான மகாபலம் பொருந்திய சியேனகாமி, பிருதுக்கிரீவன், யக்ஞசத்துரு, விஹங்கமன், துர்ஜயன், கரவீராக்ஷன், பருஷன், காலகார்முகன், மேகமாலீ, மகாமாலீ, ஸர்ப்பாசியன், உதிராசனன் என்னும் பன்னிருவர்களும் தங்கள் சேனைகளோடு எதிர்த்துச்சென்று இராமர்மேல் உத்தமமான சரங்களைச் சொரிந்துநின்றார்கள். இவ்வண்ணம் தன்னோடு போருக்குவந்த கரனுடைய எஞ்சியபடையை வெகு காந்தியையுடைய இராமர் தங்கமும் வைரமும் இழைக்கப்பட்டு அக்கினி போலப் பிரகாசிக்கும் தமது பாணங்களால் வதைத்தார். புகையற்ற நெருப்புப்போலஜ்வலிக்கும் பொன்னிழைத்த அப்பாணங்கள், இடிகள் பெருமரங்களை நாசம் பண்ணுவதுபோல, அவ்வரக்கர்களை நாசம்பண்ணின. ஒரே தடவையில் இராகவர் நூறு ராக்ஷசர்களை நூறுகர்ணிகளை விடுத்தும் ஆயிரம் அரக்கர்களை ஆயிரம் கர்ணிகளைவிடுத்தும் மாய்த்தார். இவ்விதமாகப் போர்க்களத்தில் இராமபாணங்களால் தங்கள் கவசங்கள் பிளந்து, ஆபரணங்கள் குலைந்து, விற்கள் சின்னபின்னமாய் ஒடிந்து, மெய்யெல்லாம் இரத்தம் வழிய, அரக்கர்கள் மாண்டுவிழுந்தார்கள். தலைமயிரவிழ்ந்து தேகம் முழுதும் இரத்தம் ஒழுக மாண்டு கிடந்த ராக்ஷசர்களால் அப்போர்க்களம் தருப்பைப் புற்கள் பரப்பப்பட்ட வேதிகைபோல விளங்கிற்று.

சேனைத்தலைவர் வதை.

அப்போது ராக்ஷசப்பிணங்கள் நிறைந்து இரத்தத்தாலும் நிணத்தாலும் சேருகவிருந்த அப்பயங்கரமான காடு நரகத்துக்கொப்பாக இருந்தது. பயங்கரமான செயல்கள் புரிந்துவந்த பதினலாயிரம் அரக்கர்கள் இவ்வண்ணம் பதாதியாகப் பொருத மானிடராகிய இராமரொருவரால் மடிந்தார்கள். அப்பெருஞ்சேனையில் மிகுந்தவர்கள் மகாரதனை கரனும் திரிசிரனுமே. இவர்களுக் கெதிராகத் தெவ்வரேருகிய இராமர் நின்ருர். கொடிய பாவிகளும், மகா பலம்பொருந்தியவர்களுமான மற்றைய அரக்கர்களெல்லாம் போர்க்களத்தில் லக்ஷ்மணருக்கு முன்பிறந்த இராமர் கையால் மாண்டார்கள்.

இவ்வாறு பெரும்போரில் மகாபலத்தையுடைய இராமர் அரக்கர்களுடைய பெரும்படை முழுதையும் கொன்றதைக் கரன்கண்டு ஒருபெரிய இரதத்தில் ஏறி வச்சிராயுதத்தைக் கையிற்பிடித்துச் செல்லும் இந்திரன்போல இராமர்முன் சென்ருன்.

---

## இருபத்தேழாஞ்சருக்கம்.

திரிசிரன் வதை.

---

கரன் அவ்வாறு இராமரை எதிர்த்துச்செல்லுவதை அவனுடைய சேனைத்தலைவனை திரிசிரன் பார்த்து அவனிடமோடிவந்து பின்வருமாறு சொன்னன் :—“என்னை, இக்காரியத்தைச் செய்யக் கட்டளையிடு. இதில் நீ புக வேண்டாம். நான் பலம்பொருந்திய இராமனைப் போரில் விழுத்துவதை நீ பார். நான் என் ஆயுதத்தைத் தொட்டுச் சத்தியம் பண்ணிச் சொல்லுகிறேன். ராக்ஷசர்கள் எல்லாராலும் வதைக்கப் படவேண்டிய இராமனை நானே வதைக்கிறேன். நான் அவனுக்குப் போரில்

யமனாகிறேன். அல்லது அவனாவது எனக்கு யமனாகட்டும். ஆகையால், நீ இப்போது சண்டைசெய்யவேண்டுமென்ற விருப்பத்தை அடக்கிக்கொண்டு எங்களிருவருக்கும் நடக்கும் சண்டையை நின்று பார். பின்பு இராமன் மாண்டதைக்கண்டு களித்து ஜனஸ்தானத்துக்குத் திரும்பு; அல்லது நான் மாண்டபிறகு அவனுடன் சண்டைசெய்யப் போர்க்களத்திலிறங்கு." இவ்வாறு திரிசிரன் தனக்கு மரணகாலம் நெருங்கிவிட்டதாற் சொன்ன சொல்லைக் கரன் கேட்டுச் சந்தோஷமடைந்து "அப்படியேயாகுக; நீ முதலில் யுத்தத்துக்குச் செல்" என்று சொல்லவே, திரிசிரன் இராமரோடு போர்புரியப் போயினான். குதிரை பூட்டப்பட்டுப் பிரகாசித்துக்கொண்டிருந்த தனது இரதத்திலேறி மூன்று சிகரங்களையுடைய மலையொன்று செல்லுவதுபோலத் திரிசிரன் இராமரை எதிர்த்துச் சென்றான். அவன் ஒரு பெரிய மேகம் மழையைக் கொட்டுவதுபோலச் சரமாரியைப் பொழிந்து நீரில் நனைந்த துந்துபி ஒலிப்பது போலப் பேரொலி செய்தான். அவ்வாறு தம்மை நோக்கிவரும் அரக்கனை இராகவர் கண்டு கூர்மையான அம்புகளால் அவனைத் தாக்கினார். அவ்விருவர்களுடைய யுத்தம் வெகு பலம்பொருந்திய யானையும் சிங்கமும் போர்புரிந்ததுபோலத் தோன்றிற்று. பின்பு திரிசிரன் இராமர் நெற்றியில் மூன்று கூர்மையான அம்புகளை எய்தான். அதைக்கண்டு இராமர் வெகு கோபம் அடைந்தபோதிலும் அதை வெளியில் காட்டிக்கொள்ளாமல் அவனைப் பார்த்து "ஆச்சரியம்! ஆச்சரியம்! வெகு பராக்கிரமசாலியாகவும் சூரனாகவுமிருக்கும் ராக்ஷசனுடைய பலம் எவ்வளவு அதிகம்! உன்னுடைய பாணங்கள் என் நெற்றியில் புஷ்பங்கள் பண்ணுங் காயத்தைப்

திரிசிரன் யுத்தம்.

பண்ணிவிட்டன! நானிப்பொழுது என் வில்லிலிருந்து விடுக்கும் பாணங்களை நீ ஏற்றுக்கொள்" என்று சொல்லி, சர்ப்பங்களுக் கொப்பான பதினன்கு பாணங்களை வெகு கோபத்துடன் திரிசிரன் மார்பில் எய்தார். அன்றியும், கொஞ்சம் சாய்ந்த முனைகளுள்ள நான்கு பாணங்களை விடுத்துப் பராக்கிரமசாலியாகிய இராகவர் அவ்வரக்கனுடைய நான்கு குதிரைகளையும் கீழே விழச்செய்தார்; எட்டுப் பாணங்களைச்செலுத்தி இரதத்தில் முற்புறத்தில் உட்கார்ந்திருந்த சாரதியை வீழ்த்தினர்; ஒரு பாணத்தால் இரதத்தின்மேல் கட்டியிருந்த கொடியைத் துண்டித்தார். பின்பு, உடைந்துபோன ரதத்தை விட்டிறங்கி ஓடிவரும் திரிசிரனுடைய மார்பில் அவர் அநேக பாணங்களை எய்தார். அவைகளைச் சகிக்கமுடியாமல் அவன் மயக்கங்கொண்டான். அதன்பிறகு வெகுவேகமாகச் செல்லும் மூன்று கூர்மையான அம்புகளை, ஸ்வரூபத்தை அறியக்கூடாத இராகவர், வெகு கோபத்துடன் விடுத்து, அவ்வரக்கனுடைய மூன்று தலைகளையும் கொய்தெறிந்தார். அவனும் இராமபாணங்களால் வெட்டுண்டு உயிரிழந்து தன் தலைகள் முன்னேவிழத் தானும் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு பூமியில்விழுந்தான். இன்னும் மிகுந்திருந்த கரனுடைய சைநியத்திலுள்ள அரக்கர்கள், புலியைக்கண்டு பயந்தோடும் மான்கள்போல, போர்க்களத்தில் நிற்காமல் ஓடினர்கள். அவ்வாறோடுகின்றவர்களைக் கரன் வெகு கோபத்துடன் திருப்பி, சந்திரனை எதிர்த்து இராகு ஓடுவது போல, இராமரை எதிர்த்துப் போனன்.

திரிசிரன் வதை.

---

## இருபத்தெட்டாஞ்சருக்கம்.

*இராமர் கரனுடைய தேரை அழித்து அவன் சாரதியைக் கொன்றது.*

திரிசிரனுடன் தூஷணனும் யுத்தத்தில் மாண்டதைக் கண்ட கரன் இராமருடைய பராக்கிரமத்தைப் பார்த்துப் பயந்தான். மகாபலம்பொருந்திய கரன் யாரும் நெருங்க முடியாத தனது பெரிய அரக்கர் படையும் திரிசிர தூஷணர்களும் இராமர் ஒருவரால் மாண்டதைக்கண்டு துன்புற்று, நமுசி இந்திரனை எதிர்த்துச் சென்றதுபோல, இராமரை எதிர்த்துச்சென்றான். கரன் தனது பலமான வில்லை நாணேற்றி இரத்தத்தில் தோய்ந்து கோபங்கொண்ட விஷசர்ப்பங்கள்போல் விளங்கும் பாணங்களை இராமர்மேல் விடுத்தான். அவன் தேரிலேறி, அடிக்கடி நாணையிழுத்துத் தெறித்துக்கொண்டு, ஆயுதப் பயிற்சி மிகுதியின் செருக்கால் ஆயுதங்களை வெளியில் காட்டிக்கொண்டு, போர்க்களத்தில் சுற்றித்திரிந்தான். அன்றியும், மகாரதனை கரன் எண்டிசைகளையும் தனது பாணங்களால் மூடினான். அதை இராமர் பார்த்துத் தமது பாரவில்லைக் கையிலெடுத்து, மேகம் மழையைப் பொழிவதுபோல, நெருப்புப் பொறி கக்குகின்ற சகிக்க முடியாத பாணங்களைப் பொழிந்து, ஆகாசத்தைக் கொஞ்சமேனும் இடைவெளி இல்லாமல் மறைத்துவிட்டார். இவ்விதமாக இராமனும் கரனும் விடுத்த கூரிய பாணங்களால் ஆகாயம் முழுதும் எல்லாப் பக்கங்களிலும் மூடப்பட்டது. இருவரும் ஒருவரோடொருவர் சினந்து யுத்தம் பண்ணும்பொழுது பாணங்களின் சமூகத்தில் மறைந்து சூரியன் பிரகாசிக்கவில்லை.

கரன் யுத்தம்.

கரன், கொஞ்சம் வளைந்த கூரிய முனையுள்ள நாளீகம், நாராசம் என்ற பாணங்களால், மகாகஜத்தைத் தாற்றுக்கோலால் குத்துவதுபோல, இராமரைத் தாக்கி

ஞன். அன்றியும் அவ்வரக்கன் கையில் வில்லுடன் இரதத்தில் உட்கார்ந்திருந்தது, கையில் பாசத்தைப்பிடித்துவந்த யமன்போல், எல்லாப் பிராணிகளுக்கும் தோன்றிற்று. தனது படை முழுவதையுங் கொன்ற இராமர் வெகு பராக்கிரமசாலி என்றாலும், அவர் அப்பொழுது கொஞ்சம் களைத்திருந்ததாகக் கரன் எண்ணினான். சிங்கம் போலச் செருக்கடைந்து நடந்த கரனை இராமர் பார்த்து ஒரு சிங்கமானது அற்ப மிருகத்தை எவ்வா றெண்ணுமோ அவ்வாறு கருதினார். அவ்வண்ணம் நிற்கும் இராமரோடு, அந்துப்பூச்சி நெருப்பில் விழுவதுபோல,

இராமருடைய வில் வெட்டுப் பட்டது.

கரன் தனது சூரியனுக்கொப்பான பெரிய ரதத்துடன் போர்புரிய வந்து சேர்ந்தான். உடனே அவன் தனது கைவன்மையைக் காட்டும் விதமாக மகாத்துமாவாகிய இராமர் பிடித்திருந்த வில்லை அதில் பூட்டிய அம்புடன் இரண்டாக வெட்டினான். மறுபடி அவன் இடிக்கொப்பான ஏழு பாணங்களை எடுத்து வெகு கோபத்துடன் இராமருடைய மர்மஸ்தானங்களை நோக்கி விடுத்தான். சூரியனுக்கொப்பான பிரகாசமுடைய இராமருடைய கவசம் அப்பாணங்களால் வெட்டுண்டு கீழேவிழுந்தது. அதன்மேல் கரன் ஆயிரம் பாணங்களை ஒப்பற்ற பராக்கிரமமுள்ள இராமர்மேல் விடுத்து அட்டகாசம் பண்ணினான். அப்பாணங்களால் தேகம் முழுதும் அடியுண்டு வெகு கோபங்கொண்டு போர்க்களத்தில் நின்ற இராமர் புகையற்ற அக்கினிபோல விளங்கினார். பிறகு, சத்துருக்களை அடக்கும் இராமர் தமது பகைவனாகிய கரனை உடனே முடித்துவிடக்கருதி வெகு கம்பீரமாக ஒலிக்கும் மற்றொரு வில்லை எடுத்து நாணேற்றினார். அது விஷ்ணுவின் வில்; அகஸ்தியரால் இராமருக்குக் கொடுக்கப்பட்டது. புகழ்பெற்ற அந்த வில்லை இராமர் கையிலெடுத்துக்கொண்டு கரனை எதிர்த்தார். கொஞ்சம் வளைந்த முனைகளும்

பொன் இறகுகளுமுள்ள பாணங்களை இராமர் வெகு கோபத்துடன் விடுத்துக் கரனுடைய கொடியைப் போர்க் களத்தில் அறுத்துத்தள்ளினர். அந்த அழகான தங்கக் கொடி வெட்டுண்டு கீழே விழுந்தது தேவர்களுடைய உத்தரவின்படி சூரியன் பூமியில் விழுந்ததுபோன்றிருந்தது. போரின் நுண்மையையறிந்தகரன் அதைக்கண்டு கோபம் கொண்டு, மதயானையைத் தாற்றுக்கோலால் குத்துவது போல, இராமர் மார்பில் நான்குபாணங்களை அழுத்தினன். கரன் வில்லிலிருந்து விடுக்கப்பட்ட பாணங்கள் தைத் துத் தேகமெங்கும் இரத்தமோட நின்ற இராமர் பெருங் கோபங்கொண்டார். உடனே வில்வித்தையில் முதல் வரான இராமர் தமது பாரவில்லைக் கையிலேந்தி நாணெ றிந்து இலக்காக ஆறுபாணங்களை எய்தார். அவைகளில் ஒன்று கரன் தலையிலும், இரண்டு அவன் கைகளிலும், மற்றைய அர்த்த சந்திரன்போன்ற மூன்று பாணங்கள் அவன் மார்பிலும் தைத்தன. பிறகும் அதிக பராக்கிரம முள்ள இராமர் பெருங்கோபங்கொண்டு கரன்மேல் சூரிய னுக்கொப்பான பதின்மூன்றுபாணங்களை விடுத்து, ஒன் றால் அவனது இரதத்தின் நுகத்தடியையும், நான்கு பாணங்களால் நான்கு குதிரைகளையும், ஆறுவது பாணத்தால் சாரதியின் தலையையும், மூன்று பாணங்களால் இரதத் தின் பாரையும், இரண்டு பாணங்களால் அச்சையும், வஜ்சி ராயுதத்துக்கொப்பான பன்னிரண்டாவது பாணத்தால் அவனுடைய வில்லையும் வெட்டி, பதின்மூன்றும் பாணத் தால் அவன் உடலையும் விளையாட்டாகத் துளைத்தார். அப் பொழுது கரன் வில்முறிந்து, இரதமழிந்து, குதிரைகளும் சாரதியும் மாண்டு, கையில் கதையை எடுத்துக்கொண்டு தரையில் குதித்தான்.

கரன் தேரழிந்தது.

மகாரதராகிய இராமர் இவ்வாறு செய்த ஆச்சரிய மான காரியத்தைத் தேவர்களும் மகரிஷிகளும் கண்டு

களித்துக் கைகூப்பித் தங்கள் தங்கள் விமானங்களிலிருந் தபடியே அவரைத் துதித்தார்கள்.

## இருபத்தொன்பதாஞ்சருக்கம்.

*இராமர் கரனுடைய பாவங்களைக்கூறி அவன் கதையைத் துண்டித்தது.*

இரதமற்றுக் கதாபாணியாகத் தம்முன்வந்து நின்ற கரனைப்பார்த்து அதிக தேஜசுடன் விளங்கும் இராமர் வெகு மிருதுவாக அவன் கொடிய செயல்களையெடுத்துக் காட்டினார்:—"இரதகஜதுரகபதாதிகள் நிரம்பிய பெருஞ் சேனையின் உதவியால், நீ உலகத்திலுள்ளார் யாவரும் அருவருக்கத்தக்க கொடிய செயலைச் செய் துவந்தாய். ஒருவன் இம்மூவுலகங்களுக் கும் ஈசனாக இருப்பினும், கொடியவ னாகவும் பாவமான காரியங்களைச் செய்கிறவனாகவும் இருந் தால் அவன் க்ஷேமமாக வாழமாட்டான். உலகத்துக் கொவ்வாத கொடிய செயல்கள் செய்யும் பாவியை, கொடிய பாம்பை வதைப்பதுபோல், எல்லாரும் வதைப் பார்கள். எவனொருவன் உலோபத்தன்மையால் பாபங் களைப் பண்ணிக்கொண்டு அதிக இலாபத்தின் இச்சை யால் தான் செய்வது பாபமென்றறியாமல் இருக்கிறானோ அவன் ஐஸ்வரியத்திலிருந்து விலக்கப்பட்டவனாய், ஆலங் கட்டியைப் புசித்து அறணை மாண்டுவிடுவது போல, சீக்கிரம் மாள்வான். தருமத்தை நடத்திக்கொண்டு தண் டகாரணியத்தில் வசித்துவரும் தபசிகளைக் கொன்றத னால் உனக்கு என்ன இலாபம்? உலகத்தார் வெறுக்கும் கொடிய செய்கைகளைச் செய்யும் பாவிகள் ஒருபொழுதும் க்ஷேமமாக இருக்கமாட்டார்கள்; வேரற்ற விருக்ஷம்போல் அழிந்துவிடுவார்கள். விருக்ஷங்கள் பருவத்தில் புஷ்பிப் பதுபோல, பாவத்தொழிலைச்செய்பவன் ஒவ்வொருவனும்

இராமர் கரனை இகழ்தல்.

அத்தொழிலின் பலனைத் தக்கநேரத்தில் தப்பாமல் அடைவான். விஷங்கலந்த அன்னத்தைப் புசித்ததின் பலனை உடனே காண்பதுபோல, மனிதரும் தங்களுடைய செயலின் பயனை உடனே காண்பார்கள். உலகத்துக்குத் தீமையைச் செய்யும் கொடிய பாவிகளுடைய பிராணனை வாங்க *அரசனால் நான் கட்டளை யிடப்பட்டிருக்கிறேன். இப்பொழுது என்னால் விடுக்கப்படும் தங்கமிழைக்கப்பட்ட பாணங்கள் உனது உடலை ஊடுருவி, பாம்புகள் புற்றில் நுழைவதுபோல, பூமியைப் போழ்ந்து புக்கொளிக்கும். தண்டகாரணியத்தில் நீ புசித்த ரிஷிகள் போயிருக்குமிடத்திற்கு, யுத்தத்தில் கொல்லப்பட்டு நீயும் நினது சேனையுடன் போகலாம். முன்னரே உன்னால் கொல்லப்பட்ட ரிஷிகள் இன்று விமானங்களிலிருந்துகொண்டு நீ எனது பாணங்களால் அடிபட்டு மாண்டு நரகத்தில் வீழ்வதைப் பார்க்கப்போகிறார்கள். உனது இஷ்டப்பிரகாரம் நீ பொருதுபார். இழிகுலத்தோனே, உன்னால் கூடுமானதையெல்லாம் நீ செய். இன்று உனது தலையை, பனங்காயை அறுத்துத் தள்ளுவதுபோல, அறுத்துத் தள்ளுகிறேன்.” இவ்வாறு இராமர் சொன்ன சொற்களைக் கேட்டுக் கோபமடைந்து கண்கள் சிவந்து கோபத்தால் ஒன்றுந்தெரியாதவனாகிக் கரன் சொல்லலுற்றான்:— “தசரத புத்திரா, போரில் ஆற்றலில்லாத அரக்கர்களைக்கொன்றுவிட்டு, ஏன் வீணாக உன்னைப் புகழ்ந்து கொள்ளுகிறாய்? பலமும் பராக்கிரமமும் உள்ள சூரர்கள் ஊக்கமிகுதியால் செருக்கடைந்து ஒருபொழுதும் தங்களைத் தாங்களே புகழ்ந்துகொள்ள மாட்டார்கள். நல்லுள்ளமில்லாத அற்பமான க்ஷத்திரியர்கள்தான் தங்களைத் தாங்களே, நீ உன்னைப் புகழ்ந்துகொள்ளுவதுபோல், புகழ்ந்துகொள்ளுவார்கள். போர்க்களத்தில் எந்தவீரன் தன்குலத்தை எடுத்

கரன் மறுமொழி.

* தசரதர் அல்லது பரதர்.

துக் கூறுவான்? மாண்டுபோகும் காலம் நெருங்கியபோது எவன் தன்னைப்பற்றிப் புகழ்பாடுவான்? தருப்பைப்புல் தீயில் காய்ச்சப்பட்ட தங்கநிறமான பித்தளை கறுப்பது போல் உனது தற்புகழ்ச்சியால் நீ உனது அற்பத்தனத்தை வெளியாக்கிவிட்டாய். இவ்விடத்தில் நான் கதையைப் பிடித்துக்கொண்டு, அசைக்கக்கூடாத பெரும்பருவதம் தாதுராகத்தால் விளக்கமுற்று நிற்பதுபோல், நிற்பது உனது கண்ணிற்குப் புலப்படவில்லை. நான் கையில் கதையைப் பிடித்துக்கொண்டு உனது பிராணனை மட்டுமன்று, இம்மூவுலகத்திலும் உள்ளாருடைய பிராணன்களையும், கையில் பாசம் பிடித்த யமன்போல், தனியே வாங்கிவிடவல்லேன். நான் உனக்குச் சொல்லவேண்டிய சங்கதிகள் நிரம்ப இருக்கின்றன. அவற்றைச்சொல்ல இப்பொழுது எனக்குச் சாவகாசமில்லை. சூரியன் அஸ்தமனமாகுங்காலம் நெருங்குகிறது. அதன் பிறகு யுத்தத்துக்கு இடையூறுவந்துவிடும். நீ பதினாலாயிரம் ராக்ஷசரைக் கொன்றதனால் அவர்கள் பந்துக்கள் விடும் துக்கக்கண்ணீரை இன்று நான் உன்னை வதைத்துத் துடைத்துவிடுகிறேன்." இவ்வண்ணஞ் சொல்லிக் கரன் வெகுகோபத்துடன் அழகான கேயூரமணிந்த தனது கைகளால் எரிகின்ற இடிபோன்ற கதையைத்தூக்கி இராமர்மேல் எறிந்தான். அவ்வாறு கரனுடைய கையிலிருந்து விடப்பட்ட கதை ஆகாசத்தில்ஜ்வலித்துக்கொண்டு, அநேகவிருக்ஷங்களையும் புதர்களையும் நீறுக்கிக்கொண்டு, இராமரைக் கிட்டிற்று. அவ்விதமாகத் தம்மைநோக்கி அக்கினிபோல் விளங்கிக் காலனுடைய பாசத்துக்கொப்பாக வந்துகொண்டிருந்த கதையை இராமர் தமது பாணங்களால் ஆகாயத்திலேயே துகளாக்கிமாற்றினர். அப்போது அது, மந்திரத்தினல் விழுத்தப்பட்ட சர்ப்பம்போல, உடைந்து பூமியில்விழுந்தது.

கரன் கதை உடைந்தது.

## முப்பதாஞ்சருக்கம்.

### கரன்வதை.

இராமர் கரனை இகழ்தல்.

இராமர் அக்கதையைப் பாணங்களால் துண்டித்து, தாம் எப்பொழுதும் தருமத்தில் வாஞ்சையுள்ளவராகையால் கொஞ்சம் புன்னகையுடன் கரனைப்பார்த்துக் கோபமாகக் கூறினார்:—"ராக்ஷசப்பதரே, நீ உனது பலம் முழுமையையும் காண்பித்தது இதுதான்! என்கையால் சக்தியற்று என் வீணாகக் குமிறுகிறாய்? உனது கதை என் பாணங்களால் பிளக்கப்பட்டு அதோபூமியில் விழுந்திருக்கிறது! வீண்பெருமை பாராட்டிக்கொண்ட உனது செருக்குக்குக் காரணமாகவிருந்த கதையின்கதி இப்படியாக முடிந்தது! மாண்டுவிட்ட அரக்கர் பந்துக்கள் துக்கக்கண்ணீரைத் துடைப்பதாக நீ சொன்ன சொல்லும் பொய்யாக முடிந்தது. நீசனாகவும், கொடிய செய்கையுள்ளவனாகவும், பொய்மையே பொருந்தியவனாகவும் இருக்கும் உனது உயிரை, கருடன் அமிர்தத்தைக் கவர்ந்ததுபோல, நான் கவர்ந்துவிடுகிறேன். இன்று உனது கழுத்து எனது பாணங்களால் அறுக்கப்பட்டுக் கீழேவிழ, உனது உடலிலிருந்து கொப்புளித்துப் பெருகும் இரத்தத்தை இப்பூமி குடிக்கட்டும். இன்று உனது தேகம் புழுதியாடி, கைகளும் வெட்டுண்டு, இஷ்டமில்லாத பெண்போல நீ பூமியைத் தழுவிக்கொண்டு தூங்கலாம். நீ அவ்வாறு கண்விழியாத் தூக்கம் தூங்கிவிட்டபின்பு, இத்தண்டகாரணியம் ஒதுக்கிடந் தேடி வருபவர்களுக்கு உறைவிடமாய் இருக்கும். எனது பாணங்களால் ஜனஸ்தானத்தில் இருக்கும் ராக்ஷசர்கள் எல்லாரும் தொலைந்தபிறகு இவ்விடத்தில் ரிஷிகள் பயமின்றிச் சஞ்சரிப்பார்கள். மற்றவர்களுக்குப் பயத்தை

உண்டாக்கிக்கொண்டு இக்காட்டில் சஞ்சரித்து வந்த அரக்கியர்கள், தங்கள் பந்துக்கள் நாசமடைந்த காரணத்தால் முகம்வாடி, பயந்து, கண்ணுங் கண்ணீருமாக வேறிடங்களுக்கு இன்று ஓடிவிடுவார்கள். உங்கள் குலத்துக்கு ஒத்த குலத்தில் வந்த உங்களுடைய மனைவியர்கள், இன்று சோகம் இத்தன்மையது என்பதை அறிந்து, தங்கள் பொருள்கள் முழுவதும் இழந்துவிடுவார்கள். கொடியவனே, அற்பனே, பிராமணகண்டகனே, உனக்காகவல்லவா தினந்தோறும் முனிவர்கள் நடுங்கி ஊக்கமிழந்து நெடுநாளாக அவிசை ஓமத்தீயில் ஓமஞ்செய்கிறார்கள்?"

இவ்விதமாகப் போர்க்களத்தில் இராமர், கோபத்தால் சொன்ன சொல்லைக் கேட்டுக் கரன் கடுகடுத்துச்சொல்லலுற்றான் :—"நீ வெகு செருக்கடைந்திருக்கிறாய்; பயமென்பது உன்னைப்பற்றி யிருக்கவும் பயமற்றுப் பேசுகிறாய். மரணம் கிட்டிவிட்டபடியால் இன்னது சொல்லலாம் இன்னது சொல்லக்கூடாதென்பதைக்கூட நீ அறியவில்லை. அதுவும் நியாயந்தான்; ஏனெனில், காலபாசத்தால் கட்டப்பட்டவர்கள் புலன்களை இழந்துவிடுகிறபடியால் செய்யத்தக்கது இது செய்யத்தகாதது இதுஎன்று பகுத்தறியமாட்டார்கள்." இராமரைப்பார்த்து இவ்வாறு சொல்லிக்கொண்டே புருவங்களை நெரித்துச் சுற்றிலும் கரன் பார்த்துப் பக்கத்தில் ஆச்சாமரமொன்று நிற்பதைக் கண்டான். போர்க்களத்தில் ஆயுதத்திற்காகச் சுற்றிப்பார்ப்பவன் கீழுதட்டைக் கடித்துக்கொண்டு அதைப்பிடுங்கிக் கைகளால் உயரத்தூக்கி வெகு பலமாக ஒரு கூச்சல் போட்டு "நீ இத்துடன் மாண்டாய்" என்று சொல்லி இராமர்மேல் வீசியெறிந்தான். வெகு பராக்கிரமம்பொருந்திய இராமர் அவ்வாறு தம்மை நோக்கிவரும் அம்மரத்தைத் தமது பாணங்களால் துண்டித்து இனிச் சீக்கிரம் போரில் கரனைக் கொன்றுவிட வேண்டுமென்று கோபங்

கொண்டார். அந்தக் கோபத்தால் இரர்மர் தேகம்வெயர்த்துக் கண்கள்சிவந்து ஆயிரம் பாணங்களைக் கரன்மேல் செலுத்தினர். அப்பாணங்கள் தைத்தவிடங்களிலிருந்து இரத்தம் குமிழியிட்டுப் பொங்கி, மலையின் பக்கங்களிலிருந்து அருவிகள் பெருகி ஓடுவதுபோல, ஓடிற்று. இராமர் எய்த பாணங்களினல் கரன் சோர்ந்து, இரத்தத்தின் நாற்றத்தால் புத்திமயங்கி, அவரிருந்த இடத்தை நோக்கி வேகமாக ஓடிவந்தான். தேகம் முழுமையும் இவ்வாறு இரத்தம்வழியத் தம்மை நோக்கி ஓடிவரும் கரனைக் கண்டு ஆயுதபாணியாகிய இராமர் திடீரென்று இரண்டடி பின்வாங்கினர். பிறகு கரனை வதைசெய்வதற்காக, அக்கினிக்கொப்பாய், மற்றொரு பிரமதண்டம்போல விளங்கும் பாணமொன்றைக் கையிலெடுத்தார். அது புத்திமானகிய தேவேந்திரனல் கொடுக்கப்பட்ட பாணம். அப்பாணம் இராமருடைய வில்லிலிருந்து விடுக்கப்பட்டு, இடிபோல முழங்கிக்கொண்டு, கரன்மார்பில் பாய்ந்தது. கரன், திருவெண்காட்டில் ருத்திரனல் தஹிக்கப்பட்டு அந்தகாசுரன் மாய்ந்ததுபோல, இராமருடைய சராக்கினியால் தஹிக்கப்பட்டுப் பூமியில் விழுந்தான். வச்சிராயுதத்தால் விருத்திராசுரன் மாண்டதுபோலவும், நுரையால் நமுசி மாண்டதுபோலவும், இடியால் வலாசுரன்மாண்டது போலவும், கரன் இராமபாணத்தால் மாண்டுவிழுந்தான்.

கரன் வதை.

பிறகு ராஜரிஷிகளும் மற்ற ரிஷிகளும் சேர்ந்து இராமரைக்கண்டு களித்து "இதன்பொருட்டே பாகசாசனகிய மகேந்திரன் சரபங்கருடைய புண்ணிய ஆச்சிரமத்துக்கு வந்தனன். கொடியசெயல்புரியும் இவ்விராக்ஷசர்களை வதைக்கும் பொருட்டே மகரிஷிகளும் தங்களை அனேக உபாயங்களால் இக்காட்டுக்குக் கொண்டுவந்தார்கள். நாங்கள் உத்தேசித்தகாரியம் முடிந்துவிட்டது. மகரிஷிகள் இனிப்

ரிஷிகள் களிப்படைந்தது.

பயமின்றித் தவம்புரிவார்கள்" என்று சொன்னார்கள். இதற்குள் தேவர்களும் சாரணர்களும் வியப்படைந்து ஆகாசத்தில் தோன்றித் துந்துபி முழக்கி, வெகு சந்தோஷ முற்று இராமர்மேல் புஷ்பமாரி பொழிந்தார்கள். "ஒன்றரை முகூர்த்தத்தில் இராமர் தமது கூர்மையான அம்புகளால் பயங்கரமான தொழில்கள்புரிந்துவந்த கரன் தூஷணன் முதலிய அரக்கர்கள் பதினாலாயிரம்பெயர்களையும் போரில் வதைத்தார். ஆகா! எவ்வளவு பெருங்காரியம் இராமர் செய்தார்! என்ன சாமர்த்தியம்! என்ன பராக்கிரமம்! இது விஷ்ணுவின்பராக்கிரமம் போலல்லவா காண்கிறது" என்று இவ்விதமாகச் சொல்லிக்கொண்டு தேவதைகள் தங்கள்தங்கள் இருப்பிடம் சென்றார்கள்.

தேவர்கள் களிப்படைந்தது.

அச்சமயத்தில் வீரராகிய லக்ஷ்மணர் சீதையுடன் மலைக் குகையைவிட்டு வந்துசந்தோஷமாக ஆச்சிரமத்துள் புகுந்தார். வெற்றிபெற்ற இராமரும், மகரிஷிகள் ஆராதிக்க, லக்ஷ்மணர் பூஜிக்க, ஆச்சிரமம்சேர்ந்தார். சத்துருக்களைக் கொன்று, பெரிய ரிஷிகளுக்கெல்லாம் சுகத்தை உண்டுபண்ணின தனது கணவரான இராமரைச் சீதைகண்டு களிகூர்ந்து ஆநந்தத்தால் தழுவினாள். ராக்ஷசக்கூட்டங்கள் மாண்டதையும் இராமர் காயமின்றி இருந்ததையும் சீதை பார்த்துச் சந்தோஷமடைந்து ஆனந்தக்கடலில் மூழ்கினாள். பிறகு சந்தோஷமடைந்த மகரிஷிகளால் பூஜிக்கப்பட்ட பகைவரேறாகிய தனதுகணவனை ஜானகி மறுபடியும் தழுவிக் களித்தமுகத்தோடு பேருவகையுற்றாள்.

சீதை களிப்படைந்தது.

---

## முப்பத்தொன்றுஞ்சருக்கம்.

*அகம்பனன் இலங்கையடைந்து ஜனஸ்தானத்திலிருந்த கரன் முதலிய ராக்ஷசர்கள் இராமரால் அழிந்ததை இராவணனுக்குத் தெரிவித்து அவனைச் சீதையை அபகரிக்கும்படி வேண்டுதல்.*

பின்பு அகம்பனன் ஜனஸ்தானத்தை விட்டு வெகு வேகத்துடன் சென்று இராவணனைப்பார்த்து "அரசனே, ஜனஸ்தானத்திலிருந்த அரக்கர்கள் எல்லாரும் வதைக்கப்பட்டார்கள். கரனும் போரில் மாண்டான். நான்மாத்திரம் வெகுகஷ்டப்பட்டுப் பிழைத்துவந்தேன்" என்று சொன்னான். இவ்வாறு அகம்பனன் சொன்னசொல்லை இராவணன் கேட்டுக் கோபத்தால் கண்கள் சிவந்து அவனைக் கொளுத்திவிடுவதுபோலப் பார்த்து "தனது ஆயுண் முடிந்து எனது அழகான ஜனஸ்தானத்தை அழித்தவன்யாவன்? இப்பொழுது இவ்வுலகத்தில் ஒருநாளும் வாழமுடியாத வழியைத் தேடிக்கொண்டவன் யாவன்? எனக்குக் கெடுதல் செய்தபின்பு அவன் இந்திரனாக இருப்பினும், அல்லது குபேரன், யமன், விஷ்ணு இவர்களில் ஒருவனாக இருப்பினும் ஒருபொழுதும் சுகமென்பதை அடையான். நான் காலனுக்கும் காலன்; நெருப்பையும் கொளுத்துவேன்; சாவுக்கும் சாவுவரச் செய்வேன். கோபம் கொண்டால் நான் சூரியனையும் நெருப்பையுங்கூட எரித்துவிடுவேன். எனது பலத்தால் காற்றின் வேகத்தைக்கூட நான் தடுக்கமாட்டுவேன்" என்று சொன்னான். அகம்பனன் பயத்தால் நடுங்கிக் கைகூப்பித் தனக்கு அபயம் கொடுக்கவேண்டுமென்று தசக்கிரீவனை வேண்டிக்கொண்டான். ராக்ஷசோத்தமனான இராவணனும் அவனுக்கு அபயம்கொடுத்தான். பிறகு, அகம்பனன் கொஞ்சம் தைரியமடைந்து "சிரேஷ்டமான

ஜனஸ்தானத்தை அழித்தவன்யார் என்று இராவணன் வினவியது.

அங்கமுள்ளவனும், யௌவனமுள்ளவனும், ரிஷபத்தின் பிடர்போன்ற பிடரை உடையவனும், உருண்டு நீண்டு அழகாயுள்ள கரங்களை உடையவனும், நிகரற்ற பலபராக்கிரம முடையவனும், வீரனும், கீர்த்தியுள்ளவனும், ஸ்ரீமானும், தசரதமன்னவனுடைய குமாரனுமான இராமனென்பவன் ஒருவனிருக்கிறன், அவன் பெரும்புகழ் படைத்தவன்; பலவிதமான சம்பத்தடைந்தவன். அவன்தான் ஜனஸ்தானத்தை நாசம்பண்ணினவன்; கரனையும் தூஷணனையும் வதைத்தவன்" எனக் கூறினன். அகம்பனன் கூறியமொழியை ராக்ஷசவேந்தனான இராவணன் கேட்டு ஆதிசேடன்போலப் பெருமூச்செறிந்து "அகம்பனா, இராமனென்பவன் யார்? இந்திரனுடன் சேர்ந்துகொண்டு தேவர்களெல்லாருடனும் ஜனஸ்தானத்துக்கு வந்திருக்கிறானா என்ன" என்றுவினவ, அகம்பனன் கேட்டு அம்மகாத்துமாவின் பலத்தையும் பராக்கிரமத்தையும் வருணிக்கத்தொடங்கினன் :—"இராமன் வெகுபராக்கிரமம் உள்ளவன்; வில்லாளர்க்கெல்லாம் மேலானவன்; திவ்யமான அஸ்திரங்களின் பயிற்சி நன்றாக உடைமையால் யுத்தத்தில் இந்திரனுக்கொப்பானவன். அவனுக்குச் சரியான பலமுள்ள அவன் தம்பி லக்ஷ்மணன் சிவந்தகண்களுடையவன்; பேரிபோல ஒலிக்கும் சத்தமுள்ளவன்; சந்திரன்போன்ற முகமுடையவன். அவர்களுடைய சேர்க்கை காற்றுடன் நெருப்புச் சேர்ந்ததுபோலிருக்கிறது. வெகுபாக்கியம்பெற்று விளங்கும் அரசர்களுள் உத்தமனான இராமனலேதான் ஜனஸ்தானம் அழிக்கப்பட்டது. மகாத்துமாக்களான தேவர்கள் ஜனஸ்தானத்துக்கு வரவில்லை. இவ்விஷயத்தில் உனக்குச் சந்தேகம் வேண்டாம். இராமன் விடுக்கும் தங்கப்பூண்கட்டிய சரங்கள் எல்லாம், ஐந்துதலை நாகங்கள்போல், அரக்கர்கள் உயிரைக் குடித்துவிடுகின்றன. பயந்து ஓடும் அரக்கர்கள் தாம்போ

அகம்பனன் இராமருடைய வலிமையைக் கூறல்.

குமிடங்களிலெல்லாம் இராமனைக் காணுகிறார்கள். ஓ பாப ரகித, இவ்விதமாகத்தான் இராமன் ஜனஸ்தானத்தை அழித்தான்.'' இவ்வாறு அகம்பனன்சொன்னசொல்லை இராவணன்கேட்டு "இதோ நான் இராமலக்ஷ்மணர்களைக் கொல்லஜனஸ்தானம்செல்லுகிறேன்'' என்றான். அதைக் கேட்ட அகம்பனன் சொல்லலுற்றான் :—"அரச, இராம னுடைய பலத்தையும் பராக்கிரமத்தையும்பற்றி நான் உண்மையாய்ச் சொல்வதைக் கேள். வெகு புகழ்பெற்ற இராமன் கோபித்தால் அவனை வெல்ல ஒருவராலும்முடி யாது. நன்றாக நீர்நிரம்பி வேகமாக ஓடும் மஹாநதியின் வேகத்தைகூடத் தனது பாணங்களால் அவன் தடுப்பான்; நக்ஷத்திரங்களையும் கிருகங்களையும் ஆகாயத்தில் நின்று விழச்செய்வான்; இவ்வுலகம் ஒருகால் முழுகிவிட்டால் அதையும் தூக்கி நிலைநிறுத்துவான்; சமுத்திரத்தின் கரை யைப் பிளந்துவிட்டுப் பூமிமுழுவதையும் வெள்ளத்தில் அமிழச்செய்வான்; சமுத்திரத்தின் வேகத்தையும் வாயு வின் வேகத்தையும் தனதுபாணங்களால் அடக்குவான். அப்பெரும் புகழ்பெற்றவன் தன் பராக்கிரமத்தால் இவ் வுலகங்களை எல்லாம் அழித்து மறுபடியும் உண்டாக்க வல்லவன். ஓ தசக்கிரீவ, இராமனை நீயாவது, அல்லது அரக்கர்கணமாவது ஜெயிப்பது, சுவர்க்கலோகம் பாபிக ளுக்குக் கிட்டாதவாறுபோல், சிறிதும் கூடாது. எல்லாத் தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகூடினும் இராமனைக் கொல்லமுடியாதென்பது என் எண்ணம். ஆனால், அவ னைக்கொல்ல உபாயமொன்றுண்டு. அதை நான் சொல் லுகிறேன், சற்றுக்கவனமாகக் கேள். சீதை என்ற மெல் லியலாள் அவனுடைய மனைவி. அவள் இவ்வுலகத்திலே உத்தமமான பெண். அவள் நல்ல யௌ வனபருவமுள்ளவள். அவளது அவயவங் கள் ஒவ்வொன்றும் சரியாக அமைக்கப் பட்டுள்ளன. பெண்களுக்குள் ஓரிரத்தி

அகம்பனன் சீதையை வர்ணித்தல்.

ணம்போலுமவள் மணிகளிழைக்கப்பட்ட ஆபரணங்கள் பூண்டு விளங்குகிறாள். தேவப்பெண், கந்தர்வப்பெண், அப்சரஸ்பெண், அசுரப்பெண் ஒருவரும் அவளுக்குச் சமானம் இல்லை. பின்னர் மானிடப்பெண் எப்படி அவளுக் கொப்பாவாள்? ஆகையால், நீ எப்படியாவது முயன்று இராமனைவஞ்சித்து அவனுக்குத்தெரியாமல் அவன்மனைவியைக்காட்டிலிருந்து தூக்கிக்கொண்டுபோய்விடவேண்டும். அவளிடம் அவனுக்குக் காதல் கரையில்லையாதலால் அவள் போனபின்பு அவன் தன்னுயிரை விட்டுவிடுவான்.'' இவ்வண்ணம் அகம்பனன் சொன்ன சொல் அரக்கர் மன்னவனாகிய இராவணன் மனத்திற்கு ஒத்திருந்தது. அவன் சிறிதுநேரம் சிந்தித்து அகம்பனனைநோக்கி "ஆம்; நீசொன்னது நன்றாகவிருக்கிறது. நான் எனது சாரதியுடன் புறப்பட்டுக்காலையில் தனிமையாய் இராமனிருக்குமிடம் போகிறேன். இவ்வழகிய மாநகருக்குச் சீதையைக் கொண்டுவந்துவிடுகிறேன்'' என்று சொன்னான். அதன்பின் இராவணன் சூரியனுக் கொப்பான கோவேறுகழுதைகள் பூட்டிய இரதத்தின்மேல் ஏறி எண்டிசைகளையும் பிரகாசிக்கச் செய்துகொண்டு புறப்பட்டான். ஆகாசமார்க்கமாகப் போகும் அரக்கர் மன்னவன் தேர், மேகத்தினிடையே ஊர்தரும் சந்திரன்போல, விளங்கிற்று. இராவணன் நெடுந்தூரம் போய்த் தாடகையின் குமாரனாகிய மாரீசன் வசித்துக்கொண்டிருந்த ஆச்சிரமத்தை அடைந்தான். மாரீசன் தன்னை நாடிவந்த மன்னவனுக்குத் திவ்வியமான உணவுகளையும் பானங்களையும் கொடுத்து உபசாரம்பண்ணினான். அன்றியும், மாரீசன் தானாகவே அர்க்கியம், ஆசனம் முதலியவைகளால் இராவணனை உபசாரம் பண்ணி அவனைப்பார்த்து பொருள் பொதிந்த சொற்களால் "ஓ ராஜா, ராக்ஷசேந்திரா, நின் குடிகளுக்கு ஒருவிதமான குறைவும் இல்லையே? உன்னைப்பார்த்

இராவணன் மாரீசனிடம் சென்றது.

தால் சந்தேகிக்க வேண்டியதாக விருக்கிறது. தனியே இவ்வளவு வேகமாக நீ இவ்விடம் வந்த காரணமென்ன?" என்று கேட்டான். மாரீசனிவ்வண்ணம் கேட்க, வெகு பராக்கிரமமுள்ள இராவணன் "ஐய, வெகு புகழ் பெற்ற இராமன் ஜனஸ்தானத்தில் இருந்த காவலர்களை எல்லாம் கொன்றுவிட்டான். அழித்தற்கரிய ஜனஸ்தானம் முழுவதும் யுத்தத்தில் அழிந்துவிட்டது. நான் இப்பொழுது இராமன் மனைவியைக் கவர்ந்துகொண்டு வரப்போகிறேன். அதற்கு நீ சகாயம் பண்ணவேண்டும்" என்று கூறினன்.

ராக்ஷசேந்திரன் சொன்னசொல்லை மாரீசன் கேட்டு அவனைப்பார்த்து "மித்திரன்போல எந்தச் சத்துரு சீதையைப்பற்றி நினக்குச் சொன்னன்? ஓ ராக்ஷசசிங்கமே, நீ க்ஷேமமாக இருப்பதைச் சகிக்காத துஷ்டன் யாவன்? 'சீதையைத் தூக்கிவந்து விடு' என்று நின்னிடம் சொன்னவன் எவன்? அவன் யார்சொல். அரக்கர் குலத்தினுடைய சிகரத்தைச்சிதைக்கக்கருதினவன் எவன்? இந்தத் தொழிற்கு நின்னை ஏவினவன் நினக்குச் சத்துருவேயன்றி வேறல்லன். அதற்குச் சந்தேகமில்லை. அவன் நின்னைக்கொண்டு பாம்பின் வாயிலிருக்கும் விஷப்பல்லைப்பிடுங்க எண்ணுகிறான். நின்னை இந்தக் கெட்ட வழியில் செலுத்த நினைத்தவன் எவன்? சுகமாகத் தூங்கிக்கொண்டிருக்கும் நின் தலையில் அடித்தவன் யாவன்? இராவணேசுவரா, இராகவனை ஒரு மதயானையென்று கருது; அவனுக்குக் குடிப்பிறப்பே துதிக்கை; பராக்கிரமமே மதம்; நீண்டபாகுகளே கொம்புகள். அவனைப் போரில் கண்ணெடுத்துப் பார்க்கவும் நீ தக்கவனல்லன்? அவன் வாசனையைத் தூரநின்று மோந்துபார்த்துவிட்டு நீ ஓடிவிடவேண்டும். அவன் போரில் சிங்கமாயிற்றே. அவனுக்குத் தைரியமே வால்; பளபளப்பான

மாரீசன் சீதையைக் கவரவேண்டாம் என்று இராவணனைத் தடுத்தல்.

கத்திகளே பற்கள்; பாணங்களே அங்கம்; ராக்ஷசர்கள் என்ற மான்களை எப்பொழுதும் கொல்லுவது செயல். தூங்கிக்கொண்டிருக்கும் அப்படிப்பட்ட சிங்கத்தை எழுப்புவது சரி அன்று. விற்களாகிய முதலைகளையும், பாணங்களைவிடும் கைவேகமாகிய பெருஞ்சேற்றையும், பாணங்களாகிய அலைகளையும், போர் பொருதலாகிய பிரவாகத்தையும் உடைய வெகுபயங்கரமான இராமனென்னும் சமுத்திரத்தில், ராக்ஷசேந்திரா, நீ விழுந்துவிடாதே. இலங்கை நாயக, கோபங்கொள்ளற்க; அரக்கரேறே, சௌக்கியமாக வந்தவழியே திரும்பி இலங்கைக்குச் செல். நீ நின் மனைவிமார்களோடு எப்போதும் இன்புற்று வாழ்ந்திரு. இராமன் தன்மனைவியோடு வனத்தில் வசிக்கட்டும்'' என்றான். மாரீசன் இவ்வாறு சொல்ல, தசக்கிரீவன் இலங்கை சென்றனன்.

---

## முப்பத்திரண்டாஞ்சருக்கம்.

சூர்ப்பணகை இலங்கைசென்று தனக்கு
நேரிட்ட அவமானத்தையும் அரக்கர்களுக்குவந்த ஆபத்தையும்
இராவணனிடம் சொல்லிப் புலம்பல்.

---

இராமர் ஒருவரே கொடிய செயல்கள் செய்துவந்த பதினாலாயிரம் அரக்கர்களையும், திரிசிரனுடன் தூஷணனையும், கரனையும் வதைத்ததைக் கண்ட சூர்ப்பணகை மேகம்போலக் கர்ச்சித்தாள். இராமர் செய்த செயற்கரிய காரியத்தை அவள் கண்டு நடுநடுங்கி, இராவணன் அரசு செய்யும் இலங்கையை நோக்கி ஓடினாள்.

இராவணன் அரசிருக்கை.

அவ்விடத்தில் தனது விமானத்தில், தேவர்கள் மத்தியில் இந்திரன் வீற்றிருப்பது போல, மந்திரிமார்கள் சூழ மிக்க பொலிவோடு இராவணன் வீற்றிருக்கக் கண்டாள். சூரியன் போல ஒளிரும் தங்கத்தால் செய்யப்பட்ட உயர்ந்த ஆசனமொன்றில்,

தங்கவேதிகையின் மத்தியில் கொழுந்து விட்டெரியும் ஹோமத்தீப்போல, தேவர்கள், கந்தர்வர்கள், பூதங் கள், மகாத்துமாக்களாகிய இருஷிகள் முதலியவர்க ளால் ஜெயிக்க முடியாதவனும், வாயைப் பிளந்து கொண்டு உட்கார்ந்திருக்கும் யமன் போலப் பயங் கரமானவனும், தேவர்களுடனும் அசுரர்களுடனும் போர்புரிந்த காலத்தில் வஜ்ஜிராயுதத்தாலும் இடியா லும் உண்டான தழும்புகளையும், ஐராவதத்தின்கொம்பு கள் குத்திய தழும்புகளையும் மார்பில் உடையவனும், இரு பது தோளும், ஒருபது முகமும், அழகான ஆடைகளும், விசாலமான மார்புமுள்ளவனும், எல்லா ராஜலக்ஷணங் களும் அமைந்தவனும், வைடூரியமணியின் நிறமுடையவ னும், ஆடகத்தாலாய குண்டலங்களை அணிந்தவனும், அழகான கைகளும், வெண்மையான பற்களும், மலை போலப் பெரிய முகமும் உடையவனும், தேவர்களுடன் போர்புரிந்தபொழுது விஷ்ணுவின் சக்கரத்தால் நூறு தரம் அடிபட்டவனும், தேவர்களுடைய ஆயுதங்களால் குத்துண்ட உடலையுடையவனும், கலக்கக்கூடாத சமுத் திரங்களைக் கலக்குபவனும், பெருமலைகளைப் பிடுங்கு பவனும், தேவர்களைப் பிசைபவனும், தருமத்தை அழிப் பவனும், பிறர் மனைவிகளைக் கற்பழிப்பவனும், உத்தம மான சகலவித ஆயுதப்பயிற்சியிலும் தேர்ந்தவனும், யக்ஞங்களுக் கெப்போதும் இடையூறு செய்பவனும், ஒருகாலத்தில் போகவதி என்ற நகரஞ்சென்று வாசுகியை வென்று தக்ஷகனுடைய அன்பான மனைவியை எடுத் தோடினவனும், கைலாச பருவதத்துக்குச் சென்று குபே ரனைச்செயித்து நினைத்தவிடம் செல்லும் புஷ்பகம் என்ற விமானத்தைக் கொண்டுவந்தவனும், திவ்வியமான சைத் திரரதம் என்ற பூங்காவையும் அதிலிருந்த தாமரை ஓடையையும் நந்தனவனத்தையும் தேவர்களுடைய தோட் டங்களையும் அழித்தவனும், மலைக்கொப்பான தனதுதேகத்

தோடு எழுந்து நின்று இருகரங்களையும் நீட்டி வெகுகாந்தியுடன் உதிக்கும் சூரிய சந்திரர்களைத் தடுத்துவிடுபவனும், பதினாயிரம் வருஷகாலம் காட்டில் தவம்புரிந்து சுயம்புக்கடவுளுக்குத் தனது தலைகளை அறுத்து ஓமம் பண்ணினவனும், யுத்தத்தில் மானிடர் நீங்கலாக, மற்றத் தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள், பிசாசர்கள், பதகர்கள், உரகர்கள் முதலியவர்களால் அழிவில்லாதவனும், பெருவலியின் செருக்கால் அந்தணர்கள் மந்திரங்களோதி யாகத்தில் ஹோமம் பண்ணும் அவிசையும் தேவதைகளுக்கு அவ்வந்தணர்கள் கொடுக்கும் பாகங்களையும் அவர்கள் பானம்பண்ண வைத்திருக்கும் சோமபானத்தையும் நாசம்பண்ணுபவனும், யக்ஞத்தை அழிப்பவனும், எல்லாருக்கும் கொடுமைசெய்பவனும், அந்தணர்களை வதைப்பவனும், கெட்டநடத்தை உள்ளவனும், தயையற்றவனும், அன்பற்றவனும், எப்பொழுதும் எந்தப்பிராணிகளையும் இம்சிப்பவனும், எவ்வுலகத்துக்கும் பயமுண்டாக்குகிறவனும், மகாபலம்பொருந்தியவனும், சூரனுமான இராவணன் வீற்றிருப்பதைச் சூர்ப்பணகை கண்டாள். நல்லாடை புனைந்து, நற்கலனணிந்து, நற்றார் சூடி, கால காலன் உட்கார்ந்திருப்பதுபோல, அரக்கர் மன்னவனும் புலஸ்திய வம்சத்தின் கொழுந்துமான தன் தமையன் இராவணன் வீற்றிருப்பதைச் சூர்ப்பணகை கண்டாள். மந்திரிகள் புடைசூழ, உலகத்தை அழிக்கத் தகுந்த ஆண்மையோடு உட்கார்ந்திருந்த இராவணனைக்கிட்டி மகாத்துமாவாகிய லக்ஷ்மணனால் அங்கபங்கம் பண்ணப்பட்டவளான, நினைத்தவிடங்களில் சஞ்சரிக்கும் சூர்ப்பணகை பயத்தால் மெய்பதறி நெருப்புப்பொறி பறக்கின்ற விசாலமான கண்களையுடைய இராவணனுக்குத் தான் அடைந்த அங்கபங்கத்தைக் காட்டி இவ்விதக் கொடிய வார்த்தைகளைச் சொல்லுவாளாயினள்.

---

## முப்பத்துமூன்றுஞ்சருக்கம்.

*இராவணன் தனக்கு வந்த கேட்டை அறியாமலிருந்ததற்காக அவனைச் சூர்ப்பணகை நிந்தித்தல்.*

---

பின்னர், வெகுபரிதாபமான நிலைமையிலிருந்த சூர்ப்பணகை, மந்திரிகள் மத்தியில் உட்கார்ந்திருந்த உலகத்தை அழச்செய்யும் கொடிய பராக்கிரமமுள்ள இராவணனைப்பார்த்து, வெகு கோபத்துடன் பின்வருமாறு சொன்னாள்:—" நீ இஷ்டப்படி எல்லாம் நடந்து, சுகங்களில் ஆழ்ந்து மயக்குற்று, கேட்பவர்கள் ஒருவருமில்லாமல், நினக்குப் பெருங்கேடு வந்துவிட்டதைக் கூட அறிந்துகொள்ளாமல் இருக்கிறாய். அற்பபோகங்களில் மூழ்கிக் காமத்தில் ஆழ்ந்து அற்பவழியில் நடக்கும் அரசனை அவனுடைய குடிகள், சுடுகாட்டுத் தீயைப் போல, மதிக்கமாட்டார்கள். செய்யவேண்டிய காரியங்களைத் தக்ககாலத்தில் செய்யாத அரசன் தனது நாட்டை அக்காரியங்களுடன் இழந்துவிடுவான். காரியங்களைத் தெரிந்துகொள்ள ஒற்றரை அனுப்பாதவனும், வேண்டிய காலங்களில் குடிகளுக்குத் தரிசனம் கொடுக்காதவனும், தன்புத்தியின்றிப் பிறர் புத்திப்படி நடப்பவனுமான அரசனைத் தூரத்தில் இருந்துகொண்டே குடிகள், சேறடைந்த ஆற்றை யானை நீங்குவதுபோல, நீங்கிவிடுவார்கள். தன்புத்தியால் தன் இராச்சியத்தை ரக்ஷிக்காத அரசன் சமுத்திரத்தில் முழுகிய மலைகள்போல் ஒருபொழுதும் விளங்கமாட்டான். தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள் முதலானவர்களுடைய பகையைச் சம்பாதித்துவைத்துக்கொண்டு, அவர்கள் என்ன செய்கிறார்களென்று ஒற்றர்களால் அறிந்துகொள்ளாமல் விஷயசபலமே பெரிதாகக்கொண்டிருக்கும் நீ எவ்வாறு அரசனாகுவாய்? ஓ

சூர்ப்பணகை இராவணனை இகழல்.

ராக்ஷச, நீ சிறுபிள்ளைத் தன்மையுள்ளவனும் புத்தி அற்றவனும் அவசியமாகத் தெரிந்துகொள்ளவேண்டியவை களைத் தெரிந்துகொள்ளாதவனுமாய் இருக்கிறாய். ஆயின் நீ எவ்வாறு அரசனாகுவாய்? கொற்றவனே, ஒற்றரும் பொக்கிஷமும் இராசநீதியும் தங்கள் வசமில்லாத அரசர்கள் சாதாரண சனங்களுக் கொப்பாவார்கள். ஒற்றர்களாகின்ற கண்களால் வெகுதூரத்தில் நடக்கும் விஷயங்களை அறிகின்றதனால் அரசர்கள் தீர்க்கதரிசி களென்று சொல்லப்படுகிறார்கள். நமது சுற்றத்தார் ஜனஸ்தானத்தில் மாண்டதை நீ இன்னும் அறிந்துகொள் ளாதபடியால் உனக்குச் சாரணர்கள் இல்லையென்றும், உன்னைச்சுற்றி உட்கார்ந்திருக்கும் மந்திரிகள் சாமான்யர்க ளென்றும் நானெண்ணுகிறேன். இராமனொருவனால் வெகு கொடிய செயல்கள்புரிந்துவந்த பதினாலாயிரம் ராக்ஷசர் களும் கரனும் தூஷணனும் கொல்லப்பட்டார்கள். அன் றியும், அவன் ரிஷிகளுக்கு அபயம் கொடுத்துத் தண்ட காரணியத்திற்கு க்ஷேமத்தை உண்டாக்கி ஜனஸ்தானத் தை அலைத்துவிட்டான். நீ காமவலையில் சிக்கிக்கொண்டு, மதிமயங்கி, பராதீனனாய், உனக்கு என்னகேடு நேர்ந்துள் ளது என்பதை அறியாமலிருக்கிறாய். கொடியவனாய், லோ பியாய், கள்ளுண்பவனாய், கர்வமடைந்தவனாய், புத்தி யீனனாய் அரசாண்டுவரும் மன்னவனுக்குச் சங்கடம் வந்த காலத்தில் உலகத்தார் உதவிசெய்யார்கள். தன்னைப்பற்றி அதிகமாக எண்ணிக்கொள்ளுகிறவனும், நல்வழியில் நில் லாதவனும், தன்னைப்பற்றிப் பெருமையாகக் கருதுகிற வனும், கோபிக்குங்குணமுள்ளவனுமான அரசனை அவன் சொந்தச்சனங்களே கொன்றுவிடுவார்கள். அவன் சொல் லும் பேச்சை ஒருவரும் கேட்கமாட்டார்கள். அவனைக் கண்டு ஒருவரும் பயப்படமாட்டார்கள். அவன் சீக்கிரம் தனது இராச்சியத்தை இழந்து வறுமை அடைந்து துரும்புக்கொப்பாவான். காய்ந்த கட்டையும் கல்லும்

மண்ணும் ஏதாவது பயன்பட்டாலும் படலாம்; தனது பதவியை இழந்த அரசன் ஒன்றுக்கு முதவான். கட்டிக் கழித்த வஸ்திரம்போலவும், கசங்கிப்போன பூமாலைபோல வும் இராச்சியத்தை இழந்த மன்னன் ஆற்றலுள்ளனாயினும் ஒரு பொருளாக மதிக்கப்படான். ஆனால், வெகு சாக்கிர தையுள்ளவனாகவும், எல்லாம் அறிந்தவனாகவும், புலன் களை அடக்கினவனாகவும், நன்றியுள்ளவனாகவும், நீதிநெறி யில் நடப்பவனாகவும் இருக்கும் அரசன் வெகுகாலம் அர சாளுவான். கண்களை மூடிக்கொண்டு தூங்கினபோதி லும், நீதியாகின்ற கண்களைவிழித்திருப்பவனும் தன்னு டைய கோபங்களின் பலன்களை யாவரும் அறியவைப்பவ னுமாகிய அரசன் எல்லாராலும் மதிக்கப்படுகிறான். இரா வணா, அரக்கர்களுக்குண்டாகிய நாசத்தை ஒற்றர்களால் அறிந்துகொள்ளாத நீ துற்புத்தியுள்ளவன்; நற்குணங் களொன்றும் இல்லாதவன். பிறரை அவமானம் செய் துகொண்டு, காமத்தால் கவரப்பட்டு, காலமும் இடமு மறிந்து செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாது, குணங் களையும் தோஷங்களையும் பகுத்தறியாதிருக்கும் நீ உனது இராச்சியத்தை இழந்து விரைவில் அழிவடையப்போகி றாய்''. இவ்வண்ணம் சூர்ப்பணகை தனது குற்றங்களை எடுத்துரைக்க, அரக்கர் வேந்தனாகிய இராவணன் அவை களைப்பற்றி நினைத்து, தனது செல்வத்தையும், செருக்கை யும், சேனையையும் சீர்தூக்கி, கொஞ்சநேரம் தனக்குள் ளேயே சிந்தித்துக்கொண்டிருந்தான்.

---

## முப்பத்துநான்காஞ்சருக்கம்.

*இராவணன் சூர்ப்பணகையிடம் இராமரைப்பற்றி விசாரித்தல்.*

---

இவ்வாறு சூர்ப்பணகை சபை நடுவே கொடுஞ்சொற் களைச் சொல்ல, இராவணன் கோபங்கொண்டு, அவளை

நோக்கி "இராமன் என்பவன் யார்? அவன் பராக்கிரமம் என்ன? அவன் உருவம் எப்படிப்பட்டது? அவன்வீரிய மெத்தன்மையது? என்ன காரணத்தால் ஒருவராலும் நெருங்கமுடியாத தண்டகாரணியத்துக்கு அவன் வந்திருக்கிறான்? அவன் எந்த ஆயுதங்களைக் கொண்டு இத்தனை ராக்ஷசர்களையுங் கர தூஷண திரிசிரர்களையுங் கொன்றான்?" என்று வினவினன். இவ்வாறு அரக்கர் மன்னனான இராவணன் கேட்கச் சூர்ப்பணகை வெகு கோபத்துடன் தான் கண்டபடி இராமருடைய பராக்கிரமத்தைப் பற்றிச் சொல்லத்தொடங்கினாள் :—"தசரதகுமாரனான இராமன் நீண்டகைகளும் விசாலமான கண்களு முடையவன்; மரவுரியு மான்றோலு முடுத்தவன்; மன்மதன்போல் உருவமமைந்தவன். அவன் பொற்பூண் பூண்ட, இந்திரதனுசுபோன்ற தனது வில்லை நாணேற்றி, மகாவிஷமுள்ள சர்ப்பங்களுக்கொப்பான கூர்மையான பாணங்களைத் தொடுக்கிறான். அவன்யுத்தத்தில் வில்லைவளைப்பதை நான் காணவில்லை; சரமாரியால் அரக்கர் சேனை மாண்டு விழுவதையே நான் கண்டேன். கல்மழையால் இந்திரன் பலிதமான பயிர்களை அழிப்பதுபோல, இராமன் ஒருவன் பாதசாரியாக நின்றுகொண்டு பயங்கரமான உருவம் பொருந்திய பதினாலாயிரம் அரக்கர்களையும் தூஷணனுடன் கரனையும் ஒன்றரை முகூர்த்தகாலத்தில் கூரிய பாணங்களால் கொன்றான். அவன் ரிஷிகளுக்கு அபயங் கொடுத்தான்; தண்டகாரணியத்துக்கு க்ஷேமத்தையுண்டாக்கினன். மகாத்துமாவாகிய இராமன் பெண்கொலை பழியெனக்கருதி என்னை அவமானப்படுத்தி உயிர்தப்பி ஓடவிட்டான். அவன் தம்பி வெகு பராக்கிரமமும் அவனுக்கொப்பான சவுரியமுமுள்ளவன்; இராமனிடத்து அதிக அன்பும் பக்தியு முடையவன். அவன் பெயர் லக்ஷ்மணன். அவன் மிக்கவீரன்; குற்றத்தைச் சகியாதவன்; ஒருவராலுஞ்ஜெயி

சூர்ப்பணகை இராமருடைய வலிமையைக் கூறல்.

க்க முடியாதவன்; எல்லாரையும்ஜெயிக்கவல்லவன்; அதிக பராக்கிரமமும் புத்தியும் வலியுமுடையவன்; அவனே இராமனுடைய வலக்கையென்றும், புறத்திற்சஞ்சரிக்கும் உயிர் என்றும் சொல்லலாம். விசாலமான கண்களும், பூரணசந்திரன்போன்ற முகமும் உடைய இராமனுடைய அரியமனைவி அவனுடைய நன்மையையே எப்பொழுதும் நாடுபவள். அழகிய கூந்தலும், அழகிய மூக்கும், அழகிய துடையும் உடைய அந்தத்தையல்தண்டகாரணியத்திற்கு ஒரு தேவதைபோலவும், மற்றொரு லக்ஷ்மிபோலவும் விளங்கிக்கொண் டிருக்கிறாள். பொன்போன்ற மேனியும் சிவந்து உயர்ந்த நகங்களும் உடைய அந்த அழகுடையாள் பெயர் சீதை. அம்மெல்லிய இடையையுடையாள் விதேகராஜனுடைய குமாரி. அவ்வளவு அழகுவாய்ந்த தேவப்பெண்ணையாவது, கந்தர்வப்பெண்ணையாவது, யக்ஷ கன்னியையாவது, கின்னரியையாவது, நான் இவ்வுலகத்தில் கண்டதேயில்லை. எவனுக்குச் சீதை மனைவியோ, எவனைச் சீதை சந்தோஷத்தோடு தழுவுகிறாளோ, அவனுடைய பாக்கியம் இவ்வுலகத்தில் இந்திரனுடைய பாக்கியத்துக்கு மேலானது. அவ்வளவு நல்நடக்கையும், தேகத்தின் வனப்பும், நிகரற்றொளிரும் காந்தியுமுள்ள அவள்தான் நினக்குச் சரியான மனைவி. நீதான் அவளுக்குச் சரியான் கணவன். அம்மடந்தையை நின்னுடைய மனைவியாக்க வேண்டுமென்று எடுத்துவர நான் முயன்றேன். வலியபுயங்களையுடையானே, அதற்காகத்தான் கொடிய லக்ஷ்மணன் என்னை இவ்வாறு அங்கபங்கம்செய்தான். பூரண சந்திரனுக்கொப்பான முகமுடைய அச்சீதையைக் கண்டால் அது முதல் மன்மத பாணங்களால் நீவருந்துவாய். அவளை மருவவேண்டுமென்று இஷ்டமிருந்தால் உடனே தானே வெற்றியடையும்பொருட்டு வலக்காலைத் தூக்கிவைத்து நட. காட்டில் வசிக்கும் இராமனைக்

சூர்ப்பணகை சீதையை வர்ணித்தல்.

கொன்று மாண்டொழிந்த அரக்கர்களுக்குத் திருப்திபண்ணிவை. உன்னுடைய கூரிய பாணங்களால் இராமனையும் மகாரதனான லக்ஷ்மணனையுங் கொன்று கணவனையிழந்த சீதையை மணஞ்செய்துகொள். அரக்கர் வேந்தே, நான் சொல்லுவது நின் மனத்திற் கொத்திருந்தால் உடனே நான் சொல்லும்வண்ணம் நட. அவர்கள் வலிமையையும் உன்னுடைய பலத்தையும் சீர்தூக்கிப்பார்த்து அப்பெண்ணைப் பலாத்காரமாகக் கொண்டுவந்துவிடு. அவயவக் குற்றங்கள் ஒன்றுமில்லாத அழகிய சீதையே உனக்கேற்ற மனைவி. இராமன், னது கொடிய பாணங்களால், ஜனஸ்தானத்திலிருந்தி அரக்கர்கள் எல்லாரையும் வதைத்ததைக்கேட்டும், கரதூஷணர்கள் மாண்டதைக்கண்டும் நீ எவ்வாறு நடந்துகொள்ளவேண்டுமோ அவ்வாறு நடந்துகொள்."

## முப்பத்தைந்தாஞ்சருக்கம்.

இராவணன் மறுபடியும் மாரீசனிடம் சென்றது.

இராவணன் சீதையைக்கவரப் புறப்படல்.

சூர்ப்பணகை கூறிய மயிர்க்கூச்செறியும்படியான மொழியைக் கேட்டுத் தான் செய்யவேண்டிய காரியத்தை மந்திரிகளுடன் ஆராய்ந்து இராவணன் புறப்பட்டான். அவன் அக்காரியத்தின் குண தோஷங்களையும், அதற்குச் செய்யவேண்டிய முயற்சியையும், அதன் பலாபலத்தையுங்குறித்துத்தனக்குள்ளேயே யோசித்து, அதை இப்படித் தான் முடிக்கவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு, தனதுபுத்தியை ஒரு நிலையில் நிறுத்தி, அதன்மேல் தனது வாகனசாலைக்குப் போயினன். இரகசியமாக இராவணன் இரதசாலையுள் புகுந்து "சீக்கிரம் இரதத்தைக் கட்டு" என்று சாரதிக்குக் கட்டளையிட்டான். அவ்வாறு

கட்டளையிடப்பட்ட சாரதி உடனே அவன் காட்டின இரதத்தைப் பூட்டினான். தன திஷ்டப்படி சஞ்சரிப்பதும், பொன்னால் செய்யப்பட்டதும், இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டதும், பிசாசுபோன்ற முகங்களையுடைய பொற்கலனணிந்த கோவேறுகழுதைகள் பூட்டப்பட்டதும், மேகத்தின் முழக்கத்துக்கொப்பான முழக்கத்தை உடையதுமான அந்த இரதத்தில் ஏறி இராவணன் சமுத்திரக்கரையை நோக்கிச் சென்றான். வெண்சாமரம் இரட்ட, வெண்குடை நிழற்ற, பத்தரைமாற்றுத்தங்கத்தால்செய்யப்பட்ட ஆபரணங்களை வைடூரிய மணியின் நிறத்துக்கொப்பான தனது மேனியில் அணிந்து, அழகான ஆடைதரித்து, பத்துத்தலைகளையும் இருபது கைகளையுமுடையவனும் தேவ சத்துருவும் ரிஷிகாதகனும் பெரிய சிகரங்களையுடைய மலையரசன் போன்றவனுமான அரக்கர் மன்னவன், இஷ்டப்படி செல்லும் இரதமேறி, மின்னல்களோடும் கொக்குக்களோடும் ஆகாசத்தில் விளங்கும் மேகம் போல், தோற்றினான். அதிவீரனான இராவணன் தான் போகும் வழியில் சமுத்திரக் கரையோரமாகவிருந்த மலைகளையும், பூத்துக்காய்த்து நிற்கும் ஆயிரக்கணக்கான மரங்களையும், குளிர்ந்த நீர் நிரம்பிய தாமரை ஓடைகளையும், யாகவேதிகளையுடைய அநேக ஆச்சிரமங்களையும், வாழைத்தோட்டங்கள், துவரங்கொல்லைகள், தென்னந்தோப்புகள், ஆச்சா, பனை, தமாலம் முதலான பல பூத்தமரங்களடர்ந்த காடுகள், சோலைகள் முதலியவைகளையும், ஆயிரக்கணக்கான நாகர்கள், சுபர்ணர்கள், கந்தர்வர்கள், கின்னரர்களையும், கர்ப்பத்திலிருந்து பிறவாத வைகானசர்கள், மஷகோத்திரத்தில் பிறந்த ரிஷிகள், வாலகில்லியர்கள், சூரியகிரணங்களை உணவாகக் கொண்ட மரீசிபர்கள், தத்துவ நிர்ணயிகளாகிய ரிஷிகள், பரமரிஷிகள், தங்களாசைகளை அடக்கிய ரிஷிகள், சித்தர்

இராவணன் சென்றவழியின் வர்ணனை.

கள், சாரணர்கள் முதலியவர்கள் நிரம்பியமுனிவராச்சிரமங் களையும், நகைகளையும் மாலைகளையும் அணிந்தவர்களும், திவ்யமான அழகையுடையவர்களும், ஜலக்கிரீடையையும் ரதியையும் நன்ருக அறிந்தவர்களுமான ஆயிரம் அப்ஸரஸ்திரீகள் நிரம்பிய இடங்களையும், வெகு பாக்கியசாலிகளான தேவப்பெண்கள் சூழ்ந்துநிற்கும் இடங்களையும், அமிர்தத்தைப் புசிக்கும் தேவர்களும் தானவர்களும் உலாவும் ஸ்தலங்களையும், அன்னங்கள், கிரௌஞ்சங்கள், நீர்க்கோழிகள், சாரசங்கள் முதலிய பறவைகள் ஒலிக்கும் நீர்நிலைகளையும், வைடூரியக் கற்களையுடைய அழகான இடங்களையும், மனோகரமான் சமுத்திரத்தின் தோற்றத்தையும், வெண்மை நிறமுடையனவும், விசாலமுள்ளனவும், மாலைகள் கட்டப்பட்டனவும், வாத்தியங்கள் ஒலிப்பனவுமான விமானங்களையும், அவைகளிலேறித் தவத்தால் உலகங்களெல்லாவற்றையும் வென்று தங்களிஷ்டப்படி சஞ்சரிக்கும் கந்தர்வர்களையும், அப்சரஸ்திரீகணங்களையும் பார்த்தான். தன் வேரிலிருந்து பெருங்காயம் என்கிற பிசினைக்கொடுக்கும் மூலம் என்றசெடியடர்ந்த வனங்களையும், ஆயிரக்கணக்கான சந்தனக்காக்களையும், மிக்க மணங்கமழும் சோலைகளையும், அகிலடர்ந்த சிறு காடுகளையும், பெருங் காடுகளையும், வால்மிளகு, ஜாதிக்காய் முதலிய வாசனைத் திரவியங்கள் நிரம்பிய கானகங்களையும், தமால மலர்களையும், மிள்குகொடிகளின் புதர்களையும், கரையோரத்தில் உலர்ந்துகொண்டிருந்த நன்முத்துக் குவியல்களையும், சங்கக் குவால்களையும், பவளத்தின் போர்களையும், தங்கமலைகளையும், வெள்ளிராசிகளையும், அழகானமலையருவிகளையும், தெளிவான ஓடைகளையும், தனதானியங்கள், உத்தமிகள், இரத்தினங்கள், யானை குதிரை முதலியவைகள் நிறைந்த நகரங்களையும் பார்த்துக்கொண்டு அரக்கர்மன்னன் சென்ருன். அவ்வாறு அவன் சமுத்திரக்கரையோரமாகச் செல்லுகையில் சமுத்திரத்துக்குச் சமீபத்தில் சுகமான இளங்

காற்று வீசப்பெற்றுத் தேவலோகம்போல் விளங்கும் ஓர் அழகிய சமதரையைக் கண்டான். அங்கே அவன் நான்குபக்கங்களிலும் முநிவர்கள் சூழ மேகம்போல் விளங்கும் ஆலமரமொன்றைக் கண்ணுற்றான். அதனுடைய கிளைகள் அதைச்சுற்றி நான்கு பக்கங்களிலும் நூறுயோசனை தூரம் பரவி நின்றன. அந்தக் கிளை ஒன்றில் முன்னொருகாலத்தில் கருடன் தான் புசிப்பதற்காக ஒரு பெரிய யானையையும் ஆமையையும் எடுத்துக்கொண்டு வந்துட்கார்ந்தது. அங்ஙனம் உட்கார்ந்தபொழுது அதன் பாரத்தைத் தாங்கமுடியாமல் இலைகள் செறிந்த அக்கிளை படபட வென்று முறிந்தது. அக்கிளையின்கீழ் வைகானசர்கள், மஷகோத்திரத்தில்பிறந்தரிஷிகள், வாலகில்லியர்கள், சூரிய கிரணங்களைப்புசிக்கும் மரீசிபர்கள், அஜர்கள், புகையைக்குடிக்கும் ரிஷிகள் முதலிய அநேக முநிவர்கள் வசித்துக்கொண்டிருந்தார்கள். கருடன் அம்முநிவர்கள்மேல் தயைகூர்ந்து, அவ்வாறு முறிந்த கிளையைக் கீழேவிழவிடாமல், நூறு யோசனை நீளம் உடையதாக விருந்தபோதிலும் அதைத் தான் முன்னரே கொண்டுவந்த யானை ஆமைகளோடு சேர்த்து ஒற்றைக்காலால் தூக்கிக்கொண்டு, வெகு வேகமாக ஆகாயத்தில் பறந்து, அவ்விரு பிராணிகளுடைய மாமிசத்தையும் புசித்துவிட்டு, மரக்கிளையை வேடர்களிருந்த நாடொன்றில் எறிந்து, அதை யழித்து, முநிவர்களைக் காப்பாற்றினதற்காக வெகு சந்தோஷமடைந்தது. அந்தச் சந்தோஷத்தால் அது முன்னரில் இருமடங்கு பராக்கிரமம் அடைந்து அமிர்தத்தைக் கவர எண்ணிற்று. பின்பு நன்றாக இருப்புக் கம்பிகள்போட்டு இரத்தினத்தால் கட்டப்பட்ட வீட்டில் இந்திரன் இரகசியமாக வைத்திருந்த அமிர்தத்தை அது அவ்விருப்புக் கம்பிகளை முறித்து இரத்தினச்சுவரைப் பிளந்தெறிந்துவிட்டுத் தூக்கிக்கொண்டு போயிற்று. அவ்விதமாகக் கருட

கருடன் அமிர்தம் கவர்ந்த கதை.

ஞல் அடையாளம் செய்யப்பட்டதும் அநேக மக ரிஷிகளின் கூட்டங்கள் வாசம்பண்ணுவதுமான சுபத்திரம் என்ற பெயருள்ள பேராலமரத்தைக் குபேரனுக்குப் பின்பிறந்த இராவணன் கண்டான். பின்பு அவன் சமுத்திரத்தைத் தாண்டி அக்கரைசேர்ந்து அங்கு ஜனசஞ்சாரமில்லாத அழகான அரணியத்தின் ஒருபக்கத்தில் ஓர் ஆச்சிரமத்தை அடைந்தான். அவ்விடத்தில் மான்தோல் புனைந்து, சடைமுடி தரித்து, மரவுரி உடுத்து, உண்டியைச் சுருக்கி இருந்த மாரீசன் என்ற ராக்ஷசனை அவன் கண்டான். மாரீசன் மனிதர்களால் செய்யமுடியாத உபசாரங்களைச் செய்து அரக்கராஜனை ஏற்றுக்கொண்டான். அவன் ஆகாரம் தீர்த்தம் முதலியவைகளைத் தானே இராவணனுக்குக் கொண்டுவந்து கொடுத்து அவனைப்பார்த்துப் பின்வரும் பொருள் பொருந்திய சொற்களால் "ராக்ஷசேந்திரா, இலங்கையில் எல்லாம் க்ஷேமமா. யாதுநிமித்தம் நீ இவ்வளவு சீக்கிரமாக மறுபடியும் இங்கே திரும்பி வந்தனை?" என்று வினவினன். இவ்வாறு மாரீசன் வினவ, அவனைப் பார்த்து, பேசுவதில் சமர்த்தனுன மிக்கவலியுள்ள இராவணன் சொல்லலுற்றுன்.

மாரீசன்.

---

## முப்பத்தாருஞ்சருக்கம்.

*இராவணன் மாரீசனிடம் தனக்குநேரிட்ட கஷ்டத்தையும், சீதையை அபகரிக்கவேண்டுமென்று தான்கொண்ட எண்ணத்தையும் எடுத்துச் சொல்லல்.*

---

"ஓ மாரீசா, நான் சொல்லுவதைக் கேள். எனக்கு மிகுந்த துக்கமொன்று நேர்ந்திருக்கிறது. துக்கமடைந்தவனை அத்துக்கத்திலிருந்து நீக்கிவைக்க நீதான் வல்லவன். ஜனஸ்தானத்தில் என் தம்பி கரனும், மகாபலமுள்ள

இராவணன் மாரீசனை உதவி செய்யவேண்டல்.

தூஷணனும், எனது தங்கை சூர்ப்பணகையும் இருந்தது உனக்குத் தெரியுமே. மனிதர் மாமிசத்தைப்புசிக்கும்மகாபலம்பொருந்திய திரிசிரனும் அங்கிருந்தான். இன்னும் அநேக வீரர்களும், போரில் இச்சையுடைய அரக்கர்களும் எனது கட்டளையால் அவ்விடத்தில் சுகமாக வசித்துக்கொண்டிருந்தார்கள். இவர்கள் அவ்வரணியத்தில் தங்கள் இயற்கைக் கொத்தபடி தர்மம் செய்பவர்களை வருத்திக்கொண்டிருந்தார்கள். இவ்வண்ணம் பதினாலாயிரம் அரக்கர்கள் கொடிய செய்கைகளைப்புரிந்துகொண்டு கரனுடைய இஷ்டப்பிரகாரம் நடந்துகொண்டு யுத்தத்தில் மிகத் தேர்ந்தவர்களாய் அவ்விடத்தில் வசித்துக்கொண்டு வந்தார்கள். அவர்கள் ஜனஸ்தானத்தில் பல ஆயுதங்களை எடுத்துக்கொண்டு கரனை முன்னிட்டு இராமனைப் போரில் எதிர்த்தார்கள். இராமன் அதைக் கண்டு கோபங்கொண்டு அவர்களை ஒன்றுங் கடிந்துபேசாமல் வில்லில் அம்புகளைச்சந்தித்து விடுத்தான். வெகு பலம் பொருந்திய அப்பதினாலாயிரம் அரக்கர்களும் பாதசாரியாய் யுத்தம்செய்த மனுஷனாகிய இராமன் ஒருவனால் கொல்லப்பட்டார்கள். போரில் கரனும் மாண்டான்; தூஷணனும் மாய்ந்தான்; திரிசிரனும் மடிந்தான். தண்டகாரணியமும் பயம் நீங்கியது. கோபமடைந்த தனது தந்தையால் மனைவியுடன் காட்டுக்கோட்டப்பட்ட அற்ப க்ஷத்திரியனும், ஆயுளிழந்தவனுமான இராமன் அந்தப் பெரிய அரக்கர் சேனையை அழித்தான். அவன் கெட்ட நடைக்காரன்; வெகு குரூரமானவன்; பொல்லாதவன்; புத்தியீனன்; அற்பன்; தன் புலன்களை அடக்காதவன்; தருமமற்றவன்; பாவி; எப்பொழுதும் எல்லாப்பிராணிகளையும் இம்சிப்பவன். அவன் தன்பலத்தின் செருக்கால் கொஞ்சமேனும் பகையில்லாத எனது தங்கையின் காதுகளையும் மூக்கையும் அறுத்து அவளுடைய உருவத்தைக் குலைத்தான்.

தேவப்பெண்ணுக் கொப்பான அவன் மனைவி சீதை யை நான் ஜனஸ்தானத்திலிருந்து எடுத்துவரப்போகி றேன். அவ்விஷயத்தில் நீ எனக்கு உதவிசெய்யவேண் டும். மகாபலம் பொருந்திய மாரீசா, நீ ஒருவன்மட்டும் எனக்கு உதவியாக என்பக்கத்தில் நின்றால் கும்பகர் ணன் முதலான எனது சகோதரர்கள் தேவர்களுடன் கலந்து என்னைப் போரில் எதிர்த்தபோதிலும் நான் அவர் களை லக்ஷ்யம் பண்ணமாட்டேன். ஆகையால், நீ எனக்கு உதவிசெய்யவேண்டும். நீ வெகுவல்லவன். யுத்தத்திலும், பராக்கிரமத்திலும், செருக்கிலும், உனக்கொப்பானவர் கள் ஒருவருமில்லை. நீயோ பலவித உபாயங்களை அறி ந்தவன்; பெரிய சூரன்; சகல மாயைகளிலும் தேர்ந்த வன். இக்காரணத்தைக் கொண்டுதான் நான் இப் பொழுது உன்னிடம் வந்தேன். நீ எனக்குச் செய்ய வேண்டிய உதவி இன்னதென்பதை நான் சொல்லுகி றேன் கேள். நீ அழகான வெள்ளிப் புள்ளிகள் அமைந்த ஒருபொன்மானாக உருவமெடுக்கவேண்டும். அவ்வுரு வுடன் இராமனாச்சிரமம் சென்று, நீ சீதையின் முன்னர் உலாவவேண்டும். அவ்வாறு உலாவும் உன்னைச் சீதை உண்மையாகவே ஒருமானாக எண்ணித் தனது கணவனை யும் அவன் தம்பி லக்ஷ்மணனையும் பார்த்து உன்னைப் பிடித்துக்கொடுக்கும்படிவேண்டுவாள். அவ்விருவர்களும் உன்னைப்பிடிக்க ஆச்சிரமத்தைவிட்டுப் புறப்பட்டபின்பு, ஒருவித இடையூறுமின்றி, சந்திரனது காந்தியை இராகு விழுங்குவதுபோல், நான் சீதையை எடுத்துச்செல்வேன். தனதுமனைவி போய்விட்ட துயரத்தால் வருத்தமடைந்த இராமனை, நான் காரியம் நிறைவேறப்பெற்றுச் சந்தோஷ மடைந்த மனத்தை உடையவனாய், வெகு எளிதாக வதைசெய்வேன்."

இவ்வண்ணம் இராவணன்சொன்ன சொல்லைக்கேட்டு மகாத்மாவாகிய மாரீசன் முகம் சோர்ந்து பயத்தால் நடுங்

இராவணன் எண்ணத்தைக் கேட்டு மாரீசன் பயந்தது.

கிறான். உலர்ந்துபோன தனது உதடுகளை அவன் நாவினால் நக்கிக்கொண்டு, கண்களை இமைகொட்டாமல் விழித்து, இறந்தவன் போலாகி, மிக்க துயரமடைந்து, இராவணனை உற்றுப்பார்த்தான். இராமருடையசக்தியை முன்னரே அரணியத்தில் அறிந்தவனாதலின் மாரீசன், மனம் நடுங்கித் துயரப்பட்டுக்கொண்டு, இராவணனைப் பார்த்துக் கைகூப்பி, அவனுக்கும் தனக்கும் நன்மையை உண்டாக்கக்கூடிய உண்மையான வார்த்தைகளைச் சொல்லுவானாயினான்.

---

## முப்பத்தேழாஞ்சருக்கம்.

இராமருடைய விரோதம் வேண்டாமென்று மாரீசன் இராவணனை வேண்டல்.

---

அவ்வாறு அரக்கர் மன்னவன் சொன்ன சொல்லை வெகு புத்திமானும் விஷயங்களை நன்றாக அறிந்தவனுமான மாரீசன் கேட்டு அவனைப்பார்த்து "வேந்தே,

மாரீசன் இராவணனுக்குப் புத்தி கூறல்.

இனிமையாகப் பேசுகின்றவர்கள் எங்கும் உளர்; கேட்கும்பொழுது அப்பிரியமாய்த் தோன்றினபோதிலும் பிறகு மிகுந்த நன்மையைப் பயக்கும்படியான வார்த்தைகளைப் பேசுகிறவர்களும் கேட்பவர்களும் அரியர். ஒற்றர்களில்லாமையாலும், சாபல்லியத்தாலும், இந்திரனுக்கும் வருணனுக்கும் ஒப்பான மகாவீரியமும் மகாகுணமும் பொருந்திய இராமனை நீ உண்மையாக அறிந்துகொள்ளவில்லை. ஐயனே, இராமன் கோபங்கொண்டு இவ்வுலகத்தில் அரக்கர்கள் இல்லையாம்படிசெய்யாமலிருந்தால்,சீதை பிறந்தது உனது நாசத்திற்கு அல்லாமலிருந்தால், சீதையின்காரணத்தால் எனக்கும் ஒருவிதகேடும் உண்டாகாம

லிருந்தால், புத்திசொல்லுகிறவர்களில்லாமல் இஷ்டப்படி நடப்பவனும் நீதியற்றவனுமான உன்னை அரசனாகப்பெற்ற இலங்கை உன்னுடனும் மற்ற அரக்கர்களுடனும் அழியாமலிருந்தால், அது போதும். உன்னைப்போன்றகொடிய செய்கையும் துராலோசனையுமுள்ள அரசன், கெட்டபுத்தியால், தனக்கும் தன் பந்துஜனத்திற்கும் தன் தேசத்திற்கும் அழிவை உண்டுபண்ணுகிறான். இராமன் தனது தந்தையால் கைவிடப்பட்டவனல்லன்; ஒருபொழுதும் மரியாதை தவறுபவனுமல்லன். அவன் லோபியு மல்லன்; கொடிய செய்கையுள்ளவனுமல்லன்; க்ஷத்திரியப்பதடியுமல்லன்; தருமம்முதலிய நற்குணங்கள் இல்லாதவனுமல்லன். அவன் குரூரமுள்ளவனல்லன்; பிராணிகளை இம்சிக்கிறவனல்லன். அவன் எப்பொழுதும் தாயாருடைய மனத்தைக் களிக்கச் செய்பவன். சத்தியத்திற்கஞ்சிய தனது தந்தை கைகேயியால் வஞ்சிக்கப்பட்டதை அறிந்து "நீங்கள் பயப்படவேண்டாம், உங்கள் சத்தியத்தை நான் நிலைநிறுத்தி வைக்கிறேன்" என்று தன்தந்தைக்குத் தைரியம்சொல்லித் தான் காட்டுக்குவந்தனன். அவன் தனதுதாய்கைகேயியின்கோரிக்கையையும் தனது தந்தை தசரதரின் சத்தியத்தையும் நிறைவேற்றும் பொருட்டே இராச்சியத்தையும்இராஜபோகங்களையும் துறந்து தண்டகாரணியத்திற்குவந்தான். ஐயனே, இராமன்கொடியனுமல்லன்; மதியற்றவனுமல்லன்; புலன்களை அடக்காதவனுமல்லன். நீ அவனைப்பற்றி இவ்வாறு கொடுஞ்சொல் சொல்லுவது தகாது. இராமன் தருமத்தின் அவதாரம். அவன் வெகுசாது; உண்மையான பராக்கிரமமுள்ளவன். இந்திரன் தேவர்களுக்கு இறைவனாமாறுபோல, அவன் இவ்வுலகத்திற்கெல்லாம் இறைவன். பதிவிரதாதருமத்தால் பாதுகாக்கப்பட்டு விளங்கும் சீதையை, அக்கினியினிடமிருந்து அதன் ஒளியை அபகரிக்க எண்ணுகிறவன்போல,

இராமரை இகழவேண்டாம் எனல்.

பலாத்காரமாக இராமனிடமிருந்து எடுத்தோட நீ எவ்வாறு எண்ணுகிறாய்? பாணங்களாகிய ஜ்வாலையையும், விற்களும் கத்திகளுமாகிய விறகுகளையும் உடைய, அணுகமுடியாத இராமாக்கினியை நீபரபரப்புடன்நெருங்குவது தவறு. வில் என்ற பெருவாயால் பாணமென்னும் அணுகமுடியாத் தீயைக் கக்கிக்கொண்டு, தனதுகையில்வில்லையும் பாசம்போல் வைத்துக்கொண்டு நின்று, சத்துரு சைநியங்களை அழிக்கும் இராமனாகிய காலனை, நீ உன்னுடைய ராச்சியத்தையும் சுகத்தையும் முழுதும் விட்டுவிட்டு, உயிர்மேல் வைத்திருக்கும் அன்பையும் ஒழித்தவனாகி, நெருங்குவது கூடாது. அவனது பராக்கிரமம் ஒப்பிடமுடியாதது. அவன் மனைவி சீதை அவனுடைய வில்லால் பாதுகாக்கப்பட்டுவருகிறாள். அவளைக்காட்டிலிருந்து எடுத்துவர உன்னால் ஒருபொழுதும் முடியாது. அப்பெண்மணி சிங்கத்தின் பிடர்போன்ற பிடரையுடைய மானிடசிங்கமாகிய இராமனுடைய உயிருக்குயிரான மனைவி; எப்பொழுதும் அவனிடம் நீங்காத அன்புடையவள். வெகு பராக்கிரமசாலியாகிய இராமனுடையமனைவியை, கொழுந்துவிட்டெரியும் தீயின் ஒளியை எடுத்தோடக்கருதுபவன்போல், நீ எடுத்தோட எண்ணுவது ஒருபொழுதும்முடியாத காரியம். அரக்கர்வேந்தே, இந்தப் பயனற்ற வீண்காரியத்தில் நீ முயற்சிசெய்து என்ன பிரயோசனம்? போரில் அவனை நீகாணுமளவே உன்னுடையவாழ்வு. நீ உன்னுடையபிராணன்மேலும், சுகங்களின்மேலும், எய்தற்கரிய இராச்சியத்தின்மேலும் ஆசை உள்ளவனாய், அவைகளை வெகுகாலம் அனுபவிக்கவேண்டுமென்ற எண்ணம் கொண்டிருந்தால், இராமனுடைய பகையை ஒருகாலும் தேடாதே. விபீஷணன் முதலான தருமமறிந்த மந்திரிகளுடன் கூடி யோசித்து, இக்காரியத்தின் நன்மைதீமைகளைச் சீர்தூக்கிப் பார்த்து, உன்னுடையபலத்தையும் இராமனுடைய பலத்

சீதையைக் கவரவேண்டாம் எனல்.

ஷதையும் ஆராய்ந்து, பின்பு தக்கபடி நட. அக்கோசலதேச த்து இராஜகுமாரனைப் போரில் எதிர்த்துநிற்க ஒருபொழுதும் உன்னால் முடியாதென்று நான் எண்ணுகிறேன். நிசாசரேந்திரா, நான் உனக்கு நன்மையாயும் யுக்தமாயும் மீளவும் சொல்லப்போகிற சொல்லைக் கேள்" என்றான்.

---

## முப்பத்தெட்டாஞ்சருக்கம்.

*மாரீசன் தான் இராமரிடம் பட்ட அவஸ்தையை இராவணனுக்குச் சொல்லல்.*

---

"நான் முன்னொருகாலத்தில் ஆயிரம் யானைகளின் பலமுடைய மலைக்கொப்பான உருவுடன் இவ்வுலகமெங்கும் சஞ்சரித்தேன். அப்பொழுது நான் முகில்போல் கரிய நிறமுடையவனாய், காதில் தங்கக்குண்டலங்கள் அணிந்து, தலையில் கிரீடம் புனைந்து, கையில் பரிகையாயுதம் ஏந்தி, உலகத்துக்கெல்லாம் பெரும் பயத்தை உண்டுபண்ணிக்கொண்டு, ரிஷிகளின் மாமிசத்தைப் புசித்து, தண்டகாரணியத்தில் திரிந்துகொண்டிருந்தேன். அப்படி நானிருந்தகாலத்தில் என்னைக் கண்டு விசுவாமித்திரமுநிவர் பயந்து தசரதரிடம் சென்று அவரைப்பார்த்து "வேந்தே, மாரீசனுக்கு நான் மிகவும் அஞ்சுகிறேன் ஆகையால், நான் யக்ஞம் பண்ணுங்காலத்தில் இராமன் வந்து என்னைப் பாதுகாக்கவேண்டும்" என்றார். இவ்விதமாக அம்முநிவர்சொல்லத் தருமாத்துமாவாகிய தசரதர் அவரைப்பார்த்து "இராமன் சிறு பையன்; பன்னிரண்டுவயதுள்ளவன்; ஆயுதப்பயிற்சியில் நன்றாய்த் தேர்ந்தவனல்லன். தாங்கள் அருள்செய்தால் நானே எனது சதுரங்கசேனைகளோடும் வந்து, ஓ முநிசிரேஷ்டரே, தங்கள் சத்துருக்களாகிய அரக்கர்களை வதைக்கி

*மாரீசன் விசுவாமித்திரர் யாகத்தில் இராமரை எதிர்த்தது.*

றேன்" என்று மறுமொழி கூறினர். விசுவாமித்திரர் அது கேட்டு அரசனைநோக்கி "நீர் போரில் தேவர்களுக்கு உதவியாக இருந்திருக்கிறீர்; உம்மால் போரில் செய்யப் பட்ட ஆச்சரியமானகாரியங்கள் மூவுலகங்களுக்கும் தெரிந் திருக்கின்றன. ஆயினும் அரக்கர்களை வதைக்க இராமனு லன்றி மற்றொருவரால் முடியாது. ஆகையால், அரசனே உம்முடைய சேனைகள் இங்கேயே இருக்கட்டும். இராமன், சிறுகுழந்தையாக இருப்பினும், அரக்கர்களை வதைக்க வல்லவன். நான் இராமனையே அழைத்துப்போகிறேன். உமக்கு க்ஷேமம்உண்டாவதாக" என்று சொல்லி, இராம னை அழைத்துக்கொண்டு சந்தோஷமாகத் தமது ஆச்சிர மம் சென்றார். அவர் அதன்மேல் தீக்ஷை செய்துகொண்டு தண்டகாரணியத்தில் யக்ஞம்பண்ண உட்கார்ந்தார். அவ ருக்கு அருகில் இராமன் தனது வில்லைக் கையிற் பிடித்து நின்றான். அவன் யௌவனபருவத்தை முற்றும் அடை யாதவனும் தாமரை இதழ்போன்ற இரண்டு கண்களை உடையவனுமாய், ஒற்றை வஸ்திரம் உடுத்து, கழுத்தில் ஒருபொன்மாலை அணிந்து, கையில் வில்லைப்பிடித்து, தேக காந்தியால் தண்டகாரணிய முழுவதையும் திகழச்செய்து, அப்பொழுது உதயமான இளஞ்சந்திரன்போல விளங்கி னான். அப்போது நான் மேகம்போன்ற எனது கரிய தேகத்துடன் சுவர்ண குண்டலங்களை அணிந்துகொண்டு, வெகு பலசாலி என்றும் வெகு வரங்கள் பெற்றவன் என் றும் செருக்கடைந்து, அவ்வாச்சிரமத்துக்குச்சென்றேன். என்னைக் கண்ட நிமிஷத்தில் அவன் கொஞ்சமேனும் கலக்கமின்றி வில்லை நாணேற்றினான். நான் அவனைச் சிறுபிள்ளை என்று எனது புத்தியின்மையால் அலக்ஷ்யமாய் எண்ணி வெகு வேகமாக விசுவாமித்திர முனிவரு டைய வேதிகையை நோக்கிச்சென்றேன். அப்போது இரா மன் சத்துருக்களை வதைக்கும் வல்லமையுள்ள கூரிய பாண

மாரீசன் கடலில் தள்ளப்பட்டது.

மொன்றை எய்து என்னைத்தூக்கி நூறுயோசனை தூரத்துக்கு அப்பால் சமுத்திரத்தில் எறிந்தனன். அவன் அப்பொழுது என்னைக் கொல்லக் கருதவில்லை யாகையால், நான் பிழைத்தேன். ஆனால், அவன் விடுத்த பாணங்கள் என்னைப் பிரக்ஞையற்றவனாகப்பண்ணி, ஆழமான சமுத்திர ஜலத்தில் தள்ளின. பிறகு, வெகுநேரங் கழிந்து, நான் நல்லறிவடைந்து இலங்கைவந்து சேர்ந்தேன். நான் இவ்வாறு பிழைத்தேனாயினும் எனக்கு உதவியாகவந்த அரக்கர்களெல்லாம் ஆயுதப்பயிற்சி இல்லாத சிறுபிள்ளையாகிய இராமனால் சிறிதும் சிரமமில்லாமல் அப்போதே வதை செய்யப்பட்டார்கள். இதனாலேதான், இராவணா, நான் உன்னைத் தடுக்கிறேன். இராமனுடன் போர் புரியக் கருதுவாயானால், நீ வெகு சங்கடங்கள்பட்டு நாசமடைவாய். எப்பொழுதும் அநேகவிதமான கிரீடைகளையும் ரதிகளையும் செய்துகொண்டு கூட்டமாக விழாக்கண்டு சுகமாகவிருக்கும் அரக்கர்களுக்கு வீணாகக் கெடுதியை விளைவிப்பாய். சீதையின் நிமித்தம், மாடமாளிகைகளை உடையதாகி, அநேகவித இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்கும் இலங்கைக்கும் அழிவு வருவிப்பாய். கொடியவர்களுடன் வசிக்கும் நல்லவர்கள், தாங்கள் பாபங்கள் செய்யாவிடினும், அக்கொடியவர்களுடைய பாவங்களால், பாம்புவாழும் மடுவிலுள்ள மீன்கள்போல, அழிந்துவிடுவார்கள். நல்லசந்தனம் பூசி, அழகிய ஆபரணம் அணிந்து விளங்கும் அரக்கர்கள் உன்னுடைய பாவத்தால் மாண்டு பூமியில் விழுவதை நீ காணுவாய். அவர்கள் தஞ்சமற்றவர்களாய், சிலர் மனைவிகளோடும், சிலர் மனைவிகளை இழந்து தனித்தவர்களாயும், பத்துத் திக்கிலும் ஓடுவார்கள். இலங்கை பாணங்களால் மூடுண்டு, தீமண்டி, வீடுகளெல்லாம் நீறாகிப் பாழாவதை நீ காணுவாய். பிறர்மனைவியைக் கவர்வதைவிடப் பெரும்

இராவணனை இராமருடன் போர்புரியவேண்டா மெனல்.

பாவம் வேறொன்றில்லை. அரசனே, உனக்கோ ஆயிரம் மனைவிமார்கள் இருக்கிறார்கள். உன்மனைவிகளோடு நீ சந்தோஷமாக இருந்துகொண்டு உன் குலத்தையும், உன்னுடைய மரியாதையையும், சம்பத்தையும், நாட்டையும், உன்னால் விரும்பப்படும் உயிரையும் பாதுகாத்துக்கொள். நீ நின்மனைவிமார்களோடும் தோழர்களோடும் வெகுகாலம் வாழவேண்டுமென்று விரும்பினால் இராமனுடைய பகையைத் தேடாதே. உனக்கு மிகவும் வேண்டிய அன்பனான நான் இவ்வாறு பெரிதும் தடுப்பதைக் கேளாமல் பலாத்காரமாகச் சீதையைத் தொடுவாயானால், நீ உனது பலத்தை இழந்து, உனது பந்துக்களுடன் இராமனுடைய பாணங்களால் மாய்ந்து, யமனுடைய மாளிகைக்குப்போவது நிச்சயம்.''

---

## முப்பத்தொன்பதாஞ்சருக்கம்.

இராமரைத் தான் மற்றொருதரம் எதிர்த்து
உயிர்பிழைத்ததையும் அன்றுமுதல் அவர் பயத்தால் யோகியானதையும்
மாரீசன் இராவணனிடம் சொல்லல்.

---

“ இவ்வாறு வெகு கஷ்டப்பட்டு அப்போரில் நான் இராமனிடமிருந்து தப்பிப்பிழைத்தேன். பின்பு நடந்ததைச் சொல்லுகிறேன், பதிலுத்தரம் சொல்லாமல் கேள். முன்பு இராமனால் அலக்ஷ்யமாய் விடப்பட்டபடியால், பின்னர் நான் செருக்குக் கொண்டு, வேறு இரண்டு அரக்கர்களுடன் உருமாறித் தண்டகாரணியம் புகுந்தேன். தீக்கொப்பான நாவும், கூர்மையான கோரப்பல்லும் உடைய பெரிய மான் வடிவமெடுத்து, முனிவர்களுடைய மாமிசத்தைப் புசித்துக்கொண்டு, நான் அக்காட்டில் திரிந்தேன். ரிஷிகள் அக்கினி

மாரீசன் தண்டகாரணியத்தில் இராமரை எதிர்த்தது.

ஹோத்திரம் செய்யுமிடங்களிலும், ஸ்நானம்பண்ணும் அறைகளிலும், பூசைக் குரித்தான விருக்ஷங்களுள்ள இடங்களிலும் சென்று, முனிவர்களைக்கொன்று, அவர்களுடைய இரத்தத்தைக் குடித்து, மாமிசத்தைப் புசித்துத் தவத்திற் கிடையூறு செய்தேன். நான் பெரிய கோரமான உருவமுடையவனாகி, வனத்திலுள்ளவர்கள் என்னைக்கண்டு நடுங்கும்படி நடந்தேன். இரத்தவெறிகொண்டு இப்படி நான் தவத்தைக் கெடுத்துக்கொண்டு தண்டகாரணியத்தில் திரியும்காலத்தில் ஒருநாள், தவவேடம் பூண்டு தருமத்தை வளர்த்துக்கொண்டு வந்த இராமனையும், வெகு பாக்கியசாலியான சீதையையும், மகாரதனான லக்ஷ்மணனையும் கண்டேன். உண்டியைக் குறைத்துக்கொண்டு, எல்லாப் பிராணிகளுக்கும் நன்மை புரிந்துவந்த இராமனுடைய பலத்தை நான் முன்போலிருக்கும் என்று கருதாமல், என் புத்தியின்மையால் அவனைத் தபசி என்று அலக்ஷியம்பண்ணி, அவனிடம் முன்பு நான் வைத்திருந்த பகைமையால் வெகு கோபங்கொண்டு, எனதுகூரான கொம்பினால் அவனைக்கொன்றுவிடவேண்டுமென்று, மானுருவத்தோடு போய் எதிர்த்தேன். அவன் தனது வில்லை வளைத்துச் சத்துருக்களை வதைக்கும் வல்லமை பொருந்திய மூன்று பாணங்களை விடுத்தான். அவை அவனுடைய வில்லிலிருந்து கருடனுக்கொப்பான வேகத்துடன் கிளம்பின. இரத்தத்தைத் தங்களுக்கு உணவாகக்கொண்ட, கொஞ்சம் வளைந்த முனைகளையுடைய, அப்பாணங்கள் வச்சிராயுதத்துக் கொப்பாக எங்கள் மூவர்களையும் நாடி வெகு வேகமாக வந்தன. முன்னரே இராமனுடைய பாணத்தின் பலத்தை அறிந்தவனாகையால் நான் ஓடித் தப்பினேன். மற்றை இருவர்களும் அப்பாணத்தால் மாண்டார்கள். இராமனுடைய பாணத்தால் மாளாமல் நான் எவ்வாறோ உயிர்

மாரீசன் உயிர் தப்பி ஓடினது.

தப்பி, கெட்ட செய்கைகளைவிட்டு, தவவேடம்பூண்டு, அன்றுமுதல் இவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டு வசிக்கின்றேன். மரங்களைப்பார்க்கும்பொழுதெல்லாம் ஒவ்வொருமரத்திலும், கையில் பாசமேந்திய யமனைப்போல, மரவுரியும் மான்றோலுமுடுத்த இராமனை நான் காண்கிறேன். அதிக பயமுடைமையால், என்னைச்சுற்றி எப்போதும் ஆயிரம் இராமர்கள் நிற்க நான் காண்கிறேன். இக்காடு முழுதும் இராமன் ஒருவனே இருக்கிறதாக எனக்குத்தோற்றுகிறது. இராமன் இல்லாத இடங்களிலும் அவனை நான் காண்கிறேன். தூக்கத்திலுங்கூட நான் இராமனைப்பற்றிக் கனவுகண்டு உளறிக்கொண்டு பிரக்ஞையற்றவனாகிறேன். இராமனுக்கு நான் மிகவும் பயந்திருக்கிறபடியால் ரகாரத்தில் தொடங்கும் ரத்தினம், ரதம் என்ற பெயர்கள்கூட எனக்குப் பெரும்பயத்தைஉண்டாக்குகின்றன. இராகவனுடைய வீரியத்தை நான் நன்றாக அறிவேன். நீ அவனுடன் யுத்தம்செய்வது சரியன்று. அவன் பலியையும் நமுசியையும் வதைக்கும் சக்தியுள்ளவன். ஓ ராவணா, நீ இராமனிடம் போர்புரிந்தாலும் சரி, போர்புரியாது விட்டாலும் சரி, நான் பிழைத்திருக்கவேண்டுமென்ற எண்ணம் உனக்கிருந்தால், அவன் பெயரை என்முன் சொல்லாதே. இவ்வுலகத்தில் தருமத்தைச் செய்துவந்த சாதுக்கள் அநேகர் பிறர் குற்றங்களுக்காக மாண்டிருக்கிறார்கள். அவ்வாறு உன்குற்றத்துக்காக நான் மாளவேண்டிவரும். ஆகையால், நீ உன் இஷ்டப்படி செய். நான் உனக்குத் துணைவரேன். மிகுந்த காந்தியும் வீரமும் பலமும் உடைய இராமன் அரக்கர் குலத்துக்கு யமனாவது நிச்சயம். ஜனஸ்தானத்திலிருந்த கரன் சூர்ப்பணகையின்பொருட்டுக் குற்றமற்ற இராமனோடு எதிர்த்து மாண்டுவிட்டால் அது எவ்வாறு இராமனுடைய குற்றமாகும், இதை நீ நன்றாக யோசித்துச் சொல்லு. நீ என் நண்பன்

மாரீசன் அடைந்த பயம்.

ஆகையால் நான் உன் நன்மையை நாடி இந்த உண்மை யைச் சொன்னேன். நீ என் சொல்லைக் கேளாதுவிடில் உன்னுடைய பந்துக்களுடன் இராமனால் போரில் மாண்டு விடுவாய்.''

## நாற்பதாஞ்சருக்கம்.

இராவணன் வெகு கோபங்கொண்டு தான்சொன்னபடி செய்ய மாரீசனைக் கட்டளையிடல்.

வெகு நியாயமாக மாரீசன்சொன்ன நன்மைபயக்கும் சொற்களை, இறந்துபோக எண்ணினவன் மருந்தை உட்கொள்ளாதவாறுபோல, இராவணன் ஒத்துக்கொள்ளவில்லை. அன்றியும் வெகு அநுகூலமாகப் பேசின மாரீசனை நோக்கி, அரக்கர் மன்னவனான இராவணன், தனக்கு முடிவுகாலம் கிட்டிவிட்டபடியால், பின்வரும் கடுஞ்சொற்களைச் சொன்னான் :—"ஓ மாரீசா, நீ என்னிடத்தில் சொன்ன சொற்கள் உவர்நிலத்தில் விதைத்த விதைபோலப் பயனடையமாட்டா. அவைகளினால் நான் பயந்து வெகு பாவியும் புத்தியற்றவனும் மானிடனுமான இராமனோடு போர் புரியாமல் விடேன்.

இராவணன் மாரீசனைப் புத்திசொல்ல வேண்டாமெனல்.

ஒரு பெண்சொற்கேட்டுத் தனது தாய், தந்தை, இராச்சியம், நட்பினர் முதலிய எல்லாரையும் துறந்து காட்டுக்கு வந்து கரனையும் வதைசெய்த அவ்விராமனுடைய உயிர்க்குயிரான மனைவியை நான் உன் கண்முன்பாக அபகரிக்கப்போகிறேன். இவ்வண்ணம் நான் மனத்தில் உறுதி செய்துகொண்டேன். அதனை மாற்றத் தேவாசுரர்களுடன் கூடிய இந்திரனாலும் முடியாது. நான் உன்னிடம் வந்து இக்காரியத்தின் நன்மை தீமையை, அல்லது இதனால் வரும் அபாயங்களை, அல்லது இதை நடத்தி முடிக்க

வேண்டிய உபாயங்களைப்பற்றிக் கேட்டிருந்தால் நீ இப்புத்திகளை எனக்குச்சொல்லத்தகும். அப்படிக்கேட்டிருந்தாலும் தன்க்ஷேமத்தை விரும்பிய நல்லமந்திரி அரசன்முன்கைகூப்பித் தான் சொல்லப்போகிறவைகளைச் சொல்லவேண்டும். அவை அரசன் மனத்திற் கொவ்வாதவைகளாக விருப்பின், அவைகளை வெகு மெதுவாகவும் நன்மைக்காகவென்று வெகு உபசாரத்துடனும் சொல்ல வேண்டுமன்றோ? மரியாதையுடன்விண்ணப்பம் செய்யப்படவேண்டிய அரசர்கள், மரியாதையின்றிக் கர்வமாகச் சொல்லப்படும் சொற்களைச் சகிப்பார்களா? ஒப்பற்ற பராக்கிரமம் பொருந்திய மன்னர்கள் அக்கினி, இந்திரன், சோமன், வருணன், யமன் என்னும் ஐந்து தேவர்களுடைய தன்மைகளை உடையவர்களாய்க் கொடுமை, பராக்கிரமம், நன்மை, அன்பு, தண்டஞ்செய்தல் முதலியவைகளை வகித்திருக்கின்றார்கள். ஆகையால், எக்காலத்திலும் அரசர்கள் மரியாதையுடன் பூசிக்கப்படத்தக்கவர்கள். நீ இந்த இராஜநீதியை அறியாமல் அஞ்ஞானத்தில் முழுகி, உனது கெட்டகுணத்தால் உன்னிடம் விருந்தாக வந்த என்னைப் பார்த்து இக்கொடுமையான வாசகங்களை மொழிந்தாய்.

தான் சொன்னதைச்செய்யச் சொல்லல்.

ஓ ராக்ஷசா, நான் உன்னிடம் இந்த விஷயத்தின் நன்மை தீமைகளைப் பற்றியாவது தகுதியைப்பற்றியாவது கேட்கவரவில்லை. நான் உன்னுடைய உதவியை மட்டும் கேட்டேன். நீ செய்யவேண்டிய உதவி இதுதான் : வெள்ளிமயமான புள்ளிகளையுடைய ஒரு பொன்மான் உருவங்கொண்டு, இராமனுடைய ஆச்சிரமம் சென்று, சீதைமுன்பாக உலாவி, அவள் மனத்தில் ஆசை உண்டாக்கி, பின்பு நீ உன்னிஷ்டப்படி போ. பொன்மானாகச் சென்ற உன்னைச் சீதை கண்டு வியப்புற்று 'இம்மானை எனக்குச் சீக்கிரம் பிடித்துக்கொடுங்கள்' என்று தனது கணவனாகிய இராமனிடம் சொல்லு

வாள். உன்னைத் துரத்திக்கொண்டு இராமன் வெகுதூரம் தொடர்ந்து வந்த பிறகு, நீ இராமன் கதறுவதுபோல் 'ஓ சீதா, ஓ லக்ஷ்மணு' என்று கூப்பிடு. அதைக் கேட்டவுடன், இராமனுக்கு ஆபத்துநேரிட்டதாகச் சீதை கருதி லக்ஷ்மணனைப் போய்ப்பார்க்கும்படி சொல்லுவாள். லக்ஷ்மணனும் தமையன்மேல் வைத்த அன்பால் இராமனைத் தேடிச்செல்லுவான். இவ்வாறு இராமனும் லக்ஷ்மணனும் அவ்விடம் விட்டுப் போனவுடன், இந்திரன் சசியைக் கொண்டுசென்றதுபோல, நான் சீதையை அவ்விடமிருந்து கவர்ந்துகொண்டு போய்விடுவேன். இது செய்துவிட்டு, ஓ ராக்ஷசா, நீ உன்னிஷ்டப்படி எவ்விடம் போகவேண்டுமோ அவ்விடம்போ. நானிந்த உபகாரத்துக்காக உனக்கு என்னுடைய இராச்சியத்தில் பாதி கொடுக்கிறேன். நண்பனே, என்னுடைய இக்காரியத்தை முடிப்பதற்காக நீ புறப்பட்டுத் தண்டகாரணியம் செல்லு. நானும் என் இரதத்திலேறிக்கொண்டு உன்பின்னே வருகிறேன். யுத்தம்செய்யாமல் இராமனை வஞ்சித்துச் சீதையைக் கவர்ந்து என் காரியத்தை முடித்துக்கொண்டு நான் உன்னுடன் இலங்கைக்குத் திரும்புவேன். என்கட்டளைப்படி நீ செய்யாதபக்ஷத்தில் நான் உன்னை இப்பொழுதேகொன்றுவிடுவேன். நான் பலாத்காரம்பண்ணி உன்னைக்கொண்டு இக்காரியத்தைச் செய்விப்பேன். அரசனுடைய விருப்பத்திற்கு மாறாக நடப்பவன் ஒருகாலும் சுகத்தை அடையமாட்டான். நீ மானுருவமெடுத்து இராமனிடத்தில் போவது உன் உயிருக்கு அபாயந்தான். ஆனால் என் விருப்பத்துக்கு மாறாக நடந்தால், நிச்சயமாக உனக்குச் சாவு நேரிடும். இவைகளை ஆலோசித்து, உன் புத்திக்குத் தகுந்ததென்று தோன்றுவதை நீசெய்."

## நாற்பத்தொன்றாஞ்சருக்கம்.

மாரீசன் மறுபடி தடுத்தல்.

---

இது ராஜாக்கினை என்று இராவணனால் தன் மனத்துக்கு விரோதமான செய்கையைச் செய்யும்படி கட்டளையிடப்பட்ட மாரீசன் அவனைப்பார்த்து, சற்றும் அஞ்சாது கோபத்தோடு கூறுவானாயினன் :— "நிசாசர, எந்தப் பாவி நீயும், உனது பிள்ளைகளும், தேசமும், மந்திரிமார்களும், எல்லாரும் ஒருங்கே அழிய இவ்விதமான போதனையை உனக்குச் செய்தான்? எந்தப் பாவிச்கு நீ சுகமாக வாழ்வது விருப்பமில்லை? உன்

மாரீசன் சீதையைக் கவரவேண்டாம் எனல்.

சாவிற்கு வழியை எவன் கபடமாக உனக்கு நல்லவழி என்று இவ்வண்ணம் உபதேசம் பண்ணினன்? பலமில்லாதவர்களாகிய உன்னுடைய பகைவர்கள் பலசாலியான இராமனுடன் உனக்குச் சண்டை மூட்டி உன்னை அழிக்கக் கருதுகிறார்கள் என்பது திண்ணம். கெட்ட எண்ணத்தை உடைய எந்த அற்பன் உனக்கிவ்வாறு புத்திசொன்னன்? உன்னுடைய அகிருத்தியத்தால் நீ அழிந்துபோகும்படி எவன் இச்சிக்கிறான்? இராவணா, கெட்ட வழியில் புகும் உன்னைத் தடுக்காத அமைச்சர்கள் கொல்லப்படத்தக்கவர்களாயினும் நீ அவர்களைக் கொல்லுகின்றிலை. தனது மனம்போனபடி கொடியவழியில் செல்லும் அரசனை அக்கொடிய வழியிலிருந்து நல்ல மந்திரிகள் தடுத்துவைப்பார்கள். ஆனால், அவ்வாறு உன்னை அடக்க நல்லமந்திரி ஒருவனுமில்லை. ராஜசிரேஷ்டனே, அரசனுடைய அருளினாலேதான் மந்திரிமார்கள் தருமார்த்த காமங்களையும் புகழையும் அடைகிறார்கள். அரசன் அருளிலன் ஆயின் அவைகள் ஒன்றும் அவர்களுக்குக் கிட்டா. அரசனுடைய துர்க்குணத்தால் குடிகளும் கஷ்டத்தை

அடைகிறார்கள். கொற்றவரேறே, குடிகளுக்கு அறமும் புகழும் அரசன்மூலமாக வருகின்றன. ஆகையால், அரசன் எப்போதும் குடிகளால் பாதுகாக்கப்படத்தக்கவன். கொடியவனும், குடிகளுடைய நன்மையைக் கருதாதவனும், செருக்கடைந்தவனுமான அரசன் அரசுசெய்யவல்லனாகான். அதுபோலக் கெட்ட எண்ணமுள்ள மந்திரிகள் ஆற்றலில்லாத சாரதியால் மேடுபள்ளமுள்ள வழியில் செலுத்தப்பட்ட தேர்போல நாசமடைவார்கள். இவ்வுலகத்தில் நல்வழியில் நின்று தருமம் செய்துவந்த சாதுக்கள் அநேகர் பிறர் அபராதத்தால் தங்கள் பரிவாரங்களுடன் மாண்டிருக்கிறார்கள். நரிகளால் காக்கப்பட்ட ஆடுகள்போல, பிரஜைகள் நன்மையைக் கருதாத கொடுங்கோன் மன்னனால் பாதுகாக்கப்படும் குடிகள் செழிப்படையார்கள். கொடியவனும், துர்ப்புத்தியுள்ளவனும், ஐம்புலன்களை அடக்காதவனுமான நின்னை அரசனாகவுடைய அரக்கர்கள் அனைவர்களும் அவசியமாக நாசமடையப் போகிறார்கள். காக்கைவரப் பனம்பழம் விழுந்தாற்போல, எனக்குப் பயம் நேரிட்டதென்று நான் கவல்கின்றிலேன்; நீ உன்னுடைய சேனையுடன் விரைவில் மடிந்துபோகப் போகிறாயே என்று துக்கப்படுகிறேன். இராமன் என்னைக்கொன்று, சீக்கிரமாக உன்னையும் கொன்றுவிடப் போகிறான். போரில் சத்துருவால் கொல்லப்படுவதால் நான்கிருதார்த்தனாய்விடுவேன். இராமனைக் கண்டமாத்திரத்தில் நான் மாண்டுவிட்டதாக நீ நிச்சயித்துக்கொள். சீதையைக் கவர்ந்துகொண்டுபோய் நீயும் நின் உறவினர்களுடன் மாண்டுவிடுவாய். நீ சீதையை என்னுடைய உதவியால் ஆச்சிரமத்திலிருந்து எடுத்துவந்துவிட்டபோது நீயென்ன நானென்ன இலங்கையென்ன இராக்கதர்களென்ன உய்வதில்லை. அரக்க, உன் இதத்தை நாடித் தடுத்துச்சொல்லும் என் சொற்களை நீ கேட்கின்றாயில்லை.

கவர்ந்தால் சுற்றமித்திரர்களுடன் நாசமடைவாய் எனல்.

ஆயுள்குன்றி உயிர்போகும் பக்குவத்தில் உள்ளவர்கள் நண்பர்கள் சொல்லும் நற்புத்தியைக் கேட்பதில்லை!"

## நாற்பத்திரண்டாஞ் சருக்கம்.

மானுருவங்கொண்டு மாரீசன் சீதைமுன் விளையாடுவது.

இவ்வாறு இராவணனைப்பார்த்துக் கடிந்துரைத்த மாரீசன் அவனிடத்தில் உள்ள பயத்தால் "நாம் இருவரும்போவோம்" என்றுசொன்னான். பிறகும் அவன் இராவணனை நோக்கி "கையில் வில்லும், பாணமும், கத்தியும் பிடித்திருக்கும் இராமன் முன் நான்போனால் அவன் அந்த க்ஷணமே என்னுயிரை வாங்கிவிடுவான். இராமனை எதிர்ப்பட்ட பின் உயிர் தப்பி வருகிறதென்பது இல்லை. அவன் உன் உயிருக்குக் காலபாசம்போல்வன். நீ கெட்டவன். உனக்கு என்னால் என்னசெய்ய முடியும்? நான் இதோ போகிறேன். உனக்கு வெற்றி உண்டாகுக" என்று சொன்னான். மாரீசன் இவ்வாறு சொன்னதைக் கேட்டு இராவணன் சந்தோஷமடைந்து அவனை இறுகத்த்தழுவி "என் விருப்பப்படிசெய்ய உடன்பட்ட இதுதான் உன் தைரியத்துக்கொத்தது. நீ முன் வேறொரு அரக்கனாக விருந்தாய்; இப்பொழுதுதான் மாரீசன் ஆயினாய். இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டுப் பேய்போன்ற முகங்களையுடைய கழுதைகள் பூட்டி விளங்கும் இந்த இரதத்தில் என்னுடன் சீக்கிரமாக ஏறு. சீதையை மயக்கிவிட்டு உன் இஷ்டப்படி நீ போ. இராமனும் லக்ஷ்மணனும் போகத் தனியேயிருக்கும் சீதையை நான் தூக்கிக்கொண்டு வந்துவிடுகிறேன்" என்று கூறினான். பின்னர் இராவணனும் மாரீசனும் தேவவிமானம்போன்ற அந்தத் தேர்மீதேறி அவ்வாச்சிரமத்தைவிட்டு வேகமாகப் புறப்பட்டார்

மாரீசன் பயந்து துணைசெய்ய ஒருப்படல்.

கள். அவர்கள் வழியில் அநேகநாடுகள், நகரங்கள், வனங்கள், மலைகள், ஆறுகள் முதலியவைகளைப் பார்த்துக்கொண்டு தண்டகாரணியம் சேர்ந்து இராமருடைய ஆச்சிரமத்தை அடைந்தார்கள். தேரினின்றும் இறங்கி இராவணன் மாரீசனுடன் அவ்வாச்சிரமத்தைப் பார்த்தான். பின்பு அவன் மாரீசன் கையைப் பற்றிக்கொண்டு "அதோ வாழைகளால் சூழப்பட்டுத் தோன்றுகிறதே அதுதான் இராமனுடைய ஆச்சிரமம். இனி நீ நாம் இங்குவந்தகாரியத்தைச் செய்யக்கடவாய்" என்றான். அதைக்கேட்ட மாரீசன் ஆச்சரியமான ஒரு மானுருவங்கொண்டு இராமருடைய ஆச்சிரமத்துக்கு முன்புறத்தில் சென்று உலாவினான். பார்ப்பதற்கு அந்த மானுடைய கொம்பின் நுனிகள் இரண்டும் இந்திரநீலக்கற்கள் போல விளங்கின. அதன் முகத்தோற்றம் கறுத்தும் வெளுத்தும் இருந்தது. அதன் வதனம் செந்தாமரைபோலவும் காதுகள் நீலோற்பலம் போலவும் இருந்தன. அதன்கழுத்துக் கொஞ்சம் உயர்ந்திருந்தது; உதடுகள் இந்திரநீல ரத்தினத்திற் கொப்பாக விளங்கின. வயிறு முல்லைமலரும் சந்திரனும் வைரக்கல்லும் போல விளங்கிற்று; பக்கங்கள் இரண்டும் இலுப்பைப்பூப்போலவும் தாமரைப்பூவின் தாதுபோலவும் விளங்கின. காற்குளம்புகள் வைடூரியக்கற்கள்போல இருந்தன; துடை மெல்லிதாயும் சந்துகள் திண்ணியனவாயும் இருந்தன. இந்திரவில்லுப்போலப் பலவித வருணங்கள்பொருந்தியவால் உயர்த்தப்பட்டு இருந்தது. சீதையினுடைய மனத்தைக் கவர்வதற்காக ஒரு கணப்பொழுதிற்குள் மாரீசன் அநேகவிதமான அழகிய இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டாற்போன்ற புள்ளிகளையுடைய பொன்மான் உருவங்

மாரீசனும் இராவணனும் தண்டகாரணியம் சேர்தல்.

மாரீசன் மானுருவம் கொள்ளல்

மாயமானின் வர்ணனை.

கொண்டு அவ்வழகானகாட்டையும் இராமருடைய ஆச்சிர மத்தையும் பொலிவுறச்செய்து பசும்புற்றரைகளில் புல் மேய்ந்து திரிந்தனன். நூற்றுக்கணக்கான வெள்ளிப்புள் ளிகளையுடைய அந்த அழகியமான் தழைத்திருக்கும் மரங் களின் கொழுந்துகளைக் கடித்துத்தின்று திரிந்தது. வா ழைத்தோட்டத்துள்போவதும் கர்ணிகார வனத்தைச் சுற் றுவதும் சீதையின் கண்முன் எதிர்ப்படுவதுமாகத் தாம ரைமலர்போன்ற முதுகையுடைய அழகான அந்தமான் இராமருடைய ஆச்சிரமத்தைச் சுற்றிக்கொண்டு தன் இஷ்டப்படி திரிந்தது. அது சிலநேரம் ஓரிடம் மேய்ந்து விட்டு மற்றோரிடத்துக்கோடும்; மறுபடி அங்கிருந்து திரும் பும்; சிறிதுகாலம் வெகுவேகமாக ஓடித் திரும்பும்; சிறிதுநேரம் துள்ளிவிளையாடும்; சிறிதுவேளை தரையில் படுக்கும்; சிலவேளை மான்கூட்டங்களுடன் கூடி ஆச் சிரமத்தின் வாயிலில் வந்து நின்றுவிட்டு ஓடும்; மறுபடி மான்கூட்டங்கள் தொடரத் திரும்பிவரும். இவ்வாறாக மா னுருவங்கொண்ட மாரீசன், சீதை தன்னைப்பார்க்கவேண்டு மென்ற கருத்தினால், அவ்விடத்தில் சுற்றித் திரிந்தான். அந்த மானைக்கண்டு, அக்காட்டிலுள்ள மற்றை மான்கள் அதனருகிற் சென்று, அதை மோந்துபார்த்து, பின் பல திசைகளிலும் ஓடின. மாரீசன் மான்களைக்கொன்று புசிப் பவனாயினும், தன் தன்மை வெளிப்படாதிருக்கும்படி, அவைகளை ஒன்றும்செய்யாது மோந்துகொண்டு திரிந் தான்.

சீதை மானைக் காணல்.

அத்தருணத்தில் அழகிய கண்களையுடைய சீதை மலர் கொய்யும்பொருட்டு அக்காட்டுக்கு வந் தாள். மதர்த்த நோக்கையும், மனத் திற்கு ரம்மியமான முகத்தையும் உடைய அவ்வுத்தமி அங்குமிங்கும் சென்று கர்ணிகாரம், அசோ கம், மாமலர்முதலிய புஷ்பங்களைக் கொய்துகொண்டிருந் தாள். ஆரணியத்தில் வாசஞ்செய்வதற்குத் தக்கவளல்லாத

அந்தச் சீதை, முத்தும் மாணிக்கமும்போன்ற புள்ளிகளையும், அழகிய பற்களையும், வெள்ளிபோன்ற உரோமங்களையுமுடைய அம்மானைக் கண்டுவியப்படைந்து, கண்ணிமையாமல் வெகு சந்தோஷத்தோடும் அன்போடும் பார்த்தாள். அந்த மாயமானும் அவளைக்கண்டு அதிக வேடிக்கையாகத் துள்ளிக்கொண்டு அக்காடெங்கும் திகழும்படி திரிந்தது. தான் ஒருபொழுதும் காணாததும் இரத்தினத்தாலிழைக்கப்பட்டதுபோன்று விளங்குவதுமான அம்மானைச் சீதை கண்டு வெகு ஆச்சரியமடைந்தாள்.

---

## நாற்பத்துமூன்றுஞ்சருக்கம்.

இராமர் சீதையைப் பாதுகாக்க லக்ஷ்மணருக்குக் கட்டளையிட்டு மாயமானைத் தொடர்ந்து செல்லுதல்.

---

குற்றமற்ற அங்கமுள்ளவளும் அழகான தங்கச்சலங்கை அணிந்த இடையினளுமாகிய சீதை அவ்வாறு மலர் கொய்யும்பொழுது, இருவிலாப்பக்கங்களும் வெள்ளியாலும் பொன்னாலும் செய்யப்பட்டதுபோல விளங்கும் அப்பொன்மானைக் கண்டு வெகு சந்தோஷமடைந்து, ஆயுதபாணிகளாகிய தனது கணவனையும் லக்ஷ்மணரையும் அவ்விடத்துக்கு வரும்படி கூப்பிட்டாள். வைதேகியால் அழைக்கப்பட்ட அப்புருஷசிங்கங்கள் அவ்விடம் சென்று நான்குபுறத்தும் பார்த்து அம்மானைக் கண்டார்கள். அதைக்கண்டதும் லக்ஷமணர் சந்தேகப்பட்டு இராமரைநோக்கி "இந்தமானை ராக்ஷச மாரீசன் என்று நான் எண்ணுகிறேன். வேண்டிய உருவங்களை எடுத்துக்கொள்ளும் அந்தப் பாவி மானுருவங்கொண்டு இவ்விடம் வேட்டைக்கு வந்த அநேக அரசர்களைக் கொன்றிருக்கிறான். அந்த மாபாவிதான். இப்பொழுது

சீதை மானை இராமலக்ஷ்மணர்களுக்குக் காட்டல்.

லக்ஷ்மணர் இது மாயமான் எனல்.

இந்த மாயமான் ரூபங்கொண்டிருக்கிறன். இது கந்தர்வ நகருக்கொப்பாக இருக்கிறது. ஓ புருஷசிரேஷ்ட, உலகத்தில் இப்படி இரத்தினமிழைத்த மான் உண்மையாக இல்லை. ஆனபடியால், உலகநாயக, இது மாயை என்பதற்குச் சந்தேகமில்லை'' என்று சொன்னர்.

லக்ஷ்மணர் அப்படிச் சொன்னதைச் சீதை தடுத்து, மாரீசனுடையமாயை மனத்தைக் கவர, புன்னகைசெய்து, சந்தோஷங்கொண்டு, கணவனைப்பார்த்து "என் நாதா, இவ்வழகானமான் என்மனத்தைக் கவருகின்றது. தாங்கள் இதை எனக்குப் பிடித்துத்தரவேண்டும். நமது விளையாட்டுக்கு இது உபயோகப்படும். இங்கு நமது ஆச்சிரமத்துக்குச்சமீபத்தில்,கவரிமான், சிருமரம், புள்ளிமான், கரடி, குரங்கு, கின்னரம் முதலிய வெகு அழகான பலமிருகங்கள் கூட்டங்கூட்டமாகத் திரிகின்றன. அவைகள்பார்ப்பதற்கு வெகு அழகும் மனோகரமுமானவைகளே ஆயினும், இந்தமானுக்குச்சரியான அழகுள்ள மானை இதுவரையில் நான் கண்டதேயில்லை. இது சாயலாலும், ஒளியாலும் அழகாலும் ஒப்பற்றது. இரத்தினம் போன்ற பல நிறமான புள்ளிகளையுடைய இவ்வழகான மான் சந்திரன்போலத் தனதுகாந்தியால் இக்காடெங்கும் ஒளிரச்செய்கிறது. என்ன ஆச்சரியம்! என்ன அழகு! என்ன காந்தி! என்னமதுரமான குரல்! விசித்திரமான் தேகத்தையுடைய இம்மான் என் மனத்தை முழுதும் கொள்ளை கொண்டது. உயிருடனே இம்மானைத் தாங்கள் பிடிக்கக் கூடுமானல் மிக ஆச்சரியமாக இருக்கும். எல்லாரும் இதைக் கண்டு வியப்படைவார்கள். வனவாசம் முடிந்து நாம் நமது இராச்சியத்தை அடைந்தபோது, இம்மான் நமது அந்தப்புரத்திற்கு ஒரு அலங்காரமாக இருக்கும். இதைக்கண்டு நாம் களிப்பதுபோலப் பரதரும், எனது மாமிமார்களும் களிப்பார்களென்பதில் சந்தேகமேயில்லை. இம்மானை உயிரு

சீதை மானைப் பிடித்துத் தரும்படி இராமரை வேண்டல்.

டன் பிடிக்க முடியாதாயின் இதனுடைய தோல்கூட அழகாகவிருக்கும். கொல்லப்பட்ட இதனுடைய தங்கநிறமான தோலைத் தருப்பாசனத்தின்மேல் பரப்பி அதன்மேல் தங்களுடன் உட்கார நான் இச்சிக்கிறேன். தங்கள் தலைவர்களை இவ்வாறு ஒன்று செய்யவேண்டுமென்று ஏவுவது ஸ்திரீகளுக்குத் தகாது; மரியாதையுமன்று. ஆயினும் நான் இந்தமானின் தேககாந்தியைக் கண்டு மயங்கி இருக்கிறேன்" என்று வேண்டினள்.

இராமர் பொன்போன்றமயிரும், இரத்தினங்களால் செய்யப்பட்டாற்போன்ற கொம்புகளும், இளஞ்சூரியன் போன்ற நிறமும், நக்ஷத்திரங்களுக்கொப்பான புள்ளிகளுமுடைய அம்மானைக்கண்டு மிகவும் வியப்புற்றார். அவ்வழகான மானைக்கண்டு மயங்கிச் சீதையின் வேண்டுகோளால் தூண்டப்பட்ட இராமர், வெகு சந்தோஷத்துடன் தமது தம்பியைப்பார்த்து "லக்ஷ்மணா, சீதை இம்மானிடத்தில் மிக ஆசைப்பட்டிருக்கின்றாள். இவ்வளவு அழகானமான் நமது வனவாசகாலத்தில் நேர்ந்தது துர்லபந்தான். இதற்குச் சமானமான மான் தேவேந்திரன், குபேரன், முதலியவர்களுடைய நந்தனவனங்களிலேகூட இல்லை. அப்படியாயின் இவ்வுலகத்தில் இதற்கொப்பான மான் இருக்கப் போகிறதா? குறுக்கும் நெடுக்குமாக இதன் உடன்மேலுள்ள உரோமமும் அதன்மேலுள்ள பொற்புள்ளிகளும் வெகுநேர்த்தியாக விளங்குகின்றன! அது வாய் திறக்கும் பொழுதெல்லாம் வாயிலிருந்து வெளிப்படும் அக்கினிச்சுவாலைக்கொப்பான அதன் நாக்கு மேகத்தில் தோன்றும் மின்னல்போன்றிருக்கிறது. அதன்முகம் இந்திரநீலக்கல்லால்செய்யப்பட்ட பாத்திரம்போல் தோன்றுகிறது. வயிறு சங்குபோலவும் நன் முத்துப்போலவும் விளங்குகிறது. இதனுடைய ஒப்பற்ற அழகு யாருடைய உள்ளத்தைத்தான் கவராமலிருக்கும்? தங்கநிறமானதும்

இராமர் மாய மானை வியத்தல்.

அநேகவித இரத்தினங்களின் வண்ணத்தை உடையதுமான இதன்ரூபத்தைக் கண்டு யார்தான் ஆச்சரியமடையார்? காட்டில் விற்பிடித்து வேட்டையாடும் மன்னவர்கள், மாமிசத்தின்பொருட்டும் வேடிக்கைக்காகவும் மான்களைக் கொல்லுகிறார்கள். லக்ஷ்மணா, அன்றியும், அவர்கள் வேட்டையாடுகையில் சிலவேளையில் காட்டில் அநேகவித இரத்தினங்களையும் பொருள்களையும் தேடிக் குவிக்கிறார்கள். அவ்வாறு காட்டில் சேர்க்கப்படும் பொருள்கள் சிறந்தவைகளன்றோ? *சுக்கிராசாரியர் மனத்தால் நினைக்க ஒரு பொருள் நூறாக விருத்தியாகிறது. பொருளைவிரும்புகிறவன் அதனை அடைவதற்கு இன்னமுயற்சி செய்யவேண்டுமென்ற விசாரமின்றி நேர்ந்தவழியில் தேடிச் சம்பாதிப்பதுதான் பொருள் என்று நீதிசாஸ்திரமறிந்தவர்கள் சொல்லியிருக்கிறார்கள். சீதை இந்த இரத்தினம்போன்ற மானின் தங்கத்தோலின்மேல் என்னோடுகூட உட்கார விரும்புகிறாள். புள்ளிமான்தோல், கவரிமான்தோல், ஆட்டுத்தோல், மற்ற மிருகத்தின் தோல் முதலியவைகளில் ஏதாவதொன்று இந்த மானின் தோலுக்குச் சமானமாக இருக்கும் என்று நான் எண்ணவில்லை. உலகத்தில் இரண்டு மான்கள்தான் சிறந்தவைகள். பூமியில் சஞ்சரிக்கும் இது ஒன்று. ஆகாயத்தில் சஞ்சரிக்கும் மிருகசீர்ஷம் மற்றொன்று.

லக்ஷ்மணா, நீ சொல்லுகிறபடி இது அரக்கன் மாயையாகவிருந்தாலும் நான் அவசியம் இதை வதைசெய்யவேண்டியவன். மாரீசன் என்ற அக்கொடிய பாவி இக்காட்டில் அநேக முனிவர்களை வதைசெய்திருக்கிறான். அல்லாமல் வேட்டையாட வந்த வில்லாளிகளான அநேக வேந்தர்களையும் கொன்றிருக்கிறான். அதற்காக நான் இம்மானைக் கொல்லவேண்டும். முன்னொருகாலத்தில் இக்காட்

* இதனைப் பாரதத்தில் உத்தியோக பருவத்தில் காண்க.

வாதாபியின் சரிதம்.

டில் வாதாபி என்பவன் தபசிகள் வயிற்றில் புகுந்து அவர்கள் வயிற்றைக் கிறிக்கொண்டு வெளிப்பட்டு, * கோவேறு கழுதையின் கருப்பம் அதைக்கொல்லுவதுபோல, அவர்களைக் கொன்றான். இப்படி வெகுகாலமாகச் செய்துகொண்டிருக்கும்பொழுது ஒருநாள் அவன் மகா தபசியாகிய அகஸ்தியமாமுநிவருக்கு உணவாயினான். பின்பு, அவன் அவர் வயிற்றைப் பிளந்துகொண்டு வெளிப்பட முயற்சி செய்ததை அம்முநிவர் கண்டு புன்னகை செய்து வாதாபியை நோக்கி "அடே வாதாபி, நீ உன்பலத்தின் செருக்கால் உத்தமர்களான அநேக அந்தணர்களை இவ்வுலகத்தில் வதைசெய்தாய்; அக்காரணத்தால் நானிப்பொழுது உன்னை எனது வயிற்றில் செரிப்பிக்கின்றேன்" என்றார். ஆகையால், லக்ஷ்மணா, எப்பொழுதும் தருமத்தை இடைவிடாது நடத்திக்கொண்டு ஐம்புலங்களையும் அடக்கியாளும் என்னைப்போல்பவரை இம்சிக்கவருவானால் இவ்வரக்கன் வாதாபியைப்போல் நாசமடைவான்.

இராமர் லக்ஷ்மணரைச் சீதையைக் காக்கக் கட்டளையிடல்.

நீ ஆயுதபாணியாகச் சீதையைச் சாக்கிரதையாய் இவ்விடத்தில் பாதுகாத்துக் கொண்டிரு. இவளை ரக்ஷிக்கவேண்டியது நமது கடமை. நானிந்தமானைப் பிடித்தாவது கொன்றாவது கொண்டுவருகிறேன். லக்ஷ்மணா, இம்மானுடைய தோலின்மேல் சீதை அதிக ஆசைவைத்திருக்கிறாள். ஆதலால் நான் இதைப்பிடிக்கப் போகிறேன். இதன்தோல் மிகவும் அழகானது. அதன் நிமித்தம் இந்த மான் இன்று நாசமடையப் போகிறது. நான் ஒரே பாணத்தால் இம்மானைக் கொன்று திரும்பி வரும்வரையில் நீ இந்த ஆச்சிரமத்தில் சீதையை வெகு சாவதானமாகக் காப்பாற்றவேண்டும். நான் இதைக்

* அச்வத்திரி என்பதற்கு நேள்என்றும் சிலர் அர்த்தம் சொல்லுகிறார்கள்.

கொன்று இதன் தோலுடன் சீக்கிரம் திரும்புவேன். அதிக சமர்த்தனும், வெகு பலசாலியும், புத்திசாலியுமாகிய ஜடாயுவுடன், லக்ஷ்மணா, நீ சீதையை வெகு சாக்கிரதையாக எந்தச்சமயத்தில் என்ன ஆபத்து நேரிடுமோ என்று கருதிப் பாதுகாத்துவருவாய்" என்று கூறினர்.

## நாற்பத்துநான்காஞ் சருக்கம்.

*மாரீசன் வதை.*

இவ்வாறு தன் தம்பிக்குக் கட்டளையிட்டுவிட்டு வெகு பராக்கிரமத்தையுடைய இராமர் பொற்பிடியுள்ள தமது வாளை இடையில் கட்டினர். பின்பு இரண்டு அம்பறாத்தூணிகளை முதுகில் வீக்கி, தமக்கு ஓராபரணம்போல விளங்குவதான மூவிடங்களில் வளைந்துள்ள தமது வில்லைக் கையில் எடுத்துக்கொண்டு ஒப்பற்றசூரரான இராமர் புறப்பட்டார். அவ்வாறு புறப்பட்டு வந்த அம்மன்னர்மன்னனைக் கண்டு மாரீசனாகிய மான் நடுநடுங்கி ஓடியொளித்தது; மறுபடி அவர் கண்ணிற்குப் புலனாயிற்று. மானைக்கண்டவுடன் இராமர் அரையிற் கட்டிய கத்தியுடனும் கையிற்பிடித்த வில்லுடனும் அதைத் துரத்திக்கொண்டோடினர். அப்போது அந்த மான் அவரைப் பார்த்து வெருண்டு தனது உருவத்தால் அக்காடு முழுதையும் பிரகாசிக்கச் செய்துகொண்டு ஓடினது. அம்மான் ஒருகால் பாணம் பாயும் தூரத்துக்கப்பால் ஓடிச்செல்லும்; ஒருகால் கிட்டி வந்து ஆசைகாட்டும்; ஒருகால் தன் உயிருக்கு அபாயம் வந்ததாகப் பயந்து வெகுகலக்கமெய்தி ஆகாயத்தில் எழும்பிக் குதித்தோடும்; ஒருகால் காட்டில் வந்து கண்ணுக்குப் புலனாகும்; ஒருகால் புலனாகாது மறைந்துவி

இராமர் மானைப் பிடிக்கப் புறப்படல்.

மானினுடைய ஓட்டம்.

டும். அது கண்டங் கண்டமான மேகக்குழுவில் மறைகின்ற சரத்கால சந்திரன்போல் தோன்றி மறையும்; உடனே தூரத்தில்போய்க் காணப்படும். இவ்வாறு மானுருவங்கொண்ட மாரீசன் இராமர் கண்களுக்கு எதிர்ப்பட்டும் எதிர்ப்படாது ஓடிமறைந்தும் அவரை ஆச்சிரமத்திலிருந்து வெகுதூரம் கொண்டுசென்றான். இராமர் தம்மை அவ்வளவு தூரம் அம்மான் இழுத்துவந்ததற்காக வெகுகோபங்கொண்டு சிறிதுகலங்கிப் பசும்புற்றரையில் ஒருநிழலின்கீழ் நின்றார். அப்பொழுது மாரீசனாகிய அம்மான் மற்றைமான்கள் சூழச் சமீபத்தில் வந்து அவர் கண்களுக்குப் புலப்பட்டது. அப்போது இராமர் அதைப்பிடிக்க விரைந்து ஓடினார். உடனே அம்மான் பயத்தால் ஒரு நொடிப்பொழுதில் ஓடி மறைந்தது; மறுபடி கொஞ்சத்தூரத்தில் ஒரு மரத்தின் அருகில் காணப்பட்டது. சத்துருக்களை வதைக்கும் வல்லமையுள்ளவரும் பலசாலியுமான இராமர் அதைக் கண்டு வெகு கோபங்கொண்டு, அதனைக் கொல்ல உறுதிசெய்து, சூரியனுடைய கிரணங்களுக் கொப்பாக ஜ்வலிக்கும் ஒரு பாணத்தை எடுத்துத் தமது பலமான வில்லில் பூட்டினார். அவர் வில்லை நன்றாக வளைத்துப் பெருமூச்செறியும் சர்ப்பம்போன்றதும் பிரமதேவரால் செய்யப்பட்டதுமான நெருப்புப் போன்ற அப்பாணத்தை அம்மானைக்குறிப்பிட்டு எய்தார். இடிக்கொப்பான அந்த உத்தம பாணம் மானுருவங்கொண்ட மாரீசன் தேகத்தைக் கிழித்து அவனுடைய இருதயத்தையும் பிளந்தது. ஆயுள் முடிந்த அவ்வரக்கன் ஒருபனையுயரம் ஆகாயத்தில்எழும்பி வெகு பயங்கரமாகக் கதறிக்கொண்டு பூமியில் விழுந்தான். பிராணன்போகும் சமயத்தில் அவன் "எவ்வித உபாயஞ்செய்தால் சீதை லக்ஷ்மணனை ஆச்சிரமத்தை விட்டு அனுப்புவாள்; அவள் தனித்திருக்கையில் இராவ

இராமர் மானைக் கொல்ல நிச்சயித்தது.

மானுருவங்கொண்ட மாரீசன் மாண்டது.

ணன் அவளை எடுத்துச்செல்லுவான்" என்று யோசித்தான். இராமருடைய ஒப்பற்ற பாணத்தால் பிளக்கப்பட்ட மாரீசன் மானுருவத்தைவிட்டு, உண்மையான தனது ராக்ஷச உருவத்தைக் கொண்டு, பெரிய சரீரத்தை அடைந்து பிராணனை விடுபவன் இராமருடைய குரலால் "ஓ சீதா! ஓ லக்ஷ்மணா!" என்று பெருஞ்சத்தமாய்க் கதறினன். அப்பொழுது அவன் அழகான கேயூரங்களும் பொன்மணி மாலைகளும் விளங்க, கோரப்பற்கள்தோன்ற, அரக்கர்களுக்குரிய பயங்கரமான உருவத்தை அடைந்து, மாண்டு பூமியில் விழுந்து, தேகமெல்லாம் இரத்தமொழுக வெறுந்தரையில் புரண்டுகொண் டிருந்ததை இராமர் கண்டு, லக்ஷ்மணன் சொன்னது நிச்சயமாய்விட்டதென்று தெரிந்து, மனத்தில் சீதையைக்குறித்து நினைத்தார்.

இராமர் விசாரம்.

"இது மாரீசனுடைய மாயை. லக்ஷ்மணன் இதை முன்னரே அறிந்து சொன்னன். அவன் சொன்னபடி இப்பொழுது நான் கொன்றது மாரீசன். ஐயோ இவன் 'ஓ சீதா, ஓ லக்ஷ்மணா' என்று பெருஞ்சத்தமாய்க் கூச்சலிட்டு மாண்டான்! இதைக்கேட்டுச் சீதை என்ன செய்வாளோ தெரியவில்லை! வெகு பராக்கிரமசாலியாகிய லக்ஷ்மணன் யாது செய்வான்?" என்று சிந்தித்துக்கொண்டிருக்கையில் தர்மாத்துமாவான இராமருக்குத் தேகம் மயிர்க்கூச்செறிந்தது. மானுருவங்கொண்ட மாரீசனைக் கொன்று, அவன் கூவின பெருஞ்சத்தத்தைக் கேட்கவே, இராமருக்குக் கடுந்துயர் தோன்றிப் பெரும்பய முண்டாயிற்று. அவர் உடனே அவ்விடம்விட்டு நீங்கி, வழியில் மற்றொரு மானைக் கொன்று, அதன் மாமிசத்தைக் கையிலெடுத்துக்கொண்டு, ஆச்சிரமத்தை நோக்கி வெகு வேகமாகச் சென்றார்.

---

## நாற்பத்தைந்தாஞ்சருக்கம்.

சீதை இராமரைத் தேட லக்ஷ்மணரை அனுப்புதல்.

தனது நாயகனுடைய குரல்போன்ற அந்தப் பரிதாபமான கூச்சலைக்கேட்டுச் சீதை லக்ஷ்மணரைப் பார்த்து "இராகவருக்கு என்ன நேர்ந்தது என்று போய்ப்பாரும். அவர் கதறினதைக் கேட்டு எனது இருதயமும் உயிரும் தம்முடைய நிலையில் நிற்கவில்லை. காட்டில் கதறும் உமது தமையனாரைக் காப்பாற்றுவது உமது கடமை. உமது உதவியை வேண்டி நிற்கும் உம்முடைய தமையனாரைத்தேடி உடனே செல்லும். இடபம்சிங்கத்தினிடத்தில் சிக்கிக்கொண்டதுபோல் அவர் அரக்கர்கள் வசம் அகப்பட்டுக்கொண்டார்" என்றாள். அவள் அவ்வாறு சொன்னபோதிலும், தமது தமையன் கட்டளையை நினைத்து லக்ஷ்மணர் புறப்பட்டுப் போகவில்லை. அதைக்கண்டு சீதை வெகு கோபங்கொண்டு "சுமித்திரைபுத்திர, இந்த ஸ்திதியிலிருக்கும் உமதுதமையனாரைத்தேடி நீர்போகாமையால் நீர் அவருக்குச் சகோதர உருவமாகிய சத்துருப் போலும். என் நிமித்தம் நீர் இராகவர் காட்டில் மாண்டுபோகட்டும் என்றிருக்கிறீரோ? என்மேல் வைத்த ஆசையால்தான் நீர் இராகவரைத்தேடிச்செல்லவில்லை. இதனால் இராகவரிடம் உமக்கன்பில்லை என்றும், அவருடைய அழிவை நீர் விரும்புகிறீர் என்றும் தெரியவருகிறது. ஆனபடியால்தான் நீர் விரைந்துசென்று மகாகாந்திபொருந்திய இராகவரைப் பாராமல் இங்கு நிற்கிறீர். யாவரொருவரைத் தொடர்ந்து நீர் இக்காட்டிற்கு வந்தீரோ அவர் நாசமடைந்தபின்பு நான் உயிரோடிருந்து என்ன பிரயோசனம்" என்று இவ்வாறு துயரப்பட்டுக் கண்ணுங் சண்ணீருமாக அழுதுகொண்டு பெண்மான்போல் நடுங்கி நின்

சீதை இராமரைத் தேட லக்ஷ்மணரை ஏவல்.

சீதை கவற்சி.

றுள். அவளைப்பார்த்து லக்ஷ்மணர் "வைதேகி, பன்னகர், அசுரர், கந்தருவர், தேவர், மானிடர், ராக்ஷசர் ஆகிய இவர்கள் ஒருவராலும் உம்முடைய கணவரை வெல்ல முடியாது. இந்திரனுக் கொப்பான இராமர் முன் நின்று போர்புரிய வல்லவர்கள் ராக்ஷசர்கள், பிசாசர்கள், கின்னரர்கள், மிருகங்கள், பயங்கரமான தானவர்கள் முதலியவர்களுள் ஒருவருமில்லை. அம்மா, இராமரைப் போரில் கொல்ல வல்லவர்கள் ஒருவருமிலர். ஆகையால் நீர் இவ்வாறு சொல்லத்தகாது. அன்றியும், இராகவர் இல்லாதபோது நான் உம்மை இக்காட்டில் தனியாய்விட்டுப் போவது சரியன்று. அநேக வீரர்கள் ஒன்றாகக் கூடி வந்தபோதிலும், இம்மூவுலகங்களிலுமுள்ளவர்களோடும் தேவர்களோடும் சேர்ந்து இந்திரனே சண்டையிட வந்தபோதிலும் இராமருடைய பலத்தை அடக்க முடியாது. ஆகையால், உமது உள்ளத்தில் துயரம் வேண்டாம்; இவ்விதமான தாபமும் வேண்டாம். அந்தப் பொன் மானைக் கொன்றுவிட்டு உமது கணவர் விரைவில் திரும்பிவருவார். அக்கூச்சல் அவர் குரலன்று; வேறு யாரோ மாயையால் இட்ட சத்தம். அது அவ்வரக்கனுடைய பெருமாயை. கந்தருவநகரத்தைப் போல் வீண்பிரமம். மகாத்துமாவாகிய இராமர் தாம்திரும்பிவருகிறவரையில் பாதுகாக்கும்படி உம்மை என்னிடம் ஒப்பித்தார். ஆகையால், வைதேகி, நான் உம்மைவிட்டுச்செல்ல மாட்டேன். அன்றியும், நாங்கள் கரனையும் இந்த ஜன்ஸ்தானத்திலிருந்த மற்ற இராக்கதர்களையும் கொன்றதனால் அரக்கர்களைப் பகை செய்துகொண்டோம். துன்பம் செய்வதையே விளையாட்டாக உடைய அரக்கர்கள் இப்பெருங் காட்டில் அநேகவிதமாகக் கூவுகிறார்கள். ஆகையால் இதைப்பற்றி நீர் கவலைப்படவேண்டாம்" என்றார். இவ்

லக்ஷ்மணர் இராமரை வெல்வார் இல்லை எனல்.

கூக்குரலிட்டது இராமர் அல்ல வெனல்.

விதமாக லக்ஷ்மணர் உண்மையை எடுத்துச்சொல்லச் சீதை வெகு கோபங்கொண்டு கண்கள் சிவந்து அவரைப் பார்த்துக் கடுஞ்சொல்லால் "கெட்டவரே! கருணையற்றவரே! கொடியவரே! குடிகேடரே! இராமருக்கு இப்போது நேரிட்ட பெருந்தீங்கு உமக்குச் சம்மதம் போலும். ஆகையாற்றான், அவருக்குத் தீங்கு வந்துவிட்டதென்பதைத் தெரிந்தும் நீர் இவ்வாறு பேசுகிறீர். குரூரமனமும் கெட்ட எண்ணமுமுடைய சத்துருவாகிய உம்மிடத்தில் இவ்விதமான கொடிய செய்கை காணப்படுவது ஆச்சரியமன்று. நீர் தனியே இராமருக்குத் துணையாக வருவதுபோல் எனக்காகவே காட்டுக்கு வந்திருக்கிறீர். அல்லது இவ்வாறு செய்ய இரகசியமாகப் பரதர் உம்மை ஏவியிருக்கலாம். ஆனால், அவ்வாறு நீராவது பரதராவது கொண்டகருத்து நிறைவேறப்போகிறதில்லை. குவளைநிறமும் தாமரை இதழ்போன்ற கண்களுமுடைய இராகவரைக் கணவராகப் பெற்ற நான் மற்றொரு புருஷனைக் கருதுவேனோ! லக்ஷ்மணரே, உமது கண்கள் முன்பாக நான் பிராணனை விட்டுவிடுகிறேன். இதில் ஐயமில்லை. நான் இராகவரையின்றி ஒருநிமிஷமாவது இவ்வுலகத்தில் உயிரை வைத்திருக்கமாட்டேன்" என்றாள்.

சீதை லக்ஷ்மணரைப் பழி கூறல்.

இவ்வண்ணம் மயிர்சிலிர்க்கும்படியான கொடிய வசனங்களைச் சீதைசொல்ல, ஐம்புலன்களையும் அடக்கின லக்ஷ்மணர் கைகுவித்து அவளைப்பார்த்து "அம்மா, நீர்எனக்கு ஒரு தெய்வமாகையால், நான் உமக்கு ஒரு மறுமொழியும் சொல்லக் கூடாதவனாக இருக்கின்றேன். ஓ மைதிலி, நீர் இவ்வாறு அநுசிதமாகப் பேசினது ஆச்சரியமன்று. இது இவ்வுலகத்திலுள்ள மாதர்கள் இயல்பு. அவர்கள் பெரும்பாலும் தருமத்தை அறியாதவர்களும், சபலம் உள்ளவர்களும், கொடியவர்களும், சிநேகித்த

லக்ஷ்மணர் நீர் என்னைச் சந்தேகித்தல் தகாதெனல்.

தைக் கெடுப்பவர்களுமாக இருக்கிறார்கள். வைதேகி, ஜனக மகாராஜாவின் குமாரியாகிய நீர் சொன்ன இச்சொல்லை நான் பொறுக்கமாட்டேன். அவைகள் என் காதுகளில் காய்ச்சின நாராசங்கள்போல் ஏறின. இக்காட்டில் உள்ள தெய்வங்கள் சாக்ஷி. அவர்கள் நீர் சொன்னதைக் கேட்கட்டும். நான் நியாயத்தைச் சொல்ல நீர் அநியாயமாக என்னை இக்கொடிய வார்த்தைகளைப் பேசினீர். என்னுடைய தமையன் வார்த்தையை மீறி நடவாத என்னை நீர் இப்படிச் சந்தேகித்தீர்! ஆனமையால் நீர் வருத்தத்தை அடையப்போகிறீர். இயற்கையாகவே பெண்களின் தன்மை கெட்டது. சீ! நீர் கெட்டீர். இனி நான் இராகவர் இருக்கிற இடம் போகிறேன். நீர் க்ஷேமமாக இரும். விசாலமான கண்ணையுடையாரே, உம்மை இவ்வனதேவதைகள் பாதுகாக்கட்டும். பல அபசகுனங்கள் தோன்றுகின்றன! மறுபடி நான் இராமரோடு திரும்பி வரும்பொழுது உம்மைப் பார்ப்பேனாக" என்றார். இவ்வாறு லக்ஷ்மணர் சொல்லச் சானகி அழுது கண்ணீர் விட்டு அவரைப்பார்த்து "லக்ஷ்மணரே, இராமர் இல்லையாயின் நான் கோதாவரியில் விழுவேன்; அல்லது கழுத்தில் சுருக்கிட்டுக்கொள்ளுவேன்; அல்லது மலையின் உச்சியிலேறிக் குதித்துப் பிராணனை விடுவேன்; அல்லது கொடிய விஷத்தைக் குடிப்பேன்; அல்லது தீயில் விழுவேன். இராகவரையன்றி மற்றொருபுருஷனை நான் தொடமாட்டேன்" என்றாள். இவ்வாறு லக்ஷ்மணருக்குச் சொல்லிச் சீதை துயரத்தில்மூழ்கி, அழுது, கைகளால் தனது வயிற்றில் அடித்துக்கொண்டாள். விசாலமான கண்களையுடைய ஜானகி இவ்வாறு துயருறுவதை லக்ஷ்மணர் கண்டு, செயலற்று, அவளை வெகுவிதமாகச் சாந்தம் பண்ணலானார். ஆனால், அவள் தனது பர்த்தாவின் தம்பியான அவரைப்பார்த்து ஒன்றும் பேசவேயில்லை.

சீதை உயிர் மாய்ப்பேன் எனல்.

பின்பு லக்ஷ்மணர் கைகூப்பிச் சீதைக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டுப் புறப்பட்டு, அவளைத் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டே தன்னைத் தைரியப்படுத்திக் கொண்டு, இராமர் போயிருக்கும் இடத்தை நோக்கிச் சென்றார்.

---

## நாற்பத்தாறுஞ்சருக்கம்.

இராவணன் சந்நியாசிவேஷம்பூண்டு சீதையிடம் சென்றது.

---

இவ்விதமாகக் கடுஞ் சொல் கூறப்பெற்ற லக்ஷ்மணர் கோபங்கொண்டு இராமரைத் தேடிப் புறப்பட்டுச் சென்றார். சமயம்பார்த்து ஒளித்திருந்த தசக்கிரீவன் உடனே சந்நியாசி வேஷம்கொண்டு சீதைமுன் வந்தான். அழகான காவித்துணி உடுத்து, தலையிலொரு சிறு குடுமி வைத்து, கையிற் குடைபிடித்து, பாதங்களில் செருப்பணிந்து, இடத்தோளில் தண்டமும் கமண்டலுவுந் தாங்கிச் சந்நியாசி உருவம் பூண்டு, சீதையிருந்த இடத்துக்கு இராவணன் வந்துசேர்ந்தான். சகோதரர்களாகிய இராமலக்ஷ்மணர்கள் இருவருமின்றித் தனியேயிருந்த சீதையை இராவணன் கிட்டினது சந்திர சூரியர்கள் இருவரும் இல்லாமலிருக்கும் சந்தியாகாலத்தை நள்ளிருள் நணுகினதுபோலத் தோன்றிற்று. புகழ்பெற்றவளும் இளம்பருவ முடையவளுமாகிய சீதையை அக்கொடியவன் சந்திரனைவிட்டுப் பிரிந்த உரோகிணி நக்ஷத்திரத்தை அங்காரகன் பார்த்ததுபோலப் பார்த்தான். கொடிய செயல்களைச் செய்யும் அப்பாவியைக் கண்டு ஜனஸ்தானத்திலிருந்த மரங்கள் அசையவில்லை; காற்றும் அடிக்கவில்லை. அவன் தனது சிவந்த கண்களால் சீதையைப் பார்த்த பார்வையைக் கண்டு பயந்து வெகு வேகமாக ஓடும் கோதாவரி நதியும் தனது வேகம் அடங்கிற்று. இரா

இராவண சந்நியாசி சீதை முன் சென்றது.

மர் இல்லாத சமயம்பார்த்துத் தசக்கிரீவன் சந்நியாசி வேஷம் பூண்டு சீதைமுன் சென்றான். சித்திரா நக்ஷத்திரத்தைச் சனி சென்று சேர்வதுபோல் கணவனைக் காணாமல் பரிதபிக்கும் சீதைமுன் புல்லால் மூடப்பட்ட கிணறு போலக் கொடியவனாகிய இராவணன் நல்ல தவத்தினன் வடிவங்கொண்டு சென்றான். கொடிய கருத்துள்ள அவ்வரக்கன், அழகிய வெள்ளிய பற்களையும், இதழையும், பூரணசந்திரன் போன்ற முகத்தையும், தாமரை யிதழ் போன்ற கண்களையும் உடையவளாய், மஞ்சள் பட்டுடுத்துத் துக்கத்தால் கண்ணீர் பெருக்கிப் பர்ணசாலையில் உட்கார்ந்திருக்கும் அழகான சீதையை அணுகினான். அவளைக் கண்டவுடன் ராக்ஷசேந்திரன் மன்மத பாணத்தால் மொத்துண்டான். வேதமோதிக்கொண்டு அவ்வரக்கர் மன்னவன் தன்னழகினால் மூவுலகத்தையும் வென்று லக்ஷ்மிபோல விளங்கும் சீதையைப்பார்த்துப் புகழத் தொடங்கினான். "பொன்போன்ற மேனியை உடையராகி மஞ்சள்பட்டுடுத்து தாமரை ஓடைபோல அழகான தாமரை மலர்மாலையை அணிந்திருக்கும் நீங்கள் யாரம்மா? அழகான முகம் படைத்த மாதே, நீங்கள் யார்? கீர்த்தியோ? அழகோ? லக்ஷ்மியோ? அப்சரசோ? ஐசுவரியத்தின் உருவமோ? அல்லது தனது இஷ்டப்படி சஞ்சரிக்கும் ரதிதேவியோ? உங்களுடைய பற்கள் ஒன்று போல் எல்லாம் அழகாகவும், கூரிய முனைகளையுடையனவாகவும், வெண்மையாகவும் இருக்கின்றன. உங்கள் கண்கள் விசாலமாகவும் நிஷ்களங்கமாகவும் செவ்வரிபடர்ந்தனவாகவும் கருவிழிகளுடையனவாகவும் விளங்குகின்றன. கடிபாகம் விசாலமும் பெருமனுமா யிருக்கின்றது; துடைகள் யானைத் துதிக்கைபோலத் திரண்டு பருத்திருக்கின்றன. தனங்கள் விம்மிப் புடைத்து இறுமாந்து மணிவடங்களணிந்து பனம்பழத்துக் கொப்பாக விளங்கு

இராவணன் சீதையை யார் என வினவியது.

இராவணன் சீதையைப் புகழல்.

இன்றன. அம்மணி, உங்கள் புன்னகையும், பற்களின் அழகும், கண்களின் ஒளியும், உங்கள் மேனியும் ஆற்று நீர் கரையைக் கரைத்துக்கொண் டோடுவதுபோல என் உள்ளத்தை முழுதும் கவர்ந்துவிட்டன. பிடிக்கடங்கின இடையையும் அழகிய கூந்தலேயும் உடையவரே, உம்மைப் போல் இவ்வளவு அழகான பெண்ணைத் தேவப்பெண் களுள்ளும், கந்தர்வ யக்ஷ கின்னரப் பெண்களுள்ளும் நான் பார்த்ததில்லே. இவ்வுலகத்தில் மிக உத்தமமான உங்கள் அழகும், இளமையும், சாயலும், நீங்கள் காட்டில் வசிப்பதும் எல்லாம் என் மனத்தை மயக்குகின்றன. தங் களிஷ்டப்படி உருவம் மாறும் கொடிய அரக்கர்கள் வசிக் கும் காடு இது. ஆகையால், நீங்கள் நாட்டுக்குத் திரும் பிப்போகவேண்டும். நகரத்திலும் பட்டணத்திலும் அழ கான மாளிகையின்கண்ணும் நல்ல வாசனைகள் நிரம்பிய பூஞ்சோலேகளிலும் நீங்கள் வசிக்கவேண்டும். உயர்ந்த மாலேகள், உயர்ந்த உணவு, உயர்ந்த புடைவை, உயர்ந்த புருஷன் இவைகள் எப்பொழுதும் உங்களுக்கிருக்கவேண் டுமென்று நான் எண்ணுகிறேன். மாதே, நீர் யார்? ருத் திரர்கள், வசுக்கள், தேவர்கள் இவர்களுள் யாரைச்சேர்ந் தவர்? நீர் தேவகன்னிகை என்றே நான் எண்ணுகின்றேன்.

நீர் ஏன் இக்காட்டிற்கு வந்தீர் எனல்.

இக்காட்டிற்குக் கந் தர்வர்கள், தேவர்கள், கின்னரர்கள் ஒரு வரும் வரமாட்டார்கள். இது அரக்கர்கள் வாழும் இடம். நீர் எவ்வாறு இங்கு வந்தீர்? இவ்விடத் தில் சஞ்சரிக்கும் குரங்கு, சிங்கம், புலி, யானே, கரடி, செந் நாய், கழுதைப்புலி முதலிய விலங்குகளேக் கண்டு நீர் எவ்வாறு பயப்படாமலிருக்கிறீர்? இந்தக் காட்டில் தனி யே இருந்துகொண்டு இவ்விடத்தில் சஞ்சரிக்கும் வெகு பலம்பொருந்திய பயங்கரமான மதயானேக் கூட்டங்க ளேக் கண்டு எப்படி நீர் பயப்படாமலிருக்கிறீர்? நீர் யார்?

யாரைச் சேர்ந்தவர்? எங்கிருந்து வந்திருக்கிறீர்? என்னத்திற்காகக் கொடிய அரக்கர்கள் சஞ்சரிக்கும் இத்தண்டக வனத்தில் தனிமையாக வசித்துக்கொண்டிருக்கிறீர்?" என்றான். துஷ்டனாகிய இராவணனால் இவ்வாறு வினவப்பட்ட சீதை அவனுடைய அந்தண வேஷத்தைக் கண்டு அவனுக்கு அதிதிகளுக்குச் செய்யவேண்டிய மரியாதைகளில் ஒன்றுங் குறையாமல் செய்தாள். முதலில் ஆசனம் கொடுத்து, அதன்பின் காலலம்ப ஜலம் வார்த்து, பிறகு வெகு யோக்கியன்போலக் காணும் அவனைப் பார்த்து "அன்னம் சித்தமாகவிருக்கிறது" என்றாள். காவித் துணியுடுத்துக் கையில் கமண்டலம் தரித்துப் பிராமண வேஷம்பூண்டு வந்த இராவணனை அவன் கெட்ட எண்ணமுள்ளவனாயும் பூஜிப்பதற்கு அயோக்கியனாயு மிருந்தபோதிலும் "இந்த ஆசனத்தின்மேல் உட்காருங்கள். இதோ ஜலம் பெற்றுக்கொள்ளுங்கள். இக்காட்டில் கிடைக்கும் கிழங்குகளும் பழங்களும் தங்களுடைய புசிப்புக்கென்று இதோவைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை உங்களுக்கு வேண்டியமட்டும் புசியுங்கள்" என்றாள். இவ்வாறு மனிதர்களுக்குள் உத்தமரான இராமருடைய மனைவி இராவணனை வெகுமரியாதையாகப் போசனத்துக் கழைக்க, அவன் தனக்கு முடிவுகாலம் கிட்டிவிட்டபடியால் அவளை எப்படியாவது பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு போய்விடவேண்டுமென்று கருதினான். அப்பொழுது சீதை வேட்டைக்குப்போயிருந்த இராமர் லக்ஷ்மணருடன் திரும்பிவருவதை ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துத் தனது கண்களுக்கு எட்டியமட்டும் காட்டை நான்கு பக்கங்களிலும் நோக்கினாள். எவ்வாறாகச் சுற்றிப்பார்த்தபோதிலும் அக்காடெங்கும் பசுமையாக இருக்கக் கண்டாளே யன்றி இராமலக்ஷ்மணர்களை அவள் காணவில்லை.

சீதை ராவணனுக்கு அதிதிபூசை செய்தல்.

---

## நாற்பத்தேழாஞ் சருக்கம்.

இராவணன் கெட்ட எண்ணங்கொண்டதை சீதை

தெரிந்துகொண்டு நிந்தித்தல்.

---

சீதை, தன்னைக் கவர்வதற்காகச் சந்நியாசி வேஷம் பூண்டுவந்த இராவணன் இவ்வாறு கேட்க, தனக்குள்ளே "இவரோ நமது அதிதி. மேலும் பிராமணர். கேட்டதைச் சொல்லாவிடில் இவர் நம்மைச் சபிப்பார்" என்று கொஞ்சநேரம் யோசித்து அவனைப் பார்த்துச் சொல்லலுற்றாள்:— "உங்களுக்கு நன்மையுண்டாகுக. நான் மிதிலைக் கரசனான மகாத்துமாவாகிய ஜனகமகாராஜாவின் குமாரி; இராமருடைய அன்பான மனைவி. என்பெயர் சீதை. இக்ஷ்வாகு வம்சத்தரசர்கள்மாளிகையில் பன்னிரண்டு வருஷகாலம் வசித்துப் பலவிதபோகங்களையும் அனுபவித்து என்னுடைய இச்சைகள் எல்லாம் நிறைவேறப் பெற்றேன். பதின்மூன்றும் வருஷத்தில் தசரதமன்னர் தமது மந்திரிமார்களுடன் யோசித்து இராமருக்குப் பட்டாபிஷேகம் செய்துவைக்கத் தீர்மானித்தார். அவ்வாறு பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய சாமான்கள் எல்லாம் வந்து சித்தமாயிருக்கும்பொழுது எனது மாமிமார்களுள் ஒருத்தியாகிய கைகேயி தனது கணவனிடம் ஒரு வரம் கேட்டாள். அவள், சத்தியவந்தராகிய ராஜோத்தமருக்குத் தான்செய்த உபகாரத்தை நினைப்பூட்டி அவரைத் தன் வசப்படுத்திக்கொண்டு என்கணவனைக் காட்டுக்கு அனுப்பவேண்டும் என்றும், பரதனுக்குப் பட்டங்கட்ட வேண்டுமென்றும் இரண்டு வரங்களைக்கேட்டு "இராமன் பட்டத்துக்கு வருவதாக இருந்தால் நான் புசிக்கவும் மாட்

சீதை தன் வரலாறு கூறல்.

டேன், தீர்த்தபானம் செய்யவும் மாட்டேன், தூங்கவும் மாட்டேன், என்னுயிரைமாய்த்துக்கொள்வேன்" என்று சொன்னாள். இவ்வாறு கைகேயி சொல்ல மகிபதியாகிய என்மாமனார் அவளைப் பலவித செல்வங்களைப் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டினார். அவள் அதற்கு உடன்படவில்லை. அப்போது என் கணவனுக்கு வயது இருபத்தைந்து; எனக்கு வயது பதினெட்டு. என்கணவர் இராமர் என்னும் பெயரால் உலக மெங்கும் புகழ் பெற்றவர். அவர் சத்தியமும், நற்குணமும், நல்லொழுக்கமும் பரந்த விழியும் நீண்டகைகளும் உடையவர்; பிராணிகளுக்கெல்லாம் எப்பொழுதும் நன்மையேசெய்பவர். அப்படியிருந்தும் வெகு பராக்கிரமம் பொருந்திய என் மாமனாராகிய தசரதர் கைகேயியின் மனம் கோணாமலிருக்கவேண்டி இராமருக்குப் பட்டாபிஷேகம்பண்ணவில்லை. பட்டாபிஷேக நிமித்தமாகத் தந்தையிடம் சென்ற என் பர்த்தாவாகிய இராமரைப் பார்த்துக் கைகேயி "இராகவா, உனதுதந்தை என்னிடம் செய்திருக்கும் கட்டளையைக் கேள். ஒருவித இடைஞ்சலின்றி இந்த இராச்சியம் பரதனுக்காகவும் நீ ஏழிரண்டாண்டு காட்டிலுறையவும் வேண்டுமாம். ஆகையால் நீ அவ்வாறுசென்று உனது தந்தையினுடைய வார்த்தையைக் காப்பாற்றிவைப்பாயாக" என்று இக்கொடுஞ் சொற்களைச் சொன்னாள். என்கணவராகிய இராமர் அவ்வாறே ஆகுகவென்று அவளுடைய வார்த்தையை அங்கீகரித்து விரதம் பூண்டு இவ்விடம் வந்தார். அவர் எப்பொழுதும் வேண்டுபவர்களுக்கு அவர்கள் வேண்டும் பொருளைக் கொடுப்பவரேயன்றி ஒருவரிடமிருந்து தாம் ஒன்று வேண்டுபவரல்லர். அவர் எப்போதும் உண்மையையே பேசுபவர்; பொய்யுரைப்பவரல்லர். ஐயா அந்தணரே, இவைகளே இராமருடைய சிறந்த விரதங்கள். இராமருடைய இளைய

இராமருடைய குணச்சிறப்பு.

தாயார் வயிற்றிற்பிறந்த தம்பி லக்ஷ்மணர். அவர் இராமருக்கு உதவியாயுள்ளவர்; சத்துருக்களை வதைக்கும் வல்லமைபெற்றவர்; வெகு பராக்கிரமசாலி. அவ்வுத்தமர் மிக்க உறுதியும் சீலமும் உடையவர். அவர் கையில் வில்லேந்தி, என்னுடன் காட்டுக்குப் புறப்பட்ட தமது தமையனைத் தொடர்ந்துவந்தார். இவ்வாறு ஐம்புலன்களையும் அடக்கித் தருமத்தை இடைவிடாது நடத்தும் இராமர் சடைபுனைந்து தவவேடம் பூண்டு தமது தம்பியோடும் என்னோடும் இந்தத் தண்டகாரணியத்துக்கு வந்து சேர்ந்தார். ஐயா பிராமணோத்தமரே, இவ்வாறு நாங்கள் மூன்றுபேரும் கைகேயியினால் இராச்சியம் அபகரிக்கப்பட்டவர்களாகி எங்கள் பலத்தின் மகிமையால் இப்பயங்கரமான தண்டகாரணியத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். தாங்கள் இங்கே சற்றுத்தங்கி இளைப்பாறுங்கள். எனது கணவர் காட்டில் உள்ள கந்தமூலபலங்களையும் மான் பன்றிமுதலானவைகளைக்கொன்று போதுமான இறைச்சியையும் எடுத்துக்கொண்டு இதோ திரும்பிவந்துவிடுவார். தாங்கள் தங்கள் பெயர், கோத்திரம், குலம் முதலியவைகளைத் தயவுசெய்து எனக்குத் தெரிவிக்கவேண்டும். ஓ அந்தணரே, யாது காரணத்துக்காக நீர் இந்தத் தண்டகாரணியத்தில் தனிமையாகத் திரிகின்றீர்?'' இவ்வாறு இராமருடைய மனைவியாகிய சீதை சொல்ல வெகுபலசாலியாகிய அரக்கர்வேந்தன் விரைந்து கூறலுற்றான்:—"சீதாய், நான் இராவணன்; அரக்கர் மன்னவன். தேவர்கள், அசுரர்கள், மானுடர்கள்யாவரும் அஞ்சுபவன். பொன் போலும் மேனியுடையவளும் பட்டுடுத்துள்ளவளுமாகிய உன்னைக் கண்டது முதல் நான் எனது மனைவிமார்கள்மேல் ஆசையை முழுதும் ஒழித்துவிட்டேன். நான் பல இடங்களிலிருந்து அநேக அழ

*லக்ஷ்மணருடைய குணச் சிறப்பு.*

*இராவணன் தன் வரலாறு கூறல்.*

கான பெண்களைக் கொண்டுவந்து வைத்திருக்கிறேன். அவர்களெல்லாருக்கும் நீ தலைவி ஆகுவாயாக. சமுத்திரத்தின் நடுவில் நாலு புறமும் கடலால் சூழப்பட்டு மலையின் சிகரத்தில் அமைக்கப்பட்ட இலங்கை எனது ராஜதானி. சீதே, அவ்விடத்தில் நீ என்னுடன் சிங்காரவனத்தில் சந்தோஷமாக உலாவலாம். அப்பொழுது நீ இந்தக்காட்டில் வாழ எண்ணமாட்டாய்; சீதே, நீ என்னுடைய மனைவி ஆய்விட்டால் நல்ல ஆடையாபரணங்கள் அணிந்த ஐயாயிரம் பணிப்பெண்கள் உனக்குப் பணிவிடைசெய்வார்கள்.'' இவ்வாறு இராவணன்சொல்ல, உத்தமியான ஜானகி கோபமடைந்து அவ்வரக்கனை அகன்று நின்று சொல்லலுற்றாள்: ''பெரிய மலைபோல அசைக்க முடியாதவரும், மஹேந்திரனுக் கொப்பானவரும், பெருங் கடல்போலக் கலக்க முடியாதவருமான இராமருடைய மனைவி நான். சகல லக்ஷணங்களும் பொருந்தினவரும், ஆலவிருக்ஷம் போல்வரும், சத்தியவந்தரும், மகாத்துமாவுவாகிய இராமருடைய மனைவி நான். நீண்ட கரங்களும், அகன்ற மார்பும், மதத்த சிங்கத்தின் நடையுமுடைய புருஷ சிங்கமாகிய இராமருடைய மனைவி நான். பூரண சந்திரனுக் கொப்பான முகமுடையவரும், ராஜகுமாரரும், ஐம்புலன்களை அடக்கினவரும், பெரும் புகழ்பெற்றவருமாகிய இராமருடைய மனைவி நான். நீ என்னை இச்சிப்பது ஒரு பெண்சிங்கத்தை நரி இச்சிப்பதுபோலும். சூரியனுடைய கிரணம்போல என்னை நீ தொட முடியாது. ஓ ராக்ஷசா, இராகவருடைய காதலியாகிய என்னை நீ கவரக்கருதினமையால் இந்த மரங்களெல்லாம் உன் கண்களுக்குப் பொன்னாலானவைகளாகப்புலப்படும். மிருகாரியாகிய சிங்கத்தின் வாயிலும் சர்ப்பத்தின் வாயிலுமுள்ள பல்லைப்பிடுங்க நீ நினைக்கின்றாய்! மந்தர

சீதை இராவணனை நிந்தித்தல்.

மலையை நின்கையால்தழுவவும் விஷத்தை உண்டுவிட்டு உயிருடனிருக்கவும் நீ நினைக்கின்றாய்! கூரிய ஊசியால் கண்களைத் துடைக்கவும் கத்தியின் கூரை நாவால் பரிசிக்கவும் நீ நினைக்கின்றாய்! கழுத்தில் ஒரு பெருங்கல்லைக் கட்டிக்கொண்டு சமுத்திரத்தைக் கடக்க நீ விரும்புகிறாய்! இராமருடைய உத்தமமான பத்தினியை விரும்பும் நீ சூரியசந்திரர்களைக் கையால் பற்றவும், கொழுந்துவிட்டெரியும் தீயை துணியில் முடிந்துகொள்ளவும், கூரிய இருப்புச் சூலங்களின்மேல் நடக்கவும் கருதுகிறாய்! சிங்கத்துக்கும் நரிக்கும் போலவும், கால்வாய்க்கும் சமுத்திரத்துக்கும் போலவும், அமுதத்துக்கும் கஞ்சிக்கும் போலவும், தங்கத்துக்கும் இரும்புக்கும் போலவும், சந்தனத்துக்கும் சேற்றுக்கும் போலவும், யானைக்கும் பூனைக்கும்போலவும், காக்கைக்கும் கருடனுக்கும்போலவும், மயிலுக்கும் நீர்க்கோழிக்கும் போலவும், சாரசப்பக்ஷிக்கும் கழுகுக்கும்போலவும், இராமருக்கும் உனக்கும் உள்ள வேற்றுமை பெரிது. இந்திரனுக்கொப்பான பராக்கிரமத்தையுடைய அப்பெரிய வில்லாளியாகிய இராமர் உயிருடன் இருக்கும்வரையில் நீ என்னை அபகரித்தபோதிலும் நெய்யைக்குடித்த கொதுகுபோல நீ மாண்டுபோவது நிச்சயம்.” கொடிய ராவணனைப்பார்த்து இந்தச் சொற்களைச் சொல்லி உத்தமியான சீதை பெருங்காற்றால் அசைக்கப்படும் வாழைபோல நடுங்கி நின்றாள். அப்போது யமன்போன்ற பேராற்றலையுடைய இராவணன் அவள்மனத்தில் இன்னும் அதிக பயத்தை உண்டுபண்ணும்பொருட்டுத் தனது குலம், பலம், பெயர், தான் செய்த கொடிய செயல்கள் முதலியவைகளை எடுத்துச் சொல்லத்தொடங்கினான்.

## நாற்பத்தெட்டாஞ் சருக்கம்.

சீதையிடம் இராவணன் தனது மகிமையை உரைத்தல்.

---

சீதை இவ்வாறு சொல்ல இராவணன் அதிககோபங் கொண்டு, தனது புருவங்களை நெரித்துக் கூறலுற்றான்:—"ஓ சுந்தரி, நான் குபேரனுடைய தம்பி. என்பெயர்பத்துத் தலைகளைப் படைத்த இராவணன். நீ வாழ்வாயாக. நான் வெகு பிரதாபமுள்ளவன். யமனைக்கண்டு மனிதர் நடுங்கி ஓடுவதுபோல், என்னைக் கண்டால் தேவர்கள், கந்தர்வர்கள், பிசாசர்கள், உரகர்கள், பதகர்கள் முதலியவர்களெல்லாரும் பயந்து ஓடிவிடுவார்கள். நான் என் அண்ணனாகிய குபேரனை ஒரு காரணநிமித்தம் கோபங்கொண்டு சண்டையிட்டு வெற்றி கொண்டேன். அதனால் அவன் எனக்கு அஞ்சித் தனது செல்வநகரமாகிய இலங்கையை விட்டுக் கைலைமலைக் கோடி அங்கே குடியிருக்கிறான். வேண்டுமிடத்துக்குப் போகும் புஷ்பகம் என்னும் அவனுடைய விமானத்தை நான் எனது பராக்கிரமத்தால் பறித்துக்கொண்டேன். அதன்மீதேறி நான் இப்பொழுது வேண்டுமிடங்களுக்கு ஆகாசமார்க்கமாகச் செல்வேன். நான் கோபங் கொள்ளும்போது எனது முகத்தைப் பார்த்தமாத்திரத்திலேயே இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாரும் ஓடிவிடுவார்கள். நான் இருக்கும் இடத்தில் காற்றும் பயத்துடன் வீசும். கொடுமையான கிரணங்களை உடைய சூரியனும் எனக்குப் பயந்து குளிர்ந்த சந்திரன்போலப் பிரகாசிப்பான். வேறென்ன சொல்லவேண்டும்? நான் வசிக்குமிடத்தில் மரங்களும் இலைகள் அசையா; ஆறுகளும் விரைந்து

இராவணன் தன் பிரதாபத்தை எடுத்துச் சொல்லல்.

ஓடா. சமுத்திரத்துக்கு அக்கரையில் எனது அழகிய பட்டணமாகிய இலங்கை உளது; அது இந்திரனுடைய அமராவதிபோல நான்கு புறத்திலும் கொடிய ராக்ஷசர்களால் காக்கப்பட்டுப் பொன்மயமான மதில்களால் சூழப்பட்டிருக்கிறது. அது தங்கத்தால் கட்டப்பட்ட மாளிகைகளும், இரத்தினமிழைத்த கோபுரவாயில்களு முடையது. அது ஆனைகள், குதிரைகள், தேர்கள் நிறைந்தது; எப்பொழுதும் மங்களவாத்தியங்கள் ஒலிப்பது; விரும்பிய பழங்களைக் கொடுக்கும் பல்வகை மரங்கள் நிறைந்து சிங்கார வனங்கள் செறிந்தது. ஜனகராஜபுத்திரி, சீதே, நீ அவ்விடத்தில் என்னுடன் வாழவேண்டும். மாதே, அங்கே நீ ஒருபொழுதும் மானிடப் பெண்களைப்பற்றி நினைக்கமாட்டாய். தையால், அவ்விடத்தில் நீ மானுடர்களுக் கெட்டாத போகங்களை அனுபவித்துக்கொண்டு சுகமாயிருக்கும் போது அற்ப ஆயுளுடைய மானிடனாகிய இராமனை நினைக்கவேமாட்டாய். தசரதராஜன் தனக்கு வேண்டிய குமாரனுக்குப் பட்டங்கட்டி வைத்துவிட்டு வீரமில்லாத தனது மூத்தகுமாரனைக் காட்டுக் கோட்டிவிட்டான். தடங்கண்ணாய், தனது இராச்சியத்தை இழந்து துன்புறும் விரதியாகிய இராமனோடு இனி உனக்கு உறவு என்ன? அரக்கர்களெல்லாருக்கும் மன்னவன் நான். காமபாணத்தால் துளைபட்டு உன்னைத் தேடிவந்தேன். ஆதலால் என்னை அலக்ஷ்யம் செய்வது உனக்குத் தகாது. நீ அலக்ஷ்யம் செய்வாயேயானால் முன்னர்ப் புரூரவனைக் காலால் உதைத்துத்தள்ளிய ஊர்வசிபோலப் பின் பரிதாபப் படுவாய். இராமன் மானிடன்; போரில் என் கைவிரலொன்றிற் கிணையாகான். மாதே, உனது அதிர்ஷ்டத்தால் நானுன்னைத் தேடிவந்திருக்கிறேன். ஆகையால், நீ என்னிடம் வந்துவிடு'' இராவணன்

இலங்கையைப் புகழல்.

இராமனை விட்டு விட்டு என்னுடன் வாவெனல்.

இவ்வண்ணம் சொன்னதைச் சீதைகேட்டு வெகுகோப மடைந்து கண்கள் சிவந்து அவ்வரக்கர் மன்னவனை நோக்கி இவ்வித கடினமான சொற்களைச் சொல்வாளாயினுள் :— "எல்லாராலும் வணங்கப்படும் குபேரனை உன் சகோதர னென்று சொல்லிக்கொண்டு நீ எவ்விதமாக இந்தப் பாப மான காரியத்தைச் செய்யத் துணிகிருய்? அடா இராவண, புலன்களை அடக்காத புத்தியற்ற கொடியவனுகிய உன்னை அரசனுக அடைந்ததால் அரக்கர்கள் எல்லாரும் மாண்டு போகப்போகிருர்கள். இந்திரன் மனைவியாகிய சசிதேவி யைக் கவர்ந்து சென்றவன் ஒருகால் பிழைத்தாலும் பிழைக்கலாம்; இராமருடைய மனைவியாகிய என்னைக் கவர்ந்தவன் ஒருநாளும் உயிருடன் இருக்கமாட்டான். வச்சிராயுதத்தைத் தரித்த இந்திரன் மனைவியாகிய சசி தேவியை அவமதிசெய்தவன் பிழைப்பதுகூடும்; என்னை அவமதி செய்பவன் அமிர்தபானம் பண்ணினவனுயினும் கூற்றுக்குத் தப்புவதில்லை."

---

## நாற்பத்தொன்பதாஞ்சருக்கம்.

### இராவணன் சீதையை எடுத்துச்செல்லல்.

---

சீதை சொன்னதைக்கேட்டு வெகு பிரதாபவானுகிய தசக்கிரீவன் கையொடுகையைத்தட்டி ஒரு பேருருவுகொ ண்டு மறுபடியும் சீதையைப் பார்த்து "நீ பித்தம்பிடித் தனைபோலும். நீ எனது வீரியத்தையும் பராக்கிரமத் தையும் கேட்டதில்லையா? நான் ஆகாசத்தில் நின்று கொண்டு எனது கைகளால் இந்தப் பூமியை மேலே எடுப்பேன்; சமுத்திரத்தை முழுதும் குடிப்பேன்; யமனையும் போரில் வதைப் பேன்; எனது கூரிய பாணங்களால் சூரி யனைத் துளைப்பேன்; பூமியையும் பிளப்பேன். நான் விரும்

இராவணன் தன் பிரதாபத் தைக் கூறல்.

பிய உருவெடுக்கவல்லேன். ஆகையால், நீ என்னைக் கண்ணெடுத்துப்பார்" என்றான். இவ்வண்ணம் அவன் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே அவனுடைய பிங்களவர்ணமான கண்கள் கோபத்தால் சிவந்து எரிகின்ற அக்கினிக்கொப்பாயின. உடனே இராவணன் தான் கொண்ட சாதுவான சந்நியாசி வேஷத்தை நீக்கிவிட்டு யமனுக்கொப்பான தனது நிஜ உருவங்கொண்டு மிகச்சிவந்த கண்களும், பொற்குண்டலங்களும், பத்துத்தலைகளும், பாணங்களும், வில்லுகளும் உடையவனாய் வெகு கோபங்கொண்டு கார்மேகம் போலநின்றான். அவ்வாறு சந்நியாசிவேஷத்தைஒழித்துப் பெரிய வடிவமடைந்த அரக்கர் மன்னவனாகிய இராவணன் இரத்தவர்ணமான ஆடைபுனைந்த தனது நிஜ உருவங்கொண்டு ஸ்திரீரத்தினமாகிய மைதிலியை உற்றுப் பார்த்தான். கருங்குழலுடையவளாய் ஆடையாபரணமணிந்து சூரிய ரஸ்மிபோல விளங்கும் சீதையை அவன் பார்த்து "சுந்தரீ, மூவுலகங்களிலும் கீர்த்திபெற்ற புருஷனை அடையக்கருதினால், நீ இப்பொழுதே என்னுடன் வந்துவிடு. நான் உனக்குத் தகுதியான கணவன். நீ என்னை ஏற்றுக்கொள். நான் உத்தமன். உன்னிடம் காதல் கொண்டவன். நான் ஒருபொழுதும் உனக்கிஷ்டமில்லாத காரியத்தைச்செய்யேன். ஆகையால்,நீ மானிடனிடம் வைத்திருக்கும் அன்பை விட்டுவிடு. என்னிடம் உனது அன்பை வை. நீ ஒன்றும் தெரியாதவள்; தெரிந்தவளைப்போல் நடிக்கிறாய். தனது இராச்சியத்தை இழந்து, எண்ணங்கள் கைகூடாது, ஆயுளும் குறுகிய இராமனை நீ என்னகுணங்களைக் கண்டு காதலிக்கிறாய்? அவன் ஒரு பெண்ணின் கட்டளைப்படி தனது நாட்டைத்துறந்து, அன்பர்களையும் பந்துக்களையும்விட்டுப் பிரிந்து, கொடிய விலங்குகள் சஞ்சரிக்கும் இக்காட்டில் வந்து புத்தியீனத்தால் வசித்துக்கொண் டிருக்கிறான்"

இராவணன் சீதையைத் தன்னை நாயகனாக ஏற்றுக்கொள்ள வேண்டல்.

என்றான். அக்கொடிய பாவியாகிய அரக்கன் அன்பாகப் பேசவேண்டிய சீதையைப்பார்த்து வன்சொற் சொல்லிக்காமத்தால் கண்மூடப் பட்டவனாய் அவளை நெருங்கி, உரோகிணியைப் புதன் ஆகாசத்தில் பற்றுவதுபோல் பற்றினான்.

இராவணன் சீதையைக் கைப்பற்றல்.

அவன் சீதையை அவளுடைய *கூந்தலை இடக்கையாலும் துடைகளை வலக்கையாலும் பிடித்துத் தூக்கினான். யமனுக்கொப்பான மலைபோன்ற பெரிய தோள்களையும் கூரிய பற்களையுமுடைய இராவணனைக் கண்டு பயந்து நடுங்கி அங்கிருந்த வனதேவதைகளெல்லாம் ஓடின. பெரிய ஒலியுடையதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதும் கழுதைகள் பூட்டப்பட்டதுமான இராவணனுடைய ரதம் அங்கே வந்து தோன்றிற்று. அப்போது இராவணன் பெருங்குரலோடு கொடியவார்த்தையால்† சீதையைப் பயமுறுத்தித் தூக்கித் தன் மடியில் வைத்துக்கொண்டு இரதத்திலேறினான். புகழ்பெற்ற சீதை அவ்வாறு இராவணனால் பிடிக்கப்பட்டுத் துக்கத்தில் மூழ்கித் தூரத்திலுள்ள காட்டிற்குச்சென்ற இராமரைக்குறித்து "ஓ இராமா, இராமா" என்று கதறினாள். பன்னகேந்திரன் மனைவிபோலத் துவளும் சீதையை இராவணன் மோகத்தால் மயங்கித் தூக்கிக்கொண்டு உயரக் கிளம்பினான். அவள் அவன்மேல் சிறிதும் அன்பில்லாதவளாதலால் தன்னை அவன் கையில்நின்று விடுவிக்கப் பெரிதும் முயன்றாள். அரக்கர் மன்னவனால் ஆகாசமார்க்கமாகக் கொண்டு

இராவணன் சீதையைக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் செல்லல்.

* இந்த இடத்தில் ஸ்காந்தபுராணத்தில் கூந்தலின் நிழலையும், துடைகளின் நிழலையும் பிடித்ததாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

† இவ்விடத்திலும் மடியில் வைத்துக்கொண்டது சீதையின் சாயையை என்பது ஸ்காந்தபுராணத்தின் கூற்று.

‡ சீதையைப் பற்றிச் சொல்வதெல்லாம் சாயையைப் பற்றியே என்று நினைத்துக்கொள்ளவேண்டியதென்பது திலக வியாக்கியானத்தின் கொள்கை.

போகப்படாநிற்கையில் அவள் பைத்தியம்பிடித்தவள் போலவும், பிராந்தி கொண்டவள்போலவும், பிணி கொண்டவள்போலவும் அதிகமாகக் கதறத் தலைப்பட்டாள் : "ஆ! லக்ஷ்மணரே, பெரும் பராக்கிரமம் பொருந்தியவரே, பெரியவர்கள் சொற்படி நடப்பவரே, நம்மிடம் அசூயைகொண்ட அரக்கன் என்னைத் தூக்கிப்போவதை நீர் அறியீரோ? தருமத்தின்பொருட்டு வாழ்வையும் சுகத்தையும் பொருளையும் துறந்து காட்டுக்குவந்த இராகவரே, வெகு பாவியாகிய இராவணன் என்னை எடுத்துப்போவதை நீர் காணிலீரோ? ஐயா, சத்துருக்களைச் சங்காரம் செய்பவரே, நீர் எப்பொழுதும் கொடியவர்களைத் தண்டிக்கிறவராயிற்றே! இந்தப் பெரும் பாவியாகிய இராவணனை ஏன் நீர் தண்டிக்கவில்லை? தானியங்கள் முற்றக் காலம் வரவேண்டுமென்பதுபோல் இக்கொடிய பாவியைத் தண்டிப்பதற்குத் தகுந்தகாலமும் வரவேண்டுமோ? இராவணா, கெட்ட காலத்தால் உயிருக்கு முடிவைத் தருகின்ற இப்பயங்கரமான தொழிலைச் செய்த உனக்கு இராமரிடமிருந்து தக்க தண்டனை கிடைக்கும். இப்பொழுதுதான் கைகேயியின் எண்ணமும், அவள் பந்துக்கள் எண்ணமும் நிறைவேறின. ஆ! மஹா பெருமைபொருந்திய தர்மசாலியாகிய இராமருடைய தருமபத்தினியாகிய நான் இவ்வாறு தூக்கிக் கொண்டு போகப்படுகிறேனே! இந்தத் தண்டகாரணியத்தில் நன்றாகப் புஷ்பித்திருக்கும் கர்ணிகார விருக்ஷங்களே, இராமரிடம் இராவணன் சீதையைத் தூக்கிப்போகிறான் என்று சொல்லுங்கள். நன்றாகப் புஷ்பித்த பல சிகரங்களையுடைய பிரசரவணபருவதமே, உனக்கு நமஸ்காரம்; நீ இராமரிடம் இராவணன் சீதையைத் தூக்கிப்போகிறான் என்று விரைவில் கூறு. அன்னம் காரண்டவம் முதலிய பறவைகள் நிரம்பிய கோதாவரிநதியே, உனக்கு நமஸ்காரம்.

சீதை பிரலாபித்தல்.

செய்கிறேன்; அம்மா நீயும் இராமரிடம் இராவணன் சீதையைத் தூக்கிப்போகிறான் என்றுசொல்லு. விருக்ஷங்கள் அடர்ந்த இக்காட்டிலுள்ள தெய்வங்களே, உங்களுக்கெல்லாம் நமஸ்காரம்; நீங்கள் எல்லாரும் என் கணவரிடம் இராவணன் என்னைத் தூக்கிப்போனான் என்று தெரிவியுங்கள். இன்னும் இக்காட்டில் வசிக்கும் மிருகங்காள், பக்ஷிகாள், உங்கள் எல்லாருக்கும் நமஸ்காரம், எனது கணவரிடம் உம்முடைய உயிருக்குமேலான மனைவியை, அநாதையாய் இருக்கும்பொழுது, பலாத்காரமாக இராவணன் தூக்கிக்கொண்டுபோனான் என்று சொல்லுங்கள். யமன் தான் என்னைத் தூக்கிக்கொண்டு போனபோதிலும் என் கணவர் அறிவாராயின் தமது பேராற்றலால் ஒருநொடியில் என்னை மீட்டுக்கொண்டு திரும்புவார்". இவ்வாறு வெகு பரிதாபமாகப் பிரலாபித்துக்கொண்டு செல்லுகின்ற விசாலமான கண்களையுடைய சீதை கழுகரசனாகிய ஜடாயு ஒரு விருக்ஷத்தின்மேல் உட்கார்ந்திருப்பதைத் தன் கண்களால் கண்டாள். இராவணன் வசத்தில் சிக்கிக்கொண்ட சீதை உடனே வெகு பயத்தோடும் துக்கத்தோடும் அலறிக்கொண்டு "ஐயா ஜடாயுவே, ஓ பெரியவரே, என்னைப்பாருங்கள்! என்னை அநாதைபோலக் கொடிய அரக்கன் இரக்கமின்றித் தூக்கிக்கொண்டு போகிறானே! வெகு பலமுடையவனும் ஆயுதந்தரித்தவனுமாகிய இக்கொடிய அரக்கனைத் தடுக்கத் தங்களால் முடியாது. என்னை இவன் தூக்கிக்கொண்டுபோகும் சமாசாரத்தை ஒன்றும் விடாமல் தாங்கள் கண்டதைக் கண்டபடி இராமரிடத்திலும் லக்ஷ்மணரிடத்திலும் சொல்லவேண்டும்" என்று வேண்டினாள்.

*சீதை ஜடாயுவைக் கண்டு பிரலாபித்தல்.*

---

# ஐம்பதாஞ் சருக்கம்.

ஜடாயு இராவணனைத் தடுத்தல்.

அந்தச் சத்தத்தைச் சிறிது தூங்கிக்கொண்டிருந்த ஜடாயு கேட்டு எழுந்து இராவணனையும் சீதையையும் கண்டார். அதன்பிறகு மலையின் சிகரம்போன்ற கூரிய மூக்குடைய அப்புள்ளரசர் மரத்தில் இருந்தபடியே இராவணனைப்பார்த்து "தம்பி தசக்கிரீவ, நான் பழமையான தருமங்களை அநுஷ்டித்து உண்மையைக் கைப்பற்றினவன். என் பெயர் ஜடாயு; பலம்பொருந்திய கழுகுகளுக் கரசன். தசரத குமாரராகிய இராமர் உலகத்துக்கெல்லாம் இறைவர்; இந்திரனுக்கும் வருணனுக்கும் ஒப்பானவர்; எல்லாப் பிராணிகளுக்கும் எப்பொழுதும் நன்மையே செய்பவர். நீ இப்பொழுது தூக்கிக்கொண்டு போகும் இந்த மிக அழகிய பெரும் புகழ்பெற்ற சீதை அவ்வுலோக நாதருடைய தரும பத்தினி. குடிகளைப் பாதுகாக்கும் அரசனாகிய உனக்குப் பிறன்மனைவியைக் கைப்பற்றுவது தகுமா? மஹாபலம் பொருந்தியவனே, அரசர் மனைவியர்களை நீ முக்கியமாக ஆதரவுடன் பாதுகாக்கவேண்டுமே? ஆகையால், பிறர் மனைவியர்களைத் துன்பப்படுத்த நீ கொண்ட இந்த இழிவான கருத்தை விட்டுவிடு. தீரனாயுள்ளவன் நிந்தைக்கிடனாகிய தொழிலை ஒருபொழுதும் செய்யமாட்டான். அவன் பிறர் மனைவியர்களையும் தன் மனைவியைப்போல வேறொருவர் தீண்டாதபடி பாதுகாப்பான். நல்லமன்னவர்கள் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட தருமார்த்த காமங்கள் அல்லாதவைகளைச் செய்யமாட்டார்கள். அரசனே தருமார்த்த காமங்களுக்கெல்லாம் இருப்பிடம். தருமம், புண்ணியம், பாவம் எல்லாம் அரசனையே மூலகாரணமாக உடையன. ராக்ஷ

ஜடாயு இராவணனைச் சீதையை விட்டுப்போம்படி சொல்லல்.

சோத்தமா, நீ பாவியும் கொடிய காமியுமாய் உள்ளாய். பாவி சுவர்க்கலோகத்தை அடைந்தாற்போல நீ எவ்வாறு சம்பத்தை அடைந்தாய்? எவனுக்கு எது இயற்கையோ அதைச் சீர்திருத்த ஒருவராலும் முடியாது. கொடியவர்களிடத்தில் நல்ல உபதேசம் கொஞ்சமேனும் தங்காது. மகா பலம்பொருந்திய தருமாத்துமாவாகிய இராமர் உனது தேசத்திலாவது உனது நகரத்திலாவது ஒருவகைத் தீங்கும் பண்ணவில்லை. அப்படியிருக்க அவருக்கு நீ ஏன் தீங்கு பண்ணுகிறாய்? சூர்ப்பணகையின்பொருட்டு ஜனஸ்தானத்திலிருந்த கொடிய கரன் தனக்கொரு தீங்கும் செய்யாத இராமரை எதிர்த்து அவரால் வதைக்கப்பட்டான். அதில் இராமர் செய்தகுற்றம் என்ன? பின்னர் உலகத்துக்கெல்லாம் அரசராகிய அவர் மனைவியை நீஏன் தூக்கிக்கொண்டு போகின்றனை? நீ சீதையை உடனே விட்டுவிடு; இல்லாவிடில், இந்திரனுடைய வச்சிராயுதம் விருத்திராசுரனை எரித்ததுபோல, அக்கினிக்கொப்பான இராமருடைய கண்கள் உன்னை எரித்துவிடும். உன் துணியில் கொடியவிஷப் பாம்பை நீ முடிந்துகொண்டாயென்பதை நீ அறியவில்லையா? உன் கழுத்தில் யமனுடைய பாசத்தை நீ மாட்டிக் கொண்டாயென்பதை நீ அறியவில்லையா? சுமக்கக்கூடிய பாரத்தையன்றோ ஒருவன் எடுக்கவேண்டும்? புசித்தால் சுகமாகச்செரிக்கும் உணவையன்றோ ஒருவன் புசிக்கவேண்டும்? தருமம், கீர்த்தி, புகழ், பெருமை முதலியவைகளைத் தராததும் தேகத்துக்குச் சிரமம்தருவதுமாகிய காரியத்தை யார்செய்வான்? ஓ இராவணா, எனக்கு வயது அறுபதினாயிரமாகின்றது. நான் இதுவரையில் எனது மூதாதைகளிடமிருந்து எனக்குக்கிடைத்த இராச்சியத்தை நன்றாகப் பாதுகாத்து வருகிறேன். நான் வயதுசென்றவனாயினும் என்முன் சிறுவயதுள்ளவனும் கையில் விற்பிடித்துத் தேகத்தில் கவசமணிந்து இரதத்திலேறிச் செல்பவனுமாகிய நீ சீதையை எளிதில் தூக்கிக்கொண்டு போகமாட்டாய்.

என்றுமுள்ளதும் மாற்றமுடியாததுமான உண்மையை உணர்த்தும் வேதங்களையும் சுருதிகளையும் தர்க்கசாஸ்திர யுக்திகளைக்கொண்டு அழிக்க எவ்வாறு முடியாதோ அது போல் என் கண்முன்பாக நீ சீதையைப் பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டுபோக முடியாது. நீ சூரனானால் கொஞ்ச நேரம் காத்திருந்து இராமர்முன் நின்று போர்புரி. அப்போது கரனைப்போல் நீயும் மாண்டுவிழுந்து பூமியைத் தழுவுவாய். அடிக்கடி தைத்தியர்களையும் தானவர்களையும் பலதரம் யுத்தத்தில் கொன்ற இராமர் மரவுரிஉடுத்து உன்னையும் ஒரு நொடியில் வதைப்பார். அவ்விரு ராசகுமாரர்களும் நெடுந்தூரம் போயிருக்கிறார்கள்; நான் இப்போது என்ன செய்வேன்? கீழ்மகனே, அவர்களை நீகண்டமாத்திரத்தில் பயத்தால் நடுங்கி நாசமடைவாய். நானுயிருடன் இருக்கும் வரையில் ராமருடைய காதலியாகிய தாமரை மலருக்கொப்பான கண்களையுடைய நற்குணமுள்ள சீதையை நீ எடுத்துப்போக முடியாது. நான் என் உயிரைக் கொடுத்தாவது மகாத்துமாக்களாகிய இராமருக்கும் தசரதருக்கும் உதவிசெய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். நில்லடா தசக்கிரீவா, கணப்பொழுது நின்று பார். ஓ நிசிசர, என்னால் கூடியவரையில் நான் உனக்குப் போர் விருந்தளிக்கின்றேன். காம்பினின்று பழத்தைப் பறித்தெறிவதுபோல இவ்விரதத்திலிருந்து உன்னைக் கீழே தள்ளுகிறேன்" என்று சொன்னார்.

---

## ஐம்பத்தொன்றுஞ்சருக்கம்.

ஜடாயுவுக்கும் இராவணனுக்கும் நடந்த யுத்தம்.

---

கழுகரசனாகிய ஜடாயு இவ்வாறு நீதியை எடுத்துரைக்க இராவணன்கேட்டுக் கோபமடைந்து, அக்கினிபோ

இராவணன் ஜடாயுவை எதிர்த்து யுத்தம் செய்தல்.

லக் கண்கள் சிவந்து, தானணிந்திருந்த தங்கக்குண்டலங்களாட, அவரை எதிர்த்து ஓடினன். அப்பொழுது அவ்விடத்தில் அரக்கர்மன்னவனுக்கும் கழுகரசனுக்கும் இடையில் காற்றினல் துரக்கப்பட்ட மேகங்கள் ஒன்றோடொன்று மோதினற்போலவும் இறக்கைகளுள்ள மாலியவந்தமலைகள் ஒன்றுடன் ஒன்று முட்டினற்போலவும் பெரும்போர் நிகழ்ந்தது. இராவணன் தீக்ஷணமான நாளீகம், நாராசம், விகர்ணம் என்கிற பாணங்களை மழைபொழிவதுபோல அக்கழுகரசன்மேல் செலுத்தினன். ஜடாயு அவைகளைப் பொறுத்துக்கொண்டு கூரிய நகங்களுள்ள தனது கால்களால் வெகுபலசாலியாகிய இராவணனுடைய தேகத்தில் பலவிடங்களில் காயம் பண்ணினர். அப்போது, மகாவீரியம் பொருந்திய தசக்கிரீவன் கோபங்கொண்டு கூர்மையுள்ளனவும் நேராகச் செல்வனவும் யமதண்டத்துக் கொப்பாயினவுமான பத்துப் பாணங்களைத் தனது வில்லில் சந்தித்துக் காதுவரையிலிழுத்து அக்கழுகரசனுடைய பிராணனை ஒழித்துவிட அவர்மேல் ஏவினன். அவர் அவ்வரக்கன் தேர்மேல் சீதை கண்ணீர்விட்டு அழுதுகொண் டிருப்பதைப் பார்த்து, அப்பாணங்களைக் கொஞ்சமேனும் லக்ஷயஞ் செய்யாமல், இராவணனை நோக்கி ஓடி, தன் கால்களால் முத்தும் மாணிக்கமும் இழைக்கப்பட்ட அவன் வில்லையும் பாணங்களையும் முறித்தெறிந்தார்.

அதன்பிறகு, இராவணன் வெகு கோபங்கொண்டு மற்றொருவில்லை எடுத்து நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும்பாணங்களை வருஷித்தான். அப்பாணங்களால் மூடப்பட்ட புள்ளரசர் கூட்டிற்குள்ளிருக்கும் பக்ஷிபோல் விளங்கினர். அவர் அப்பாணங்களெல்லாவற்றையும் தமது சிறகுகளால் உதறிவிட்டுத் தமது கால்களால் மறுபடியும் அவன் பெரியவில்லை முறித்தார். அன்றியும், அக்கினி

போலப் பிரகாசிக்கும் அவன் கவசத்தை மகாவீரியம் பொருந்திய ஜடாயு தமது இறக்கைகளால் அடித்துத் துகளாக்கினார். பின்னர் அவர் தங்கப்பட்டயம் அணிந்தனவும் பேய்முகத்தையுடையனவும் வேகமுடையனவுமான அவனுடைய கழுதைகளை அடித்துக்கொன்றார். பின்பு இஷ்டப்படி சஞ்சரிப்பதும் நல்ல பாரையுடையதும் அக்கினிபோல் விளங்குவதும் இரத்தினம் இழைக்கப்பட்டதுமான அவனுடைய இரதத்தை முறித்தார். பின்னர்ப் பூரண சந்திரனுக்கொப்பான அவன் வெண்குடையையும் அவன் சாமரங்களையும் அவைகளைப் பிடித்திருந்த அரக்கர்களையும் ஜடாயு அடித்துக் கீழேதள்ளி, மூக்கினால் சாரதியின் தலையைக் கொத்தி எறிந்தார். இராவணன் வில் முறிந்து, இரதமழிந்து, இரதத்தில் கட்டிய குதிரைகள் மாண்டு, சாரதியும் செத்து, சீதையை மடியிலெடுத்துக்கொண்டு பூமியில்வந்துநின்றான். இராவணன் இரதமழிந்து பூமியில் நிற்பதைக் கண்டு பிராணிகளெல்லாம் "நன்று நன்று" என்று புள்ளரசனைப் புகழ்ந்தன. பக்ஷிராசன் கிழத்தன்மையால்கொஞ்சம்சோர்வடைந்ததை இராவணன் கண்டு, சந்தோஷமுற்று, சீதையை எடுத்துக்கொண்டு மறுபடியும் ஆகாயத்தில் கிளம்பினான். அவ்வாறு சந்தோஷமடைந்து இராவணன் சீதையை எடுத்துக்கொண்டு போவதை ஜடாயு கண்டு, பறந்து சென்று அவனைத் தடுத்து, "ஓ இராவணா, உன்னுடைய அன்பர்கள், பந்துக்கள், மந்திரிகள், சைநியங்கள், மற்றப் பரிவாரங்கள் எல்லாரும் நாசமடைதற்காகவே, தாகமெடுத்தவன் தண்ணீர் என்று விஷத்தைக் குடிப்பதுபோல், வஜ்ஜிராயுதத்துக் கொப்பான பாணங்களையுடைய இராமரது மனைவியை, நீ எடுத்துப்போகிறாய். தாம் செய்யுங்காரியத்தால் விளையும் பயனை அறியாதவர்கள் நாசமடைவதுபோல், வெகு சீக்கிரமாக நீ

ஜடாயு இராவணன் தேரை அழித்தது.

சாரதியைக் கொன்றது.

நாசமடைவாய். மாமிசத்தைக் கண்டு மயங்கித் தூண்டின்முள்ளை விழுங்கின மீனைப்போல், உன்னை யமனுடைய பாசம் சுற்றிக்கொண்டது! இனி நீ எவ்விடமோடித் தப்புவாய்? ஒருபொழுதும் வெல்லமுடியாத அவ்வரசகுமாரர்கள் அவர்களுடைய ஆச்சிரமத்தில் நீ நுழைந்ததைக் கொஞ்சமேனும் சகிக்கமாட்டார்கள். அன்றியும் நீ செய்தகாரியம் பயந்தவன் செயலாயிருக்கின்றது. எல்லாரும் நிந்திக்கும்படி நீ செய்த இந்தவேலை திருடருடைய தொழிலேயன்றிச் சூரர்கள் செயலன்று. நீ சூரனாகில் போர் செய். அல்லது கொஞ்சநேரம் நில். உனது தம்பியாகிய கரன் மாண்டதுபோல் நீயும் பூமியில் மாண்டுவிழுவாய். கெட்டுப்போகும் காலம் வந்தமையால்தான் நீ இக்கெட்ட தொழில்களைச் செய்தாய். இவை நாசமடைபவர்கள் செய்யும் செயல்களே. பாபம்விளையும் செயல்களை யார் செய்வார்கள்? உலகாதிபதியாகிய பிரமதேவர்கூடச் செய்யமாட்டார்" என்றார். இவ்வாறு ஜடாயு சொல்லிவிட்டுத் தசக்கிரீவன் முதுகில் பறந்துவந்து விழுந்தார். யானைமேல் ஏறினவன் அதனுடைய துஷ்டத்தனத்தைப் போக்கடிக்க அதனை நடத்துவதுபோல் அப்புள்ளரசர் அவ்வரக்கன் தலைமயிரைப் பிடுங்கி முதுகை நகத்தாலும் மூக்காலும் சின்னபின்னமாகக் கிழிக்கத்தலைப்பட்டார். அவ்வாறு புள்ளரசரால் பிளக்கப்பட்ட இராவணன் கோபத்தால் உதடு துடித்து மெய் பதறி நின்றான். அவன் தனது இடது துடையில் சீதையை வைத்துக்கொண்டு வெகு கோபத்தோடு தனது கையால் ஜடாயுவை அறைந்தான். பகைவரேறாகிய ஜடாயு அவ்வடியைப் பட்டுக்கொண்டு தமது மூக்கால் அவனுடைய இடக்கை பத்தையும் துண்டித்தெறிந்தார். கைகள் அறுந்து கீழேவிழுந்தவுடனே அவற்றினிடத்தில், புற்றினின்று விஷப் பாம்புகள் எழும்புவதுபோல, வேறு கைகள் உடனே தோன்றின. அதன்

ஜடாயு இராவணன் கைகளைத் துண்டித்தல்.

மேல் இராவணன் வெகு கோபங்கொண்டு சீதையைப் பூமியில் விட்டுவிட்டுக் கைமுட்டியாலும் காலாலும் புள்ளரசரைப் புடைத்தான். அப்போது மிக்க பலமுள்ள அவ்வரக்கர் மன்னவனுக்கும் எருவைகட் கரசனுக்கும் கொஞ்சநேரம் பெருஞ் சண்டை விளைந்தது. இராமருக்காகத் தன்வலியைக் காட்டத்தொடங்கின ஜடாயுவின் இரு சிறகுகளையும் கால்களையும் விலாக்களையும் இராவணன் வாளால் வெட்டினன். கொடிய அரக்கனல் அவ்வாறு சிறகுகள் வெட்டுண்ட புள்ளரசர் குற்றுயிராகப் பூமியில் விழுந்தார். தேகமெல்லாம் இரத்தமோட ஜடாயு பூமியில் விழுந்ததைச் சீதை பார்த்து, அதிக துக்கங்கொண்டு, அவரைநாடிப் பந்துவைப்போல் துக்கத்துடன் ஓடினள். கார்மேகம்போன்றவரும் வயதால் வெளுத்தவரும் பலசாலியுமாகிய புள்ளரசர், இலங்கை மன்னவனுகிய இராவணன் காண, அணைந்த காட்டுத்தீயைப்போலப் பூமியில் விழுந்தார். அப்போது சீதை இராவணனுடைய பலத்தால் மடிந்து பூமியில் விழுந்த ஜடாயுவைக் கட்டிக்கொண்டு கோவென்று கதறினள்.

ஜடாயு மாண்டது.

---

## ஐம்பத்திரண்டாஞ் சருக்கம்.

ஜடாயு மாண்டபிறகு

இராவணன் சீதையை எடுத்துக்கொண்டு செல்லல்.

---

இராமருடைய ஆச்சிரமத்துக்கு அருகில் அவ்வாறு குற்றுயிராக ஜடாயு விழுந்ததை இராவணன் கண்டான். சந்திரன்போன்ற முகத்தையுடைய சீதை இராவணனல் வெட்டுண்டு அப்புள்ளரசர் மாண்டுவிழுந்ததைக் கண்டு வெகுவாகப் புலம்பினள். பலசாலியான இராவணன் அவ்வாறு வதைத்த ஜடாயுவைச் சீதை கட்டிக்கொண்டு துக்

சீதை புலம்பல்.

கத்தால் புலம்பி "கண் துடித்தல், தோள் துடித்தல், கனவு, பறவைகளைக் காணல், பறவைகள் கூவுதல் முதலிய சகுனங்கள் மனிதர்களுக் குண்டாகும் நன்மை தீமைகளைத் தெரிவிக்கின்றன. ஓ இராமா, நீர் உமக்கு வந்திருக்கும் இப் பெருந் துக்கத்தை இன்னும் அறிந்துகொள்ளவில்லை. உமக்கு முன் அபசகுனமாகப் பறவைகளும் விலங்குகளும் சஞ்சரிக்கவும் அன்பினால் என்னைக் காப்பாற்றவந்த இப்பறவை மன்னன் எனது பாக்கியமின்மையால் வதையுண்டு பூமியில் கிடக்கின்றான். ஓ இராமா, ஓ லக்ஷ்மணா, என்னைக் காப்பாற்றுங்கள்" என்று சொல்லி அவ்வுத்தமியானவள் பயத்தால் நடுங்கிக்கொண்டு தனக்குச் சமீபத்திலிருப்பவர்களைக் கூப்பிடுவதுபோலத் தூரத்திலிருக்கும் இராமலக்ஷ்மணர்களைக் கூப்பிட்டுக் கதறினாள். அப்போது வாடின பூமாலை அணிந்து அநாதைபோலக் கதறும் சீதையிடம் இராவணன் ஓடிவந்து, அவ்வுத்தமி கொடியைப் போல ஒரு பெருமரத்தைக் கட்டிப்பிடிப்பதைப் பார்த்து "விட்டுவிடு" "விட்டுவிடு" என்று கூவினான். அக்காட்டில் இராமரைப்பாராமல் இராமா, இராமா, என்று கதறும் சீதையை யமனுக்கொப்பான இராவணன் சீக்கிரம் தன் பிராணனை இழக்கும்பொருட்டுக் கூந்தலில் பற்றினான்.

இராவணன் சீதையைக் கைப்பற்றல்.

அவ்வாறு, அக்கொடிய பாவி வைதேகியைப் பற்றினதும் இவ்வுலகத்திலிருந்த அசையும்பொருள் அசையாப்பொருள்கள் எல்லாம் மெய்ம்மறந்து போயின. பெரிய இருள்வந்து சகல பொருள்களையும் மூடிக்கொண்டது. காற்று வீசவில்லை. சூரியன் ஒளி இழந்தனன். பிரமதேவர் சீதை பிடிபட்டதைத் தமது திவ்ய ஞானத்தால் அறிந்து "நமது காரியம் ஆய்விட்டது" என்று சொன்னார். தண்டகாரணியத்தில் வசித்த பெரிய தவத்தோர்கள் சீதை பிடிபட்டதைக் கண்டு துக்கமும், இராவணனுக்கு முடிவு கிட்டி

விட்டதென்று சந்தோஷமும் ஒரேகாலத்தில் அடைந்தார்கள். இராமா, லக்ஷ்மணா என்று சீதை கதறிக்கொண்டிருக்க அரக்கர் மன்னவனாகிய இராவணன் அவளைத் தூக்கிக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றான். பொன்னாபரணமணிந்து மஞ்சட் பட்டுடுத்திருந்த தங்கநிறமான சீதை அப்பொழுது மிகவும் அழகாக மின்னல்போல் விளங்கினாள். சீதை உடுத்திருந்த மஞ்சள்பட்டுக் கொடிபோல் பறக்க இராவணன் ஒரு பெரியமலை தீப்பற்றினதுபோல் வெகு அழகாகத் தோன்றினான். வெகு உத்தமியான சீதை அணிந்திருந்த மணமுள்ள செந்நிறமான தாமரை யிதழ்கள் உதிர்ந்து இராவணன் உடலில் விழுந்தன. காற்றில் பறக்கின்ற அவளுடைய மஞ்சள் நிறமான பட்டுத்துணி சூரியனுடைய வெயிலாற் சிவந்த மேகம்போல் தோன்றிற்று. ஆகாயத்தில் செல்லும் இராவணன் மடியிலிருந்த இராமரைப் பிரிந்த சீதையின் முகம், காம்பின்றியிருந்த தாமரைபோல, வாடியிருந்தது. நன்றாக வெளுத்து விளங்கும் அழகிய பற்களையும், அழகிய நெற்றியையும், கூந்தலையும் உடையதும், தாமரை மலரின் உள் நிறம்போன்ற நிறமுடையதும், லக்ஷணக் குறைவில்லாததும், பூரண சந்திரன் போன்றதும், உயர்ந்த மூக்கும் அழகிய உதடுமுடையதும், ஆகாசத்தில் செம்பொன் நிறமாக விளங்குவதுமாகிய சீதையின் முகம் அழுகையினாலும் கண்ணீர் வடிதலினாலும் இராமரைவிட்டுப் பிரிந்திருக்கையினாலும் இராவணனால் பீடிக்கப்பட்டமையினாலும் ஆகாயத்தில் செல்லும் அவ்வரக்க மன்னவன் மடியில் பகலிலுதித்த சந்திரன்போல் சோபிக்கவில்லை. பொன்னிறமுள்ள அவ்வுத்தமி இராவணன் மடியில் யானையணிந்த பொன்மாலை போலவும் கார்மேகத்தின் மத்தியில் உள்ள மின்னற்கொடிபோலவும் தோன்றினாள். இளந் தளிர்போல் சிவந்த நிறமுள்ள சீதை

இராவணன் சீதையைக் கையிலெடுத்துச் செல்லும் தோற்றம்.

யானையின்மேல் கட்டப்பட்ட தங்கக் குழல்போல் இராவ ணன் மடியில் விளங்கினாள். அவளுடைய ஆபரணங் களின் சப்தத்தால் இராவணன் ஆகாயத்தில் செல்லும் முழங்குகின்ற கரிய மேகம்போல விளங்கினான். அவன் சீதையைக் கொண்டுபோகும்பொழுது அவள் தலையி லிருந்து புஷ்பங்கள் உதிர்ந்து நான்கு பக்கங்களிலும் விழுந்தன. அப்போது இராவணன் தேகத்தின்மேல் விழுந்த புஷ்பங்கள் மேருமலையைச் சுற்றியுள்ள நக்ஷத் திரங்கள்போல விளங்கின. நல்லமணிகளிழைக்கப்பட்ட சிலம்புகள் வைதேகியின் காலினின்றும் கழன்று மின்னற் கொடிபோல் பூமியில் விழுந்தன. குபேரனுடைய தம்பி யான தசமுகன் சீதையைத் தூக்கிக்கொண்டு செல்ல, பெரிய நக்ஷத்திரம்போலும் அவளது பெருங்காந்தியால் விண்முழுதும் விளக்கமடைந்தது. அவள் உடலிலிருந்து நழுவிப் பூமியில் விழும் நெருப்புப்போன்ற பொன்னாபர ணங்கள்தமது புண்ணியங்குன்றிப் பூமியிலுதிரும் நக்ஷத் திரங்கள்போல விளங்கின. சந்திரன்போல விளங்கும் முத்துமாலை அவள் மார்பிலிருந்து விழுவது ஆகாயத்தி லிருந்து பூமியிலிறங்கிய கங்கைபோலச்சோபித்தது. இரா வணன் செல்லும் வேகத்தால் வழியிலிருந்த மரங்கள் அலைந்து அவைகளிலிருந்த பறைவைகளெல்லாம் ஒலித் தது "பயப்படவேண்டாம்" என்று சீதைக்குத் தைரி யம் சொன்னதை ஒத்திருந்தது. மலர்கள் அலைந்து வாட மீன்கள் ஓடுகின்ற தாமரை ஓடைகள் தங்கள் தோழி யாகிய சீதைக்கு நேர்ந்ததைக் கண்டு பரிதபிப்பன போன்றன. சீதையின் நிழலைத் தொடர்ந்

சராசரம் அடைந்த துயரம்.

துகொண்டு சிங்கங்களும், புலிகளும், மற்ற விலங்குகளும், பக்ஷிகளும், நானு பக்கங்களிலிருந்தும் வெகு கோபத்துடன் ஓடின. அருவி களாகிய கண்ணீரை ஒழுக்கிச் சிகரங்களாகிய கைகளை மேலே தூக்கிக்கொண்டு பெருமலைகளும் எடுத்துக்கொண்டு

போகப்படுகின்ற சீதைக்காகப் பரிதபிப்பன போலத் தோன்றின. அபகரிக்கப்பட்டுப் போகும் சீதையைக் கண்டு சூரியனும் தனது இயல்பான காந்தியை யிழந்து வெளுத்துத் தோன்றினன். "இராமருடைய மனைவியாகிய சீதையை இராவணன் தூக்கிப்போவதானல் இவ்வுலகத்தில் தருமமில்லை. உண்மை ஏது? நன்மையும் இல்லை. தயையும் இல்லை" என்று பிராணிகள் எல்லாம் கூட்டங் கூட்டமாய்க் கூடிப் புலம்பின. மான்குட்டிகள் பயமடைந்து வாடினமுகத்தோ டழுதன. வனதேவதைகள் பயமடைந்த தங்கள் கண்களை அடிக்கடி உயர எடுத்துப் பார்த்து நடுக்கமடைந்தார்கள். சீதை அடிக்கடி பூமியைப் பார்த்துக்கொண்டு கூந்தல் சோரத் திலகமழிய "இராமா, லக்ஷ்மணு" என்று கதறிக்கொண்டு போயினள். தனது நாசத்தின்பொருட்டு இராவணன் சீதையை அவ்வாறு தூக்கிக்கொண்டு செல்ல, வெள்ளிய மூரலையுடைய சீதை பந்து ஜனங்களை விட்டுப்பிரிந்து இராமரையும் லக்ஷ்மணரையும் காணுமல் துக்கத்தில் மூழ்கி முகம் வெளுத்தாள்.

---

## ஐம்பத்துமூன்ருஞ் சருக்கம்.

சீதை இராவணனை நிந்தித்தல்.

---

சீதை தன்னைத் தூக்கிக்கொண்டு ஆகாய மார்க்கமாகப் போகிற இராவணனைப் பார்த்துத் துயருற்று மிகவும் மனங்கலங்கிப் பெரும் பயமடைந்தாள். அவ்வாறு கொண்டுபோகப்படும்போது சீதை மிகவும் பரிதாபமாக அழுது, தனது கண்களில் கோபமும், அழுகையும், அச்சமும் புலப்படத் தறுகண்ணனுகிய இராவணனைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லத் தொடங்கினள்:—"அடா இராவணு, அற்பனே, நான் தனியாக இருப்பதை அறிந்து என்

சீதை இராவணனை நிந்தித்தல்.

னைத் தூக்கிக்கொண்டு போகிறாயே! உனக்கு வெட்கம் இல்லையா? கொடியவனாகிய நீதான் என்னைக் கவர்ந்து கொண்டுபோகக்கருதி உன்னுடைய மாயையின் வலியால் ஒரு மானுருவங்கொண்டு என் கணவனை என்னைவிட்டுப் பிரித்து வெகுதூரம் போகச்செய்தாய். என்னைக் காப்பாற்றவந்த எனது மாமனாருடையதோழரும் பெரியவருமாகிய கழுகரசரும் உன்னால் கொல்லப்பட்டார். இராக்கதப்பதரே, உன் வலிமை மிகவும் பெரிது! நான் இராவணன் என்று கூறி நேராக யுத்தத்தில் ஜெயிக்கமாட்டாமல் என்னைத் தூக்கிக்கொண்டு வந்துவிட்டாயே! இந்த நிந்தனையான காரியத்தைச் செய்துவிட்டு வெட்கம் இல்லாதிருக்கின்றாயே! ஒருவனுடைய மனைவியை அவனில்லாத சமயத்தில் அபகரிப்பதாகிய உன்னுடைய இந்தக் கொடிய இழிவான செய்கையை உலகமெங்கும் பெரியோர்கள் தூற்றுவார்கள். சற்றுமுன் நீ பேசின உனது பெருமையும் பராக்கிரமமும் நிந்திக்கத்தக்கன. சீ! உன்னுடைய இந்தச் சரித்திரம் உன் குலத்திற்கு என்றென்றைக்கும் இழிவாகும். நீ வெகு வேகமாய் ஓடுகின்றாயே! நான் என்ன செய்வேன்? கொஞ்சநேரம் தாமதிப்பாயானால் உயிருடன் நீ திரும்பவே மாட்டாய். அவ்விரு ராஜகுமாரர்களுடைய கண்களுக்கு நீ எதிர்ப்படுவாயானால் உனது சைநியங்கள் சூழ இருந்தபோதிலும் நீ ஒரு நாழிகை கூட உயிரோடிருக்கமாட்டாய். காட்டுத்தீயைப் பறவை பொறுக்க முடியாதவாறுபோல நீயும் அவர்களுடைய பாணங்கள் உன்மேல் தைப்பதைப் பொறுக்கமாட்டாய். ஆகையால், உனக்கு நன்மையைத் தேடிக்கொள்ளவேண்டின் நீ என்னை விட்டுவிடு. நீ என்னை விடாமற்போனால் என் கணவரும் தம்பியும் உன்னைத் தப்பாமல் கொன்றுவிடுவார்கள். எந்த எண்ணத்துடன் என்னைப் பலாத்காரமாகக் கொண்டுபோகிறையோ அந்த எண்ணம் வியர்த்தமாகத்தான்போய்விடுமென்று எண்ணிக்கொள். தேவருக்

கொப்பான என்கணவரைப் பாராமல் சத்துருவசத்தி லிருந்துகொண்டு என் பிராணனை நான் வைத்துக்கொண் டிருக்கமாட்டேன். சாகுங்காலத்தில் ஒருவனுக்கு எல் லாம்விபரீதமாகத் தோன்றுவதுபோல உனக்கும் எது பெருமை எது க்ஷேமம் என்பது தெரியவேயில்லை. காலங்கிட்டினவர்களுக்கு நன்மை சொன்னால் அது ஏற்க மாட்டாது. ஓ ராவணா, உனது கழுத்தில் காலபாசம் விழுந்துவிட்டது. இவ்வண்ணம் பயப்படும்படியா யிருக் கவும், நிசாசர, நீ பயப்படவில்லை. ஆகையால், மரங்களெல் லாம் தங்கமாக உன்கண்களுக்குத்தோற்றுகிறது நிச்சயம். இரத்தவெள்ளம் நிறைந்தோடும் பயங்கரமான வைதரிணி நதியையும், கத்திகளையே இலைகளாக உடைய பயங்கர மான காட்டையும், இருப்பு முட்களையும், பொன் மலர்களை யும், வைடூரியத்தாலான இலைகளையுமுடைய அனல்வீசிக் கொண்டிருக்கும் சான்மலி விருக்ஷத்தையும் நீ பார்க்கப் போகிறாய்.* விஷத்தைக் குடித்தவன் பிழைத்திருப் பது எவ்வாறு சிறிதும் முடியாதோ அதுபோல மகாத் துமாவாகிய இராமருக்கு இந்தக் குற்றம் செய்த நீ பிழைக்கவேமாட்டாய். அடா இராவணா, நீ யமனுடைய பாசத்தில் சிக்கிக்கொண்டாய். இனி நீ எங்கே சென் றாற்றான் என்ன? மகாத்துமாவாகிய இராமருக்குக் குற் றஞ்செய்த உனக்குப் புகலிடம் என்ன இருக்கிறது? தம து தம்பியின் துணைகூட இல்லாமல் தாமே தனிமையாய் நின்று ஒரு நிமிஷத்தில் பதினாலாயிரம் அரக்கர்களை யுத்தத்தில் மாய்த்தவரும் சகலவித ஆயுதப்பயிற்சியிலும் தேர்ந்தவரும் பலசாலியுமாகிய இராகவர், தமது மனைவி யைத் தூக்கிக்கொண்டோடும் உன்னைக் கொல்லாது விடு வரா?" என்றும் இன்னு மநேகவிதமாகவும் இராவணன்

* நரகத்தில் பாவிகளுக்கு இம்மூன்றும் வெகு கொடிய தண்டனைக ளென்பது நம்மவர் கொள்கை.

மடியிற் கிடந்துகொண்டு சீதை பயத்தாலும் துக்கத்தாலும் மீதூரப்பட்டு வெகுபரிதாபமாகப் பிரலாபித்தாள். இவ்வாறு அதிக துக்கமடைந்து மிகவும் பரிதாபமாகப் புலம்பி அழுது மெய் நடுங்கித் தன்னை அவன் கையிலிருந்து விடுவிக்க முயன்றுகொண்டிருக்கும்பொழுதே சீதையை அப்பாவி எடுத்துக்கொண்டு போயினான்.

---

## ஐம்பத்துநான்காஞ் சருக்கம்.

### இராவணன்

சீதையை எடுத்துப்போய்த் தனது அந்தப்புரத்தில் வைத்தல்.

---

இராவணன் இவ்வாறு அவளைத் தூக்கிக்கொண்டு போகும்பொழுது தன்னைக் காப்பாற்றுவார் யாரையுங் காணாத சீதை ஒரு மலையின் சிகரத்தின்மேல் ஐந்து வானர வீரர்கள் நிற்கக்கண்டாள். அவர்கள் தன் விருத்தாந்தத்தை இராமருக்குச் சொல்லக்கூடும் என்று எண்ணி அவள் அவர்கள் மத்தியில் பொன்னிறம் பொருந்திய தனது மஞ்சள்பட்டு மேல்வஸ்திரத்தில் சில நகைகளை முடிந்து எறிந்தாள். அவள் அவ்வண்ணம் தனது துணியில் நகைகளை முடிந்து கீழே எறிந்ததை இராவணன் வேகமாகச் சென்றுகொண்டிருந்ததால் காணவில்லை. நெருப்புப்போன்ற கண்களையுடைய அவ்வானர வீரர்கள் அவ்வாறு அழுதுகொண்டு போகும் சீதையைக் கண் இமையாது நன்றாகப் பார்த்தார்கள். அரக்கர் குலாதிபன் பம்பா சரசைத் தாண்டி இலங்கையை நோக்கி, அழுதுகொண் டிருந்த சீதையை எடுத்துக்கொண்டு சென்றான். இராவணன் சீதையைக் கைப்பற்றினதால் மிகவும் சந்தோஷ மடைந்து கூர்மையான பற்களையு

டைய விஷப் பாம்பை எடுத்து மடிமேல் வைத்துக் கொள்வதுபோல அவளை மடியில் வைத்துக்கொண்டு சென்றான். வில்லிலிருந்து விடப்பட்ட பாணம் போல இராவணன் விரைவில் காடு, மலை, ஆறு, குளம் இவைகளையெல்லாம் கடந்து சென்று என்றும் வற்றாததும், திமிங்கிலம்முதலிய கொடிய ஜலஜெந்துக்கள் உறைவதும், நதிகளெல்லாம் வந்து சேரப்பெறுவதுமான சமுத்திரத்தைத் தாண்டினான். அச்சமுத்திரமும் இராவணன் சீதையைக் கவர்ந்துகொண்டு வருவதனால் துக்கமடைந்து அலைகள் வீசாமலும் மீன்கள் முதலிய ஜலஜெந்துக்கள் ஓடப்பெறாமலும் இருந்தது. ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தசித்தர்களும் சாரணர்களும் "தசமுகா, இதுவே உனக்கு முடிவு" என்று சொன்னார்கள். தனது நாசத்துக்குக் காரணமானவளும் தன்னிடமிருந்து தன்னை விடுவிக்க முயல்பவளுமான சீதையை மடியில் எடுத்துக் கொண்டு இராவணன் இலங்கையை அடைந்தான். அவ்வாறு அவன் இலங்கை சேர்ந்து வெகு அழகாகவும் சிறப்பாகவும் அமைக்கப்பட்டு ஜனங்கள் நிரம்பி யிருந்த அநேக வீதிகளைத் தாண்டித் தனது அந்தப்புரத்தை அடைந்தான். அங்கே, இராவணன் சோகமும் மோகமும் கொண்டு கடைக்கண் கறுத்திருக்கும் சீதையை, மயன் அசுர மாயையைத் தனது அரண்மனையில் வைத்ததுபோல், வைத்தான். அதன்பிறகு, அவ்வரக்கன் சில பேய்முகமுடைய வெகு பயங்கரமான ராக்ஷசிகளைப் பார்த்துப் பின்வருமாறு கூறினான்: "என்னுத்தரவில்லாமல் ஆணாவது பெண்ணாவது சீதையைப் பார்க்கக்கூடாது. பொன், முத்து, மாணிக்கம், ஆபரணம், ஆடைமுதலியவைகளில் சீதை எப்போது எவைகளைக் கேட்கிறாளோ அவைகளை அப்போதே அவளுக்குக் கொடுக்கவேண்டும். தெரிந்தாவது தெரியாமலாவது சீதையைப் பார்த்து எவளாவது ஏதாவது கொடிய சொற்களைச் சொல்லுவாளா

ஞல் அவள் தன் உயிரை உடனே இழந்துவிடுவாள்". இவ்வாறு வெகு கீர்த்திபெற்ற இராவணன் ராக்ஷசிகளைப் பார்த்துக் கட்டளையிட்டுவிட்டு அந்தப்புரத்தை நீங்கி வெளியே சென்று இனிமேல் என்னசெய்யவேண்டும் என்று ஆலோசித்தான். அப்பொழுது பிசிதவூணராகிய மிக்க பலம் பொருந்திய எட்டு அரக்கர்களை அவன் கண்டான். அவர்களைக் கண்டதும் வெகுவல்லமை பொருந்திய இராவணன் தான் பெற்ற வரங்களால் தன்னை ஒருவரும் அசைக்கமுடியாதென்று நினைத்து அவர்களைக் கூப்பிட்டு, அவர்கள் பலத்தையும் வீரத்தையும் புகழ்ந்து அவர்களை நோக்கி "நீங்கள் எல்லாரும் இப்பொழுதே பல ஆயுதங்கள் எடுத்துக்கொண்டு இதற்கு முன் கரன் வசித்துவந்ததும், இப்பொழுது அவனுடன் மற்ற அரக்கர்களும் அழிந்ததால் பாழாகக் கிடக்கிறதுமான ஜனஸ்தானத்துக்குப் போய்ப் பயமென்பதைத் தூரத்தில் நீக்கிவிட்டு அங்கே வசியுங்கள். அவ்விடத்தில் நான் வைத்திருந்த பெரிய வல்லமையுள்ள ராக்ஷச சேனை கரதூஷணர்களுடன் ராமபாணங்களால் அழிந்துவிட்டது. ஆகையால், பொறுமையைமீறூர்ந்து எனக்கு ஒருகாலுமில்லாத கோபம் உண்டாயிருக்கிறது. அன்றியும் அவ்விராமனிடம் நான் மிக்க கொடுமையான பகைமை பாராட்டுகின்றேன். அவனிடத்தில் நான் பழிக்குப்பழி வாங்க விரும்புகிறேன். போரில் நான் அவனைக் கொல்லுகிறவரையில் எனக்குத் தூக்கம் வரமாட்டாது. கரனையும் தூஷணனையுங் கொன்ற அவ்விராமனைச் சீக்கிரம் கொன்று, தனமில்லாதவன் பெரும்புதையலை அடைந்தாற்போலக்களிப்படைவேன். நீங்கள் ஜனஸ்தானத்திலிருந்துகொண்டு இராமனுடைய செயல்களை எல்லாம் நன்றாய் அறியவேண்டும். நீங்கள் எல்லாரும் வெகு ஜாக்கிரதையாகச் சென்று இராமனைக் கொல்வதற்கு இடைவிடாதுமுயலுங்கள். நான் உங்களுடைய வல்

லமையைப் போர்முகத்தில் பலதடவைகளில் கண்டிருக்கி றேன்; ஆகையாற்றான், ஜனஸ்தானத்துக்கு உங்களை அனுப்புகிறேன்" என்று கட்டளையிட்டான்.

இவ்விதமான இனிய பொருள்பொதிந்த வாசகங்களைக் கேட்டு அவ்வரக்கர்கள் இராவணனை நமஸ்காரம் பண்ணி, எல்லாரும் ஒன்றுசேர்ந்து, ஒருவரும் தங்களைக் காணுதபடி இலங்கையை நீங்கி ஜனஸ்தானத்தை நோக்கி அப்பொழுதே புறப்பட்டார்கள். இவ்விதமாக இராவணன் சீதையைக் கொண்டுவந்து தன் அரண்மனையில் வைத்ததற்காகச் சந்தோஷமடைந்ததன்றித் தனது புத்தியின்மையால் இராமருடைய கொடிய பகையைத் தேடிக்கொண்டதற்காகவும் களிப்படைந்தான்.

---

## ஐம்பத்தைந்தாஞ் சருக்கம்.

இராவணன் சீதையைத் தனக்கு மனைவியாகும்படி வேண்டல்.

---

இவ்வாறு, பயங்கரமான பராக்கிரமமுள்ள அரக்கர்கள் எண்மரைக் கட்டளையிட்டு அனுப்பியபின் இராவணன் தான் செய்யவேண்டியவைகளெல்லாவற்றையும் செய்துவிட்டதாகத் தனது புத்தியின்மையால் நினைத்துக் கொண்டான். பின்பு அவன் காமபாணத்தால் மிக வருந்திச் சீதையைப்பற்றி இடைவிடாது சிந்தித்துக்கொண்டு அவளைப் பார்க்கும்பொருட்டுத் தனது அழகான அரண்மனையில் வெகு வேகமாகப் புகுந்தான். அவன் அங்கு நுழைந்து, ராக்ஷசிகளின் நடுவில் சீதை மிக்க துயரத்தால் வருந்திக் கண்ணீர் ஓடுகின்ற முகத்துடன், பெருங்கடல் நடுவில் காற்றால் அடிபட்டு முழுகுகின்ற கப்பல்போலவும், தனது இனத்தைவிட்டுப் பிரிந்து வேட்

இராவணன் சீதையைக் காணச் செல்லல்.

டைநாய்களால் சூழப்பட்டு நிற்கும் பெண்மான் போலவும், இருப்பதைக் கண்டான். துயரத்தால் தீனமாய்த் தலை குனிந்திருக்கும் சீதையை இராவணன் கிட்டி, தேவர்கள் மாளிகைக் கொப்பானதும், ஆயிரம் மாதர்கள் வசிப்பதும், அநேக பக்ஷிக்கூட்டங்கள் நிரம்பியதும், அநேகவித மணிகளிழைக்கப்பட்டதும், தந்தம், பொன், படிகம், வெள்ளி முதலியவைகளால் செய்யப்பட்டு வயிரமும் வைடூரியமும் பதிக்கப்பட்ட தூண்களையுடையதும், வெகு அழகான மாடங்களையுடையதும், மங்களவாத்தியங்கள் ஒலிப்பதும், சித்திரக் கோபுரவாயில்களை யுடையதுமான தனது மாளிகையை அவளுக்குப் பலாத்காரமாகக் காட்டினான். அன்றியும், அவளுடன் தங்கத்தா லியற்றப்பட்டு வெகு அழகாக விளங்கும் தனது மாடிப்படியில் இராவணன் ஏறினான். அம்மாளிகையிலுள்ள பலகணிகள் தந்தத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்டுப் பொன் புனைந்த வலைகளால் மூடப்பட்டிருந்தன. தரை மாணிக்கக் கற்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இராவணன் இப்படிப்பட்ட தனது மாளிகை முழுதையும் சோகத்தால் தபித்துக்கொண்டிருந்த சீதைக்குக் காண்பித்தான். பின்னர் வைதேகிக்கு அவன் தனது அரண்மனையிலிருந்த அநேக நீர்நிலைகளையும், தாமரைத்தடாகங்களையும், பலவித விருக்ஷங்களையும் காட்டினான். இவ்வாறு, எல்லாவற்றையும் அவளுக்கு அப்பாதகன் காண்பித்து அவளுடைய மனத்தை வசப்படுத்தும்பொருட்டுச் சொல்லலுற்றான்: "சீதாய், கிழவர்களையும் குழந்தைகளையும் ஒழித்து முப்பத்திரண்டுகோடி கோரமான அரக்கர்களுக்கு நான் தலைவன். எனக்கு ஒருகாரியம் செய்வதற்கு ஆயிரம் அரக்கர்கள் முன்வருவார்கள். இத்தன்மைத்தாகிய எனது அதிகாரமும் எனது உயிரும் உன்னுடைய வாயின. என்னுயிரினும் நீ

இராவணன் சீதைக்குத் தன் மாளிகை காட்டடல்.

இராவணன் சீதையைத்தனக்கு மனைவியாகும்படி வேண்டல்.

எனக்கு அரியை. இங்குள்ள உத்தமிகளாகிய என் மனைவியர்கள் எல்லாருக்கும் நீ தலைவியாகு. காதலி, நீ என் மனைவியாகு. இது உனக்கு அழகு. வேறுவித யோசனை வேண்டாம். நான் சொல்லும் பேச்சைக்கேள். நான் உன்னாசையால் தவிக்கிறேன். என்மீது கருணைவைத்து என்னைச் சேர். நூறுயோசனை விஸ்தாரமுள்ள இந்த இலங்கை நான்குபக்கங்களிலும் கடலால் சூழப்பட்டிருக்கிறது; இந்திரனோடுகூடிய தேவர்களாலும் எதிர்க்க முடியாதது. தேவர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், பன்னகர்கள் முதலியவர்களுள் எனக்கொப்பான பராக்கிரமமுள்ளவன் ஒருவனுமில்லை. தனது இராச்சியத்தை இழந்து தீனனாகித் தவசு செய்துகொண்டிருக்கும் அற்ப ஆயுளுடைய மானிடனாகிய இராமனால் உனக்கென்னபயன்? ஆகையால், சீதாய், என்னிடத்து உன் மனத்தை வை. நான் உனக்கேற்ற நாயகன். மெல்லியலே, இளமை நிலையாது. ஆதலால் என்னை அணைவாய். சுந்தரி, இனி இராமனைக்காண எண்ணாதே. அவன் இங்குவரவேண்டும் என்று எண்ணவும் வல்லனல்லன். வெகு வேகமாக ஆகாசத்தில் சஞ்சரிக்கும் காற்றைக் கயிறுகொண்டு கட்ட முடியுமா? கொழுந்துவிட்டெரியும் தீயைக் கையால் பிடிக்க முடியுமா? என்னால் காக்கப்படும் உன்னைத் தன் வலிமையால் எடுத்துப் போகிறவன் மூவுலகத்திலும் இல்லை. இலங்கையிலிருந்துகொண்டு இந்தப்பெரிய இராச்சியத்தை நீயே பரிபாலனம் பண்ணு. நானும், என்னைப்போன்றவர்களும், தேவர்களும், சராசரமும் எல்லாரும் உன்னடிமைகளே. நீ பட்டாபிஷேகம்செய்துகொண்டு என்னைச் சந்தோஷப்படுத்து. நீ முன் செய்திருந்த பாவங்கள் எல்லாம் உனது வனவாசத்துடன் தொலைந்துவிட்டன. இனி நீ செய்துள்ள புண்ணியத்தின் பலனை இவ்விடத்தில் அனு

இராவணன் சீதைக்குத் தனது இராச்சியத்தைக் கொடுப்பதாகச் சொல்லல்.

பவி. இங்கே திவ்விய பரிமளமுள்ள நல்ல மாலைகளும் உயர்ந்த ஆபரணங்களும் உள்ளன. அவைகளை நீ என்னுடன் அனுபவி. மெல்லிடையாளே, என் தமையனான குபேரனுடைய புஷ்பகம் என்ற சூரியனுக் கொப்பான விமானத்தை நான் பலத்தால் அவனை வென்று அவனிடமிருந்து பறித்துக்கொண்டேன். விசாலமாயும் வெகு அழகாயுமிருக்கும் அவ்விமானத்தில் என்னுடன்கூட இருந்துகொண்டு விளையாடுவாயாக. சந்திரனுக் கொப்பாகவும் வெகு பரிசுத்தமாகவும் அழகாகவும் விளங்கும் உனது முகம், ஓ மாதே, இப்பொழுது நீ சோகத்தால் வருந்துகிறபடியால் வாடியிருக்கிறது." இவ்வாறு இராவணன் சொல்ல அவ்வுத்தமி சந்திரனுக் கொப்பான தனது முகத்தைத் தனது முன்றானையால் மூடிக்கொண்டு கண்ணீர் பெருக்கினாள். அவ்வாறு கவலையால் அழகு குன்றி, அலமந்து, ஆலோசனையில் ஆழ்ந்திருக்கும் சீதையை இராவணன் பார்த்து "ஓ வைதேகி, ஒருவர் செய்யவேண்டிய கடமைக்கு இடையூறாகிய நாணத்தைஒழித்துவிடு. நம்மிருவர்களுடைய சேர்க்கையும் தெய்வசங்கற்பத்தாலானது. இதோ, உனது அழகான இருதாள்களையும் என் தலையால் வணங்குகிறேன். சீக்கிரமாக என்மேல் கருணைவை. நான் உனது அடிமை. நான் காமத்தால் வருந்திச் சொன்ன இச்சொற்கள் பயனடையாது போகற்க. இராவணன் இதுவரையில் ஒருபெண்ணையும் தலை வணங்கினதில்லை" என்று கூறினான். இவ்வாறு கூறித் தசமுகன் மாளுங்காலம் கிட்டிவிட்டபடியால் ஜனகமகாராஜன் புத்திரியாகிய மைதிலியைத் தனக்குரியவளாகவே எண்ணினான்.

இராவணன் சீதை காலில் விழல்.

## ஐம்பத்தாறுஞ் சருக்கம்.

*சீதை இராவணனை நிந்தித்தல்.*

---

இராவணன் சீதையைப்பார்த்து இவ்வாறு சொல்ல, அவள் துயரத்தால் தபித்துக்கொண்டிருந்தபோதிலும் அச்சமின்றி அவனுக்கும் *தனக்கும் இடையில் ஒரு துரும்பைப்போட்டு அவனுக்கு மறுமொழி கூறுவாளாயினாள்:

சீதை தன் நாயகர் இராமரென்று கூறல்.

"தருமத்தின் வேலிபோன்றவரும் சத்தியசந்தரும் உலகத்தார் எல்லாராலும் அறியப்பட்டவருமாகிய தசரதர் என்றமன்னவர் ஒருவரிருந்தார். அவர் மைந்தர் இராகவர். தருமாத்துமாவாகிய இராகவருடைய பெயர் இம்மூவுலகங்களிலேயும் பரவி யிருக்கிறது. அவர் நீண்ட கைகளையுடையவர்; விசாலமானகண்களையுடையவர்; தெய்வம்போல்பவர். அவர்தான் என்கணவர். அவர் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவர்; சிங்கத்தின்தோள்போன்ற தோள்களையுடையவர்; மிக்க புகழை உடையவர். அவரே தமது தம்பியாகிய லக்ஷ்மணருடன் உனது உயிரைவாங்கப்போகிறார். அவர்முன்பாக என்னை நீ எடுத்திருப்பாயானால் ஜனஸ்தானத்தில் நிகழ்ந்தபோரில்கரன் விழுந்ததுபோல நீயும் விழுந்துமடிந்திருப்பாய். நீ வெகுவாகப்புகழ்ந்த பயங்கரமான அரக்கர்கள் எல்லாரும் கருடன்முன் எதிர்ப்பட்ட பாம்புகள்போல் இராகவரைக் கண்டமாத்திரத்தில் நாசமடைவார்கள். கங்கைநதியின் அலைகள் அதன் கரையை அறுப்

---

* பதிவிரதைகள் பரபுருஷனிடம் தைரியமாய்ப் பேசக்கூடாத விஷயங்களைப் பேசும்பொழுது இப்படிச் செய்யவேண்டுமென்பது விதி.

இராவணனுக்கு முடிவு கிட்டிவிட்டதென்றல்.

பதுபோல அவர் வில்நாணிலிருந்து விடப்படும் பொன்புனைந்தபாணங்கள் உனது சரீரத்தை யறுத்து வீழ்த்தும். அடா இராவண, அசுரர்களாலும் தேவர்களாலும் வெல்லமுடியாதவனாயினும் இராமருடைய பகையைச் சம்பாதித்துக்கொண்டமையின் நீ உய்யப்போகிறதில்லை. எஞ்சியுள்ள உன்னுடைய வாழ்நாளை இராமர் அழித்துவிடுவர். யாககம்பத்தில் கட்டப்பட்ட பசுவின் உயிர்போல உன்னுடைய உயிர்மீளாது. கோபத்தால் கொழுந்துவிட்டெரியும் கண்களால் இராமர் உன்னைப் பார்ப்பாராயின் நீ மன்மதனைப்போல உடனே எரிந்து நீறுவாய். சந்திரனை ஆகாயத்திலிருந்து தரையில் விழச்செய்யவும் அழிக்கவும் சமுத்திரத்தை வற்றக்குடிக்கவும் வல்ல இராமர் நிச்சயமாய்ச் சீதையை இங்கிருந்து விடுவிப்பார். உனது ஆயுள் மாய்ந்துவிட்டது. உனது லக்ஷ்மி உன்னைவிட்டு நீங்கி

இலங்கைக்கு அழிவுவந்ததென்றல்.

விட்டாள்; உனது பலம் போய்விட்டது; உனது புலன்களும் குன்றிவிட்டன. உன் நிமித்தம் இலங்கை கைம்மைத் தன்மை அடையப்போகின்றது. என்னைப் பலாத்காரமாக எடுத்தோடிவந்த உனக்கு இந்தத் தீச்செயல் ஒருபோதும் நலந்தருவதாகாது. சிறந்த கீர்த்தியுடைய என்கணவர் தம் தம்பியோடு சிறிதும் பயமின்றித் தமது தோள்வலியினாலே மனிதசஞ்சாரமற்ற தண்டகாரண்யத்தில் வசிக்கிறார். அவர் சரமாரிபொழிந்து உனது செருக்கையும் ஆற்றலையும் வீரத்தையும் வரம்பு கடந்து நடக்கும் சுபாவத்தையும் அழித்துவிடுவார். காலனால் உயிர்களுக்குக் கேடுவருவதை அறிந்துகொள்ளக்கூடும்; அப்போது காலனுடைய ஆஞ்ஞைக்குட்பட்டு மனிதர்கள் தாம்செய்யும் காரியம் இன்னதென்று அறியமாட்டார்கள். என்னை எடுத்துவந்தமையால் உனக்கு முடிவுகாலம் வந்துவிட்டது. அடா ராக்ஷசப்பதரே; நீ நாசமடைவதன்றி,

மற்ற அரக்கர்களும் உன் அந்தப்புரத்தில் வாழ்பவர்களும் நாசமடையப்போகிறார்கள். அந்தணர்கள் சூழ்ந்து யாகத்திரவியங்கள் நிறைந்து விளங்கும் யாகவேதிகையைச் சண்டாளன் தீண்ட முடியாதவாறுபோல எப்பொழுதும் தருமத்தையே கைக்கொண்ட இராமருடைய தருமபத்தினியும் பதிவிரதையுமான என்னை அரக்கர்களுள் பதரும் பாவியுமான நீ தொடமுடியாது. தாமரைப் புஷ்பங்கள் நிரம்பிய தாமரையோடையில் எப்பொழுதும் அரச அன்னத்துடன் விளையாடின பெண்ணன்னம் கோரைப்புல் நிரம்பிய சேற்றில் நீர்க்காக்கையைக் கண்ணெடுத்துப் பார்க்குமா? உணர்ச்சியற்ற இந்தச் சரீரத்தை நீ கட்டினாலென்! அழித்தாலென்! அடா இராவணா, இந்தச் சரீரத்தையாவது உயிரையாவது காப்பாற்ற முயலேன். இவ்வுலகத்தில் உள்ளவர்கள் என்னை அபவாதம் சொல்வதற்கு இடம் கொடுக்கமாட்டேன்." சீதை இந்தக் கொடிய வாசகங்களைத் தன் கோபத்தினால் சொல்லிவிட்டு ஒன்றும் பேசாதிருந்தாள்.

சீதை தான் உயிரை விடுவேன் என்றல்.

மயிர்க்கூச் செறியும்படியான இவ் வன்மொழியை இராவணன்கேட்டுச் சீதையைநோக்கி "அடியே சீதே, நான் சொல்லுவதைக் கேள். இன்னும் பன்னிரண்டு மாதங்களுக்குள் நீ என் கருத்துக்கிசையாவிடில் என் சமையற்காரர்கள் என் காலையுணவுக்காக உன்னைத் துண்டம்செய்வார்கள்" என்று அச்சந்தரும் இச்சொற்களைச் சொன்னான். சத்துருக்களை அழப்பண்ணும் இராவணன் இவ்விதமாக வெகு கோபங்கொண்டு சொல்லி அங்கிருந்த ராக்ஷசிகளைப்பார்த்து "பயங்கரமான தோற்றமுள்ள ராக்ஷசிகளே, மாம்சத்தையும் இரத்தத்தையும் உணவாகக் கொண்டவர்களே, நீங்கள் உடனே தானே இவள் செருக்கை அடக்குங்கள்" என்று கூறினான். அவன் அப்படிச் சொல்லலும் அக்கொடிய அரக்கியர்கள் கூப்பிய கையுடன்

இராவணன் சீதையை ராக்ஷசிகளிடம் ஒப்புவித்தல்.

சீதையை வந்து சூழ்ந்துகொண்டார்கள். வெகு பயங்கரமான முகத்தையுடைய இராவணன் இரண்டடி எடுத்துவைத்துப் பூமி பிளந்துவிடுவதுபோல நடந்து அவ்விராக்ஷசிகளைப்பார்த்து "சீதையை அசோகவனத்திற்குக் கொண்டுபோங்கள். அங்கே அவளைச்சூழ்ந்து பாதுகாத்துக்கொண்டு காட்டுயானையை வசமாக்குவதுபோல ஒருகால் வெருட்டியும் ஒருகால் இன்சொற் சொல்லியும் அவளை மெதுவாக வசமாக்குங்கள்" என்றான். இவ்விதமாகக் கட்டளையிடப்பட்ட ராக்ஷசிகள் சீதையை அழைத்துக்கொண்டு, விரும்பிய பொருள்களைக் கொடுக்கும் விருக்ஷங்கள் செறிந்து, பல்வகை மலர்களும் கனிகளும் நிறைந்து, எக்காலத்திலும் தேன் மலிந்து, பறவைகள் நெருங்கி விளங்கிக்கொண்டிருக்கும் அசோகவனம் சென்றார்கள். ஜனக மகாராஜன் புத்திரியாகிய சீதை சோகத்தில் மூழ்கினவளாய், புலிகள் நடுவில் மான்போல, ராக்ஷசிகள் நடுவில் அகப்பட்டுக்கொண்டு, வலையில்பட்ட மான்போலத் துக்கத்தால் மீதூரப்பட்டுச் சௌக்கியத்தை இழந்து, ராக்ஷசிகளுடைய கொடிய பார்வைகளைக்கண்டு பயந்து, தூக்கமின்றி, தனது காதல் நாயகரையும் லக்ஷ்மணரையும் நினைத்துக்கொண்டு, பயத்தாலும் சோகத்தாலும் மூர்ச்சையடைந்தாள்.

*சீதையை அசோகவனத்தில் வைத்தல்.*

---

## ஐம்பத்தேழாஞ் சருக்கம்.

*இராமர் மாரீசனைக் கொன்றுவிட்டுத் திரும்பி வருதல்.*

---

மானுருவங்கொண்டு வந்தவனாகிய வேண்டிய உருவமெடுத்துத்திரியும் ராக்ஷச மாரீசனைக்கொன்றுவிட்டு இராமர் விரைந்து திரும்பிவந்தார். சீதையைப் பார்க்கவேண்டுமென்று அதிவேகமாக அவர் சென்றுகொண்டிருக்கையில், அவருக்குப் பின்புறத்தில் வெகு கோரமாக நரிகள்

ஊளையிட்டன. மயிர்க்கூச் செறியும்படியான அந்தப் பயங்கரமான சத்தத்தை இராமர் கேட்டுத் திடுக்கிட்டுப் பயந்தார்.—"ஐயோ! இப்படி நரிகள் ஊளையிடுவது நல்ல சகுனமன்று! அரக்கர்களுக் குணவாகாமல் சீதை க்ஷேமமாக விருப்பாளாக. மாவுருவங்கொண்ட மாரீசன் என் குரலைத் தெரிந்துகொண்டு அதுமாதிரிக் கதறினதை லக்ஷ்மணன் கேட்டானேயானால் அவன் மைதிலியைத் தனியே விட்டுவிட்டு அவளால் ஏவப்பட்டு என்னை நோக்கிச் சீக்கிரம் வருவான். அரக்கர்கள் எல்லாரும் சீதையைக் கொன்றுவிட நிச்சயமாக விரும்புவார்கள். மாரீசன் பொன்மானுருவங்கொண்டு என்னை எனது ஆச்சிரமத்திலிருந்து வெகுதூரம் இழுத்துவந்து என் பாணங்கள் தைத்த மாத்திரத்தில் அரக்க ரூபங்கொண்டு "ஆ லக்ஷ்மணா, நான் கொல்லப்பட்டேன்" என்று கதறினான். நான் இல்லாமலிருக்கும்பொழுது சீதா லக்ஷ்மணர்களுக்கு க்ஷேமமுண்டாகுமா? ஜனஸ்தானம் நிமித்தமாக எனக்கு அரக்கர்களுடைய பகை ஏற்பட்டது. பயங்கரமான அபசகுனங்கள்பல எனக்குக்காணுகின்றன" என்று இவ்வாறு நரிகளுடைய கூவிளியைக்கேட்டு யோசித்துக் கொண்டு இராமர் தமது ஆச்சிரமத்துக்கு விரைந்துதிரும்பினார். அவர் மானுருவங்கொண்டு மாரீசன் தம்மை நெடுந்தூரம் இழுத்துச் சென்றதற்காக மனங்குலைந்து ஜனஸ்தானத்திற்கு மீண்டார். அவ்வாறு பரிதாபமடைந்த மகாத்துமாவாகிய இராமரைக்கிட்டி மிருகங்களும் பறவைகளும் இடப்புறத்தில் நின்று பயங்கரமாகச் சப்தித்தன.

*இராமருக்கு அபசகுனம் தோன்றல்.*

மகா பயங்கரமான அபசகுனங்கள் நிகழாநிற்க இராமர் ஒளிகுன்றிய முகத்துடன் லக்ஷ்மணர் வருவதைக்கண்டார். வியசனத்தோடு லக்ஷ்மணர் இராமரை அடைந்து அவருடைய வியசனத்தையும் துக்கத்தையும் பார்த்துத்

*இராமர் லக்ஷ்மணரைக் காணல்.*

தாம் மேலும் வியசனமடைந்தார். அரக்கர்கள் வாழும் காட்டில் சீதையைத் தனியாக விட்டுவந்ததற்காக இராமர் லக்ஷ்மணரைக் குறை கூறினர். இராமர் மிகுந்த துக்கத்துடன் லக்ஷ்மணருடைய இடக்கையைப் பிடித்துக்கொண்டு மிக மெதுவாக "ஐயோ! லக்ஷ்மணா, நீ செய்தது பெருங்குற்றம். சீதையைத் தனியாக விட்டுவிட்டு நீ வந்தாயே! அவள் க்ஷேமமாக இருக்கிறளா? அவளை அரக்கர்கள் கொன்றிருப்பார்கள் அல்லது புசித்திருப்பார்கள் என்பதில் எனக்கு ஐயமில்லை. வெகுவித அபசகுனங்கள் காணப்படுகின்றன. ஓ லக்ஷ்மணா, ஜனகருடைய புத்திரியாகிய சீதை பிழைத்து உயிருடனிருக்க நாம் காண்போமா? நரிகளும் மற்றைய மிருகங்களும் வெகு பயங்கரமாகக் கத்துகின்றன; பறவைகளெல்லாம் சூரியனிருக்கும் திசையைநோக்கிக் கூவுகின்றன; பேராற்றலுடையானே, அவ்விராஜகுமாரி க்ஷேமமாக இருக்கிருள் என்று நான் எண்ணவில்லை. இவ்வரக்கன் மானுருவங்கொண்டு என்னை வெகுதூரம் இழுத்துவந்து இறுதியில் என்னல் வெகு சிரமப்பட்டுக் கொல்லப்பட்டான். அவன் மாண்டு விழும்பொழுது தனது அரக்க ரூபத்தை அடைந்தான். என் மனம் வறிதாகிச் சந்தோஷமின்றி யிருக்கின்றது. எனது இடக்கண் துடிக்கின்றது. ஓ லக்ஷ்மணா, சீதை நமது ஆச்சிரமத்தி லில்லை; இது நிச்சயம். அவள் இறந்துவிட்டாள், அல்லது பிறரால் அபகரிக்கப்பட்டு விட்டாள், அல்லது வழியில் திரிகின்றுள்" என்று சொன்னர்.

இராமர் சீதையை நினைத்துப் புலம்பல்.

---

## ஐம்பத்தெட்டாஞ் சருக்கம்.

இராமர் சீதை எங்கேயென்று லக்ஷ்மணரை விசாரித்தல்.

---

லக்ஷ்மணர் முகம்வாடிச் சந்தோஷமின்றிச் சீதை இல்லாமல் வந்ததைப் பார்த்துத் தருமாத்துமாவான

இராமர் "ஓ லக்ஷ்மண, தண்டகாரணியத்துக்கு என்னைத் தொடர்ந்து வந்த அந்தச் சீதை எங்கே? அவளை விட்டு விட்டு நீ எங்கு வந்தாய்? இராச்சியத்தை இழந்து துன்ப மடைந்து தண்டகாரணியத்தில் அலைந்து திரியும் எனக்கு என் துக்கத்தின்கட் டுணையாயினாள் எங்கே? வீரா, அவள் இல்லாமல் நான் ஒருநொடிப்பொழுதும் உயிர் வாழேன். என் உயிர்த்துணையாகிய அமரமாதருக் கொப்பான அந்தச் சீதை எங்கே? உருக்கின தங்கத்துக் கொப்பான நிறமுடைய சீதையின்றி நான் இவ்வுலகத்தின் அரசல்ல தேவலோகத்தின் அரசும் வேண்டேன். என்னுயிரினு மரிய சீதை பிழைத்திருக்கின்றாளா? ஐயோ! நான் இக் காட்டில் வாழ்ந்தது பயனற்றுப்போகுமா? ஓ லக்ஷ்மண, சீதையினிமித்தம் நான் உயிர்மாண்டு நீ அயோத்திக்குச் சென்றால் கைகேயி தன் கோரிக்கை நிறைவேறிச் சந்தோஷமடைவாளே! கௌசலை, தனது குமாரனாகிய நான் மாண்டுவிடத் துறவிவேஷம்பூண்டு, தனது குமாரனுக்கு இராச்சியத்தை முடிவுபெறப் பெற்றுக்கொண்ட கைகேயி யினிடம் தாழ்ந்து நிற்கவேண்டுமே! சீதை உயிருடனிருப் பாளாயின் நான் என் ஆச்சிரமத்துக்கு வருவேன். ஓ லக்ஷ் மண, அவ்வுத்தமி இறந்திருந்தால் நான் உயிரை விட்டு விடுவேன். நான் ஆச்சிரமத்தில் புகும்பொழுது புன்னகை யுடன் சீதை என்னிடம் வந்து பேசாவிடில் நான் மாண்டு விடுவேன். ஓ லக்ஷ்மண, சீதை பிழைத்திருக்கிறாளா இல் லையா? நீ சொல். உன்னுடைய அஜாக்கிரதையினால் அவளை யாராவது அரக்கர்கள் புசித்துவிட்டார்களா? மிகச் சிறியவளும் மெல்லியவளும் ஒருநாளும் துக்கமென்பதை அறியாதவளுமாகிய சீதை, யான் பிரிந்தகாரணத்தால் அழுகின்றாள் என்பது நிச்சயம். அந்தத் துஷ்டனான அரக்கன் பெருங்குரலால் "லக்ஷ்மண" என்று கூப்பிட்ட பொழுது நீயும் பயந்தனையோ? என்குரல் போன்ற அக்

இராமர் சீதையை நினைத்துப் புலம்பல்.

குரலைக்கேட்டுப் பயந்த சீதையால் ஏவப்பட்டு நீ என்னைப் பார்க்கச் சீக்கிரமாக வந்திருக்கிறாய் என்று எண்ணுகிறேன். சீதையைத் தனியே காட்டில் விட்டுவிட்டு வந்ததில் நீ எவ்வகையாலும் புத்தியீனமாய் நடந்துவிட்டாய். இதனால் கொடிய அரக்கர்களுக்குக் கெடுதல்செய்ய இடங்கொடுத்தாய். கரனை நாம் கொன்றுவிட்டமையால் மாம்சத்தைப் புசிக்கும் அரக்கர்கள் துக்கமுள்ளவர்களா யிருக்கிறார்கள். அக்கொடியவர்கள் இப்போது சந்தேகமின்றிச் சீதையைக் கொன்றிருப்பார்கள். ஆ! தெவ்வரை அடக்குந் திறலுடையானே, நான் விசனத்தில் மூழ்கிவிட்டேன். இப்பொழுது என்ன பண்ணப்போகிறேன். ஐயோ! இவ்வித அவஸ்தைகள் நான் படவேண்டுமென்பது என் விதி போலும்!" என்று இவ்வண்ணம் உத்தமியான சீதையைப் பற்றிப் புலம்பிக்கொண்டே அதி வேகமாக லக்ஷ்மணருடன் ஜனஸ்தானத்துக்கு வந்து சேர்ந்தார். வாடின முகத்தையுடைய தமது தம்பியைக் கோபித்துக்கொண்டு, பசியாலும் தாகத்தாலும் வருந்தி, ஊக்கம் குன்றி, முகம் வெளுத்து, பெருமூச்சு விட்டுக்கொண்டு, இராமர் ஆச்சிரமத்தினுட் புகுந்து, அது வெறிதா யிருக்கக்கண்டார். அவ்வீரர் ஆச்சிரமத்துள் நுழைந்து சீதை விளையாடும் இடங்களுக்குச் சென்று "இது சீதை விளையாடு மிடமல்லவோ" என்று சொல்லி மயிர்க்கூச்செறிந்து துன்பத்தில் மூழ்கினார்.

---

## ஐம்பத்தொன்பதாஞ் சருக்கம்.

*சீதையைத் தனியாக விட்டுவந்த காரணத்தை லக்ஷ்மணர் இராமரிடம் கூறல்.*

---

பின்பு ஆச்சிரமத்தை விட்டு வெளியே வந்து சிறிது நேரம் பொறுத்து இராகவர் துக்கத்தால் சுமித்திரை

குமாரனை நோக்கி "ஓ லக்ஷ்மணா, உன்னை நம்பி மைதிலியைக் காட்டில்விட்டிட்டு நான் போயிருக்க நீ அவளைத் தனியே விட்டுச் சென்றதென்ன? சீதையை விட்டிட்டு நீ மாத்திரம் வருவதைக் கண்டவுடன் என்மனம் பெருந்தவறு விளைந்ததென்று கருதி உண்மையாக வருத்தமடைந்தது. சீதையின்றி நீமாத்திரம் வருவதாகத் தூரத்தில் கண்டவுடனே எனது இடக்கண்ணும் இடதுதோளும் இருதயமும் துடித்தன" என்றார். இவ்வாறு இராமர் கேட்க, நல்ல லக்ஷணங்கள் பொருந்திய லக்ஷ்மணர் அதிக துக்கமடைந்தவராய், துக்கப்படும் இராமரைப் பார்த்து "நான் என்னிஷ்டப்படி சீதையைத் தனியாக விட்டிட்டு வரவில்லை. அவள் என்னை வெகு கடோரமாகக் கடிந்துபேசி ஏவினதால் நான் தங்களிடம் வந்தேன். "ஓ லக்ஷ்மணா, என்னைக்காப்பாற்று" என்று தாங்கள் கூவினாற்போன்ற சத்தம் அவள் காதில் விழுந்தது. அந்தப் பரிதாபமான சத்தத்தை மைதிலி கேட்டுத் தங்கண்மாட்டு வைத்த அன்பால் அழுது, பயத்தால் மீதூரப்பட்டு, என்னைப் பார்த்து "போ போ" என்று கட்டளையிட்டாள். இப்படியாக அவள் என்னைப் போ, போ, என்று பலதரம் ஏவ நான் அவளை நோக்கி, அவளை ஆற்றும்வண்ணம் "இராமர் மனத்தில் பயத்தை உண்டுபண்ணத்தக்க அரக்கனை நான் பார்க்கவில்லை. நீர் அழவேண்டாம். இந்தச் சத்தம் அவருடைய குரலன்று; அதுபோல வேறொருவரிட்டது. தேவர்களையும் காப்பாற்றத்தக்க வல்லமையுள்ள இராமர் பழிப்புக்கிடமான இழிந்த "என்னைக் காப்பாற்று" என்னுஞ் சொல்லைச் சொல்லுவாரா? யாரோ ஒருவன் ஏதோ ஒருகாரியத்தின் பொருட்டாக, எனது தமையனாருடைய குரலால் "லக்ஷ்மணா, என்னைக் காப்பாற்று, காப்பாற்று" என்று சொல்லி

இராமர் லக்ஷ்மணரைச் சீதையை ஏன் விட்டு வந்தாய் என்று வினவல்.

லக்ஷ்மணர் நான் சீதை ஏவலினால் வந்தேன் எனல்.

லக்ஷ்மணர் சீதையைத் தேற்றியபடி.

யிருக்கிறான். சுந்தரீ "என்னைக் காப்பாற்று" என்ற இந்தச் சத்தம் பயமடைந்த ராக்ஷசன் ஒருவனால் இடப்பட்டிருக்கவேண்டும். ஏழைப்பெண்போல நீர் நடத்தல் கூடாது. துயரத்தை விட்டுவிடும்; சிறிதும் கலங்கவேண்டாம். இம்மூவுலகத்திலும் இராமரைப் போர்முகத்தில் வெல்லத்தகுந்தவர் ஒருவரும் இல்லை; இனிப் பிறக்கப்போகிறதுமில்லை. இந்திரனோடு கூடிய தேவர்களாலும் இராமர் அபஜயமடைவதில்லை" என்றேன். இப்படி நான் சொல்லவும் சீதை புத்திமயங்கிக் கண்ணீர் விட்டுக்கொண்டு என்னைநோக்கி "நீ உன் தமையனார் இறந்துபோக என்னை அடையலாம் என்ற கெட்ட எண்ணம் கொண்டிருக்கிறாய். அவர் துணைக்காகப் பெரும் கூச்சலிடவும் நீ அவரிடம் போகாமையால் நீ பரதனோடு சங்கேதம் பண்ணிக்கொண்டு இராமரைத் தொடர்ந்துவந்திருக்கிறாய்.

சீதை லக்ஷ்மணரைக் கூறிய கடுஞ்சொல்.

நீ மாறுவேஷம் பூண்ட சத்துரு. எனக்காக இராமரைப் பின்றொடர்ந்து அவருடைய குறைகளைத் தெரிந்துகொள்ளுகிறாய். ஆகையாற்றான் நீ அவருக்கு உதவிசெய்யப்போகின்றாயில்லை" என்று இக்கொடிய மொழிகளைச் சொன்னாள். இவ்வாறு சீதை சொல்ல நான் கோபத்தால் கண்கள் சிவந்து உதடுகள் துடிக்க ஆச்சிரமத்தை விட்டு ஓடிவந்தேன்" என்றார். இவ்வாறு லக்ஷ்மணர் சொல்ல, இராமர் அதிக துக்கத்தால் அறிவுமயங்கி அவ்ரைப்பார்த்து "தம்பி, நீ அவளை விட்டிட்டு வந்தது குற்றம். அரக்கர்களால் என்னை வெல்லமுடியாது என்பதை நன்றாக அறிந்திருந்தும் சீதை கோபமாகச் சொன்னதைக்கேட்டு நீ ஆச்சிரமத்தைவிட்டுப் புறப்பட்டு வந்தாய். கோபத்தினால் அவள் சொன்னதைக் கேட்டு அவளைத் தனியாக விட்டு வந்ததைப்பற்றி உன்னிடத்தில் எனக்குத் திருப்தி இல்லை.

சீதையின் சொல்லால் ஏவப்பட்டுச் சினங் கொண்டு நானிட்ட கட்டளையைக் காப் பாற்றாதது எவ்வகையானுங் குற்றம். மான் உருவங்கொண்டு என்னை ஆச்சிர மத்திலிருந்து வெகுதூரம் இழுத்துச்சென்ற அரக் கன் இப்பொழுது என் அம்பால் அடியுண்டு மாண்டு கிடக் கிருன். நான் என் வில்லைச் சிறிது வளைத்து அதில் அம் பைப் பூட்டி அவனை எய்தபொழுது அவன் மான் உருவம் நீங்கிக் கேயூரமணிந்த அரக்கனுகிப் பரிதாபமாகக் கதறி ஞன். என் பாணம் அவன்மேல் தைத்ததும் அவன் வெகுதூரம் கேட்கும்படியாக என் குரலைக்கொண்டு அவ் வாறு கொடிய துன்பந்தரும் சொற்களைச் சொல்லிக் கூப்பிட்டான். அவற்றை நீ கேட்டுச் சீதையைவிட்டு என் னைத் தேடிவந்தாய்" என்று சொன்னர்.

இராமர் லக்ஷ்மணர் செய்தது குற்றமெனல்.

## அறுபதாஞ் சருக்கம்.

இராமர் சீதையைத் தேடித் துக்கப்படுதல்.

இராமர் ஆச்சிரமத்தை நோக்கிச் செல்லும்போது அவருக்கு இடக்கண் துடித்தது: கால் தடுமாறிற்று; தேகம் முழுதும் நடுங்கிற்று. இவ்வாறு அடிக்கடி உண் டாகும் அபசகுனங்களைப் பார்த்து அவர் லக்ஷ்மணரை நோக்கிச் "சீதை க்ஷேமமா" என்று பன் முறை கேட்டார். இராமர் சீதையைப் பார்க்க வேண்டுமென்று வெகு வேகமாகச் சென்று ஆச்சிரமம் வெறிதாக இருக்கக் கண்டு மனம் கலங்கினர். அவர் கைகால்களை உதறிக் கொண்டு வேகமாய்ப் பர்ணசாலையை முழுதும் சுற்றிப் பார்த்தார். பர்ணசாலை சீதை இன்றிப் பனிக்காலத்தில் தாமரைப் பூக்களில்லாத தடாகம்போல அழகற்றிருந்தது.

இராமர் ஆச்சிரமத்தில் சீதையைக் காணுது வருந்தல்.

தமது ஆச்சிரமம் வெறுமையாயும், மரங்கள் அழுவன போன்றும், புஷ்பங்கள் வாடியும், மிருகங்களும் பறவைகளும் வாட்டமுற்றும், அழகு நீங்கியும், வனதேவதைகள் பிரிந்தும், மான்றோல்களும் தருப்பைகளும் சிதறுண்டும், முனிவர் வீற்றிருக்கு மாசனங்கள் தலைகீழாகத் தள்ளப்பட்டும் எல்லாம் அலங்கோலமாக இருக்கக் கண்டு இராமர் அடிக்கடி "சீதையை யாராவது எடுத்துக்கொண்டு போய்விட்டார்களா? அல்லது அவள் இறந்துவிட்டாளா? அல்லது அவளை யாராவது புசித்துவிட்டார்களா? அல்லது அவள் பயந்து எங்கேயாவது ஒளித்துவிட்டாளா? அல்லது காட்டுக்குச் சென்றிருக்கிறாளா? அல்லது புஷ்பங்களும் பழங்களும் பறிக்கப் போயிருக்கிறாளா? அல்லது தண்ணீர் கொண்டுவரக் குளத்துக்குப் போனாளா? அல்லது ஆற்றுக்குச் சென்றுவிட்டாளா" என்று புலம்பினார். பலவிடங்களிலும் நன்றாகத் தேடிப்பார்த்தும் இராமர் சீதையைக் காணவில்லை. அவர் துக்கத்தால் கண்கள் சிவந்து வெறிபிடித்தவர்போலக் காணப்பட்டார். ஒருமரத்தி னருகிலிருந்து மற்றொரு மரத்துக்கோடியும் ஒருமலையிலிருந்து மற்றொரு மலைக்குச் சென்றும் ஒரு நதியிலிருந்து மற்றொரு நதிக்குப்போயும் இராமர் புலம்பிக்கொண்டு துக்கசாகரத்தில் மூழ்கினார். "ஓ கடம்பே, கடம்ப வனத்தில் ஆசையுள்ள சீதையை நீ கண்டதுண்டா? கண்டதுண்டாயின் தயைகூர்ந்து எனக்குச் சொல்லு. ஓ வில்வமரமே, இளந்தளிருக்கொப்பான மஞ்சள் பட்டுடுத்தவளும் வில்வப் பழத்திற்கொப்பான தனங்களை யுடையவளுமான சீதையை நீ கண்டதுண்டா? சொல்லு. ஓ மருதமரமே, உன்னிடம் அவள் அதிக அன்புள்ளவ ளாயிற்றே! மெல்லிய இயலையுடைய ஜானகி உயிருடனிருக்கிறாளா? சொல்லு. ககுபமே, ககுபத்திற்கு

இராமர் சீதையைக் காணாது புலம்பல்.

மரங்களை விநவல்.

ஒப்பான துடையையுடைய சீதையை உனக்கு நன்ருகத் தெரியும். இந்தக் காட்டுக்கு அரசன்போலத் துளிர் களும், புஷ்பங்களும் நிறைந்து, கொடிகளால் மூடப்பட்டு வண்டுகள் பாட விளங்குகின்றது இந்தத் திலகம். இதற் குச் சீதையிருக்குமிடம் அவசியம் தெரிந்திருக்கவேண் டும். ஓ அசோகமே, நீ சோகத்தைப்போக்குபவனுயிற்றே? எனது பிராணநாயகியை எனக்குக் காட்டி எனது சோக த்தை நீக்கி உன்னுடைய பேரை மெய்ப்படுத்து. ஓ பனை மரமே, உனக்குக் கருணை உண்டாயின் பனம்பழத்திற் கொப்பான கொங்கைகளையுடைய என் மனைவியை நீ பார்த்த துண்டா? சொல். ஓ நாவன்மரமே, நாவற்பழத் துக் கொப்பான பளபளப்பான மேனியையுடைய என் மனைவியை நீ கண்டதுண்டாயின் பயமின்றிச் சொல். ஓ கோங்கமே, இன்று அநேக புஷ்பங்களைப் பூத்து வெகு அழகாக விளங்குகின்றனை; கோங்கமலரில் ஆசையுள்ள என் மனைவியை நீ கண்டதுண்டோ? சொல்" என்று இவ் விதமாக மா, வேம்பு, ஆச்சா, பலா, மருதோன்றி, தே வம், மாதுளை, மல்லிகை, மாதவி, சம்பகம், தாழை முத லிய ஒவ்வொரு மரத்தையும் கிட்டி அவைகளை யெல்லாம் சீதையைப்பற்றி விசாரித்துக்கொண்டு அவ்வரணியத் தில் பைத்தியம்பிடித்தவர்போல இராமர் அலைந்து திரிந் தார். பின்பு அவர் விலங்கினங்களை விசாரிப்பாராயினர். "ஓ மானே, மான்போல் விழியினளாகிய சீதை போன விடம் உனக்குத் தெரியுமா? அவள் மான்களுடன் கூடி விளையாடுகின்ருளா? ஓ யானையே, உனது துதிக்கைபோன்ற துடையையுடைய ஜானகி போன இடம் உனக்குத் தெரியவேண்டும். அவளை நீ கண்டாயா? சொல். புலியே, பூர்ணசந்திரன்போன்ற முகத்தையுடைய என்னுடைய காதலி மைதிலியை நீ கண்டாயாயின் என்னிட மஞ்சாமல் சொல். தாமரை மலருக் கொப்பான கண்களை யுடையா

மான்களை விருவல்.

ளே, காதலீ, நீ ஏன் ஓடுகிறாய்? நான் உன்னைக் கண்டு கொண்டேன். ஏன் மரத்தின் பின்னால் மறைந்து கொண்டு என்னிடம் வார்த்தையாடாது நிற்கின்றாய்? பொறு, பொறு, மாதே, என்மேல் உனக்குக் கருணை யில்லை. முன் ஒருபோதும் நீ இவ்வாறு பரிகாசம் பண்ணின தில்லை. இப்போது ஏன் நீ என்னை உபேட்சை செய்கிறாய்? சுந்தரீ, நீ எவ்வாறு மறைந்துகொண் டோடினாலும் உனது மஞ்சள் பட்டாடை உன்னைக் காட்டிவிடுகிறது. என்மேல் உனக்கு அன்பு உண்டாயின் நீ ஓடாமல் நில். ஓ இனிய நகையுடையாளே, நீ சீதையன்று போலும். உண்மையாய் நீ கொல்லப்பட்டுவிட்டாய். இல்லையாயின் இந்தச் சமயத்தில் என்னை நீ உபேட்சை செய்யமாட்டாய். நான் இல்லாத சமயத்தில் வந்து பிசிதவுணர்களாகிய அரக்கர்கள் அவளுடைய அவயவங்களைக் கிழித்து அவளைப் புசித்துவிட்டார்கள் என்பது நிச்சயம். அழகிய பற்களும் அழகியமூக்கும் உடையதாய் வெள்ளைக் குண்டலங்க ளணிந்து விளங்கும் பூர்ண சந்திரன்போன்ற அவள் முகம் அரக்கர்கள் கையில் அகப்பட்டுக்கொண்ட போது ஒளிகுன்றி வெளுத்துப்போ யிருக்கும். அவள் கழுத்துச் சம்பகப்பூவின் நிறமுடையதாய் மாலை யணிந்திருந்தது. அதனை அவள் கதறக்கதற அரக்கர்கள் புசித்திருப்பார்கள். தளிர்போன்ற பல்வகை வளைகளணிந்த, அழகமைந்த கைகளை அவள் பயத்தால் நடுநடுங்கி உதற உதற அரக்கர்கள் புசித்திருப்பார்கள். ஐயோ! அரக்கர்கள் புசிப்பதற்காகவா நான் அவளைத் தனியாக விட்டுப்போனேன்? அநேக பந்துமித்திரர்கள் இருந்தும் அநாதைபோல் அவள் அரக்கர்களால் புசிக்கப்பட்டாளே. ஓ பெருங்கைகளுள்ள லக்ஷ்மணா, என் காதலியை எங்குளாள் என்று நீ கண்டாயா? நாயகீ, சீதாய், நீ எங்கே போனாய்" என்று இவ்வாறு புலம்பிக்கொண்டு இராமர் ஒரு காட்டினின்று மற்றொரு காட்டுக்குச் சென்றும், ஒரு

வேளை வேகமாய் ஓடியும், ஒருவேளை விரைவாய் நடந்தும், பைத்தியம் கொண்டவர்போல் பலவாறலைந்து ஒரு நிமிஷம் நின்றவிடத்தில் மற்றொரு நிமிஷம் நிற்காமல் வனங்கள், ஆறுகள், மலைகள், அருவிகள் முதலிய விடங்களெல்லாம் சென்று தேடி மைதிலியை ஓரிடமுங் காணுமல் பின்னும் அவளை வெகு கஷ்டத்தோடு தேடக் கருதினுர்.

---

## அறுபத்தொன்ருஞ்சருக்கம்.

இராமர் சீதையை நினைந்து புலம்பல்.

---

தசரதகுமாரரான இராமர் ஆச்சிரமமும் பர்ணசாலையும் வெறிதாயிருப்பதையும், அவ்விடத்துப் போடப்பட்டிருந்த ஆசனங்கள் சிதறுண்டிருப்பதையும் கண்டு நான்குபக்கமும் பார்த்துச் சீதையை எங்கும் காணுராகிக் கையைத் தூக்கிக்கொண்டு புலம்பத் தொடங்கினுர்:— "ஓ லக்ஷ்மணு, சீதை எங்கே? அவளிவ்விடம்விட்டு எங்கே போய்விட்டாள்? ஓ சுமித்திரை குமார, என் காதலியை யார் தூக்கிப்போயினுர்? அன்றி யார் புசித்துவிட்டார். ஓ சீதாய், நீ மரங்களில் மறைந்துகொண்டு என்னைப் பரிகாசம்பண்ணக் கருதுவது போதும்; துக்கத்தினுல் வருந்தும் என்னை வந்து தேற்றுதல் செய். ஓ சீதாய், உன்னுடைய அன்புள்ள இந்தச் சிறு மான்கள் உன்னைக் காணுமல் கண்ணீர் விட்டு விசாரங்கொண்டிருக்கின்றன. ஓ லக்ஷ்மணு, சீதையின்றி நான் பிழைத்திருக்க மாட்டேன். சீதை கவரப்பட்டமையால் என்னைப் பெருந்துக்கம் பற்றிக்கொண்டது. இனிப் பரலோகத்தில் என் தந்தை நிச்சயமாக என்னைக்கண்டு 'நான் உன்னை என் வாக்குத்தத்தத்தை நிறைவேற்ற நியமித்திருக்க, நீ அதை

இராமர் லக்ஷ்மணரை வினுவல்.

முடித்துவைக்காமல் எவ்விதமாக இவ்விடம் வந்தாய்? சீ, நீ கெட்டாய்' என்று சொல்வார். உண்மையாக எனது தந்தையார் என்னுடைய பொறுமை யில்லாத கெட்ட பொய் நடக்கையைக்குறித்து இவ்வாறு கூறு வார். நான் என்னிலே கெட்டு என் ஆசைகள் ஒன்றும் கைகூடாமல் துக்கத்தில் ஆழ்ந்திருக்கின்றேன். மெல் லிய இடையையுடைய சீதாய், கொடியவனைப் புகழ் கைவிடுவதுபோல நீ என்னைத் தனியாகவிட்டு எங்கு ஓடி விட்டாய்? உன்னை அடையேனுயின் நான் என் பிராணனை விட்டுவிடுவேன்."

இவ்வண்ணம் இராமர் சீதையைக் குறித்துப் பல வாறு புலம்பி எங்குந் தேடிப்பார்த்தும் அவளைக் கண்டு கொள்ளவில்லை. சீதையின் பொருட்டுத் துக்கத்தில் முழுகிச் சேற்றில் ஆழ்ந்த யானைபோல் இராமர் மெலிவ டைந்தார். லக்ஷ்மணர் இராமரைப் பார்த்து அவருடைய நன்மைக்காக "ஐயா, மிக்க பராக்கிரமம் பொருந்தியவரே, துக்கப்படவேண்டாம். நாமிருவரும் இன்னும் தேடிப்பார்ப்போம். அந்தப் பெரியமலை அநேக குகைகளை உடையது. சீதை காட்டில் உலாவுகிறதில் ஆவல்கொண் டவள்; புஷ்பித்த மரங்களைக்கண்டு களிப்பவள். அவள் இக்காட்டில் எங்கேயாவது சென்றிருக்கலாம்; அல்லது பூக்கள் நிறைந்த தாமரை யோடைக்குப் போயிருக்க லாம். அவள் மீன்களும் நீர் நொச்சிகளும் நிறைந்த ஆற் றண்டை சென்றிருப்பாள். அல்லது நமக்கு அச்சமுண் டாக்கி நாம் எவ்வாறு அவளைத் தேடிப்பிடிப்போமென் பதைக் காணக் காட்டில் ஒளித்திருப்பாள். ஆகையால், நாம் விரைந்து அவளைத் தேடுவோம். அவள் இக்காட்டில் இருப்பாளென்று நீர் எண்ணுவீராகில் நாம் இக்காட்டை ஓரிடமும் விடாமல் தேடுவோம். துக்கப்படவேண்டாம்" என்றுசொன்னார். இவ்விதமாக லக்ஷ்மணர் தமையனி

லக்ஷ்மணர் சீதையைத் தேடுவோம் எனல்.

டம் கொண்ட அன்பால் சொன்னவுடன் இராமர் மனந் தேறித் தம்பியுடன் சீதையைத் தேடத் தொடங்கினர். வனங்கள், மலைகள், ஆறுகள், ஓடைகள் முதலிய எல்லாவிடங்களிலும் தேடியும் அவர்கள் சீதையைக் கண்டுகொள்ளவில்லை. அவ்வாறே மலைகளின் உச்சிகள் தாழ்வரைகள் முதலிய ஒவ்வோரிடங்களிலும் தேடியும் சீதையைக்காணமல் இராமர் லக்ஷ்மணரைப்பார்த்து "சுமித்திரை புத்திர, இந்த மலைகளில் எல்லாம் சீதையைக் காணேனே" என்றார். அது கேட்டு லக்ஷ்மணர் துக்கமடைந்து தண்டகாரணியமெங்குந் திரிந்த பராக்கிரமமுடைய இராமரைப்பார்த்து "மகா விஷ்ணு பலிச்சக்கரவர்த்தியைக் கட்டி இப்பூமியை யடைந்ததுபோல் தாங்கள் நிச்சயமாகச் சீதையை யடைவீர்கள்" என்று கூறினர். இராமர் அடக்கமுடியாத துயரத்துடன் அவரைப்பார்த்து "லக்ஷ்மண, நான் இக்காட்டின் இடங்களெல்லாவற்றையும், பூத்த தாமரை ஓடைகளையும், அநேக குகைகளும் அருவிகளும் நிரம்பிய இம்மலையையும் தேடினேன். ஓரிடத்திலும் என்னுயிரினுமினிய சீதையைக் கண்டிலேன்" என்றார். இராமர் இவ்வாறு புலம்பிச் சீதையைக் காணமல் மெலிவடைந்து துக்கத்தில் மூழ்கிக் கொஞ்சக்காலம் மெய்ம்மறந்திருந்தார். அவர் சோகத்தால் உணர்ச்சியற்று உடல் வருந்தி வெகு பரிதாபமடைந்து வெப்பமாக அடிக்கடி பெருமூச்செறிந்து அழத்தொடங்கினர். தாமரை யிதழுக்கொப்பான கண்களையுடைய இராமர் மீட்டும் மீட்டும் அழுது துயரத்தால் நெஞ்சடைத்துக்கொண்டு "ஓ சீதாய்" என்று வாய்விட்டுக் கதறினர். அப்போது அவருடைய அன்புள்ள தம்பியாரான லக்ஷ்மணர் கைகூப்பி, வெகு வணக்கமாய், அநேகவிதமாகத் தேற்றரவு கூறினர். லக்ஷ்மணருடைய வார்த்தைகளைச் சிறிதும்

சீதையைத் தேடல்.

சீதையைக் காணது இராமர் புலம்பல்.

கவனியாது சீதையைக் காணுமையால் இராமர் பெயர்த்தும் பெயர்த்தும் அழுவாராயினர்.

---

## அறுபத்திரண்டாஞ்சருக்கம்.

இராமர் சீதையை நினைத்துப் பின்னும் அதிகமாகப் புலம்பல்.

---

தருமாத்துமாவாகிய இராமர் சீதையைக்காணுமல் தன்னை மறந்து பலவாருகப் புலம்பினர். சீதையைத் தாம் காணவில்லையாயினும் மன்மதபாணத்தால் பீடிக்கப்பட்டு அவளைக் கண்டதுபோல் இராமர் புலம்பினர்:— "என் காதலி, உனக்குப் புஷ்பங்களிடத்தில் அதிக ஆசையாகையால் நீ அசோகத்தழைகளால் உன் தேகத்தை மறைத்துக்கொண்டு என் சோகத்தை வளர்க்கின்ருய். வாழைபோன்ற துடைகளை உடைய நீ வாழைத் தோட்டத்தில் புகுந்து ஒளித்தனை. சுந்தரி, உன்னை நான் கண்டுகொண்டேன்; உன்னை உன்னுல் மறைக்கமுடியாது. நங்காய், நீ சிரித்துக்கொண்டு கோங்கஞ்சோலையுள் புகுகின்ருய். பிரியாய், விளையாட்டுப்போதும்; என்னுயிர் போகின்றது. ஆகையால், இந்தச் சமயத்தில் விளையாடுவது சரியன்று. அதுவுமன்றி ஆச்சிரமத்தில் விளையாடுவது தக்கதன்று. விளையாட்டில் நீ இயல்பில் ஆசை உள்ளவளென்று யானறிவேன். தடங்கண்ணுய், நீயில்லாமல் இந்தப் பர்ணசாலை வெறிதாக விருக்கிறது; சீக்கிரம் வந்துவிடு. சீதையை அரக்கர்கள் கவர்ந்து கொண்டு போயிருக்கவேண்டும், அல்லது புசித்திருக்கவேண்டும்; இது நிச்சயம். இல்லாவிடில், லக்ஷ்மணு, நான் இவ்வாறு பரிதபிக்கையில் அவள் வாராமலிருப்பாளா? லக்ஷ்மணு, கண்ணீர் விட்டு நிற்கும் இம்மான்கூட்டங்கள் அரக்கர்கள் சீதையைப் புசித்துவிட்டார்கள் என்று சொல்லுவன

இராமர் சீதையை விளித்துப் புலம்பல்.

போலிருக்கின்றன. ஓ உத்தமீ, ஓ சுந்தரீ, ஓ தாயே, நீ எங்கேபோனாய். ஓ சீதாய், கைகேயி யினுடைய எண்ணம் இன்று நிறைவேறிவிட்டது! நான் சீதையோடு புறப்பட்டு வந்து அவளை யின்றித் திரும்பிச் செல்லப் போகின்றேன். இனிச் சீதையில்லாமல் எப்படி நான் அந்தப்புரத்தில் புகுவேன்? உலகம் என்னைக் கொடியவனென்றும் வீரமில்லாதவனென்றும் பழி கூறுவது நிச்சயம். சீதையை இழந்ததனால் எனக்குத் தீரமில்லை யென்பது வெளியாகும். எனது வனவாசம் முடிந்து நான் அயோத்திக்குத் திரும்பிச் செல்லும்போது என்னை க்ஷேமம் விசாரிக்க வரும் ஜனகமகாராஜனை நானெவ்வாறு பார்ப்பேன்? அவர் என்னைச் சீதையின்றிக் காணும்போது தமது புத்திரி காரணமாகத் துக்கத்திலழுந்துவாரே! இனிப் பரதனாளும் அந்நகரத்திற்கு நான் திரும்பிச்செல்லேன். சீதையில்லையாயின் சுவர்க்கலோகமும் எனக்கு வெறும்பாழாக விருக்கும். ஆகையால், லக்ஷ்மணா, என்னை இக்காட்டில் விட்டுவிட்டு நீ மாத்திரம் அயோத்திநகரம்செல். சீதையின்றி நான் ஒருபோதும் உயிரோடிருக்கமாட்டேன். நீ பரதனை இறுகத்தழுவி "இராமர் உனக்குப் பாராள உத்தரவு கொடுத்தார்" என்று நான் சொன்னதாகச் சொல். அன்றியும், என் கட்டளைப்படி நீ என் தாய்மார் கோசலை, கைகேயி, சுமித்திரை மூவர்களையும் மிக்க மரியாதையுடன் நமஸ்காரம்பண்ணி வெகு சாக்கிரதையாகப் பாதுகாப்பாயாக. பகைவரேறே, சீதையை யானிங்கு இழந்த விதத்தை எனது தாயாருக்கு நீ விரிவாகக் கூறு" என்று இவ்வாறு இராமர் கரியகூந்தலையுடைய சீதையின் பிரிவால் துக்கத்தி லாழ்ந்து புலம்ப, லக்ஷ்மணர் முகம் வாடி மிகவும் மனம் நொந்து வருந்தினர்.

இராமர் தன்னை நோதல்.

---

## அறுபத்துமூன்றாஞ்சருக்கம்.

இராமர் அடங்காத துயருறல்.

சக்கரவர்த்தி குமாரர் தமது அரிய நாயகியைப் பிரிந்து துயருற்றவராகித் தம்பியாகிய லக்ஷ்மணருக்குத் துக்கத்தை விளைவித்து மறுபடியும் பெருந் துன்ப மடைந்தார். துக்கத்தில் முழுகிக்கிடக்கும் இராமர் தம்மைப்போல் துன்புற்றவராகிய லக்ஷ்மணரைப் பார்த்து நெருப்புப்போல் பெருமூச்செறிந்து வெகு பரிதாபமாக அழுதுகொண்டு சொல்லலுற்றார்:—"என்னைப்போல் கொடுமைசெய்தவர் வேறொருவரும் இவ்வுலகத்தில் இல்லை என்று நான் எண்ணுகிறேன். துக்கத்தின்மேல் துக்கம் ஒன்றன்பின் ஒன்றாய் இடைவிடாது தோன்றி எனது மனத்தைப் பிளக்கின்றது. நான் முற்பிறப்பில் பலதீவினைகளைச் செய்தது நிச்சயம்; அவைகளின் பயனை நான் இப்பொழுது அனுபவிக்கிறேன். அக்காரணத்தாற்றான், துக்கத்தின்மேல் துக்கம் எனக்கு வந்துகொண்டிருக்கின்றது. நான் நாடிழந்ததும், பந்துக்களைவிட்டுப் பிரிந்ததும், என் தந்தை மாண்டதும், என் தாயைவிட்டு நான் பிரிந்ததுமாகிய இவைகள் என் நினைவில் வந்து என் துயரத்தை அதிகப்படுத்துகின்றன. ஓ லக்ஷ்மணா, இந்தத் துக்கங்களெல்லாம் காட்டிற்கு நான் வந்தபோது சீதையும் என்னுடனிருந்தமையால் எனக்கு ஒரு துன்பமும் செய்யவில்லை. இப்பொழுது சீதை என்னைப்பிரிந்தமையால் அவைகள் விறகூட்டப்பெற்ற தீயைப்போல மறுபடி மண்டி எரிகின்றன. அரக்கன் ஒருவன் பலாத்காரமாய் என் நாயகியை ஆகாயவழியாகத் தூக்கிக்கொண்டு போய்விட்டான்; இது நிச்சயம். அழகான குரலையுடைய என் மனைவி அப்பொழுது பயந்து கண்டோர் இரங்க

இராமர் புலம்பல்.

சீதை என்ன துன்பப்பட்டாள் எனல்.

அடிக்கடி பலவாறு புலம்பியிருப்பாள்; இதற்குச் சந்தேகமில்லை. ஐயோ! சந்தன களபம் பூசப்பெற்ற என் நாயகியின் திரண்ட தனம் அரக்கனால் உண்ணப்படும் பொழுது இரத்தத்தில் மூழ்கியிருக்கும்; இது நிச்சயம். இனிமையாகவும் மெதுவாகவும் தெளிவாகவும் பேசவல்லதும் கருங்குழல் சூழ்ந்ததுமாகிய அவள் முகம் அரக்கனால் பற்றப்பட்டபொழுது இராகு கவ்விய சந்திரன்போல ஒளி யிழந்திருக்கும். மிக வணக்கமுள்ள என்னுடைய காதலியின்கழுத்தைப் பிசிதவூணராகிய அரக்கர்கள் ஆகாசத்தில் போகும்போது முறித்து இரத்தத்தைக் குடித்திருப்பார்கள். நான் பிரிந்துவிட அவள் காட்டில் தனித்திருந்தபொழுது அவளை நான்கு பக்கங்களிலும் அரக்கர்கள் சூழ்ந்து பற்றிஇழுக்க அத்தடங்கண்ணாள் கிரவுஞ்சப் பக்ஷியைப்போல் வருந்தி அழுதிருப்பாள். ஓ லக்ஷ்மண, இந்தக் கற்பாறையிலன்றே அந்தப் பெருமிதமுடைய சீதை என்னுடன் வீற்றிருந்துகொண்டு புன்னகையோடு உன்னிடம் பலவிஷயங்களைப்பற்றிப் பேசுவது? இது கோதாவரி நதி; நதிகளுள்மேம்பட்டது; சீதை அதனிடம் மிக்க பிரீதி உடையள். அவள் அங்கே போயிருப்பளோ? அவள் அங்கு ஒருநாளும் தனியாகப் போவதில்லை.

சீதை எங்குபோயினள் எனல்.

தாமரைப் பூப்போன்ற முகமும் தாமரையிதழ்போன்ற கண்களுமுடைய சீதை தாமரைமலர் கொண்டுவரப் போயிருப்பளோ? அதுவும் ஆகாது. என்னை இன்றி அவள் தாமரை மலரெடுக்க ஒருபோதும் போகமாட்டாள். பல பூத்தமரங்களடர்ந்து பலவகைப் பக்ஷிகள் நிரம்பிய இந்தக் காட்டுக்குள் அவள் போயிருப்பாளோ? அதுவும் கூடியதன்று. அவள் மிகப் பயந்தவளாகையால் தனியாக இதற்குள் போகாள். சூரியனே, நீ மனிதர்களுடைய புண்ணியபாபச் செயல்களை யறிந்தவன்;

சீதை எங்கே என்று சூரியனை யும் வாயுவையும் வினவல்.

அன்றியும், அவர்களுடைய செயல்களின் பொய்மை உண்மைகளுக்கும் சாக்ஷியாக விளங்குகின்றவன்; நான் வேண்டுகின் றேன், சோகத்தில் முழுகிக்கிடக்கும் எனக்கு என் காதலி எங்காவது போயினளா அல்லது கொலையுண்டாளா என்பதைச் சொல்லு. வாயுவே, இவ் வுலகத்தில் நடப்பதில் உனக்குத் தெரியாதது ஒன்று மில்லை; ஆகையால், நீ என் மனைவி என்னவானாள்—தூக் கிக்கொண்டு போகப்பட்டாளா? கொல்லப்பட்டாளா? அல்லது வழியில் என்னை எதிர்பார்த்து நிற்கின்றாளா? என்பதை எனக்குச்சொல்லு." இராமர் சோகத்தால் தன் னை மறந்து இவ்வாறாகப் புலம்ப அவரைப்பார்த்து வெகு தைரியசாலியும் நியாயத்தைக் கைவிடாதவருமான லக்ஷ் மணர் இவ்வாறு தக்க வார்த்தைகளைச் சொல்வாராயி னார்:—"மனத்தைத் தைரியம் பண்ணிக்கொண்டு துக்கத் தை நீக்கிவிட்டு ஊக்கத்தோடு சீதையைத் தேடத்தொ டங்கும். ஊக்கமுள்ளவர்கள் இவ்வுலகத்தில் எவ்வளவு பெருங் கஷ்டங்கள் நேரிடினும் ஒருபொழுதும் சோர்வு அடையமாட்டார்கள்." மிக்க பராக்கிரமசாலியாகிய லக்ஷ் மணர் இவ்வாறு சொல்லியும் அதிக துன்பப்பட்டுக் கொண்டிருந்த இராமர் அவர் சொன்ன சொல்லைச் சிறி தும் கவனியாது பொறுமை இழந்தவராகி மறுபடியும் பெருந்துக்கத்தில் முழுகினார்.

---

## அறுபத்துநான்காஞ்சருக்கம்.

இராமர் சீதையைத் தேடித் தென்திசை சென்று அரக்கர்

அடிச்சுவடுகளைக் கண்டு

இவ்வுலகத்தை அழித்துவிடுகிறேன் என்று கோபங்கொள்ளல்.

---

இராமர் துயரமுற்று லக்ஷ்மணரை நோக்கி "ஓ லக்ஷ் மணா, நீ விரைவாகக் கோதாவரியாற்றுக்குச் சென்று

அங்கே தாமரைமலர் எடுக்கச் சீதை போயிருக்கிருளா என்று பார்த்துவா" என்று மிக இரக்கமாகச் சொன்னுர். அதை லக்ஷ்மணர்கேட்டு வெகுதுரிதமாக அழகிய கோதாவரிக்குச் சென்று அந்நதி யெங்கும் நன்ருகத் தேடிப்பார்த்து வந்து இராமரைநோக்கி "நான் ஸ்நானகட்டங்கள் எங்குந் தேடினேன்; சீதையை ஓரிடத்திலும் கண்டிலேன். நான் உரத்துக்கூப்பிட்டும் பார்த்தேன். என் குரலை அவள் கேட்டதாகத் தெரியவில்லை. நமது துயரத்தைப் போக்குகின்ற மெல்லிய இடையையுடைய வைதேகி எங்கு போயினுள் என்பது தெரியவில்லை" என்ருர். இவ்வாறு லக்ஷ்மணர் சொன்னதைத் துக்கத்தில் முழுகியிருக்கும் இராமர் கேட்டுத் தாமே கோதாவரி யாற்றுக்குச் சென்ருர். அந்நதியைச் சேர்ந்தவுடன் "சீதை எங்கே" என்று அவர் வினவினர். அப்போது சீதையைக் கொலைக்காளாகிய அரக்கர்கோன் கவர்ந்து சென்ருனென்று கோதாவரி நதியாவது அங்குள்ள பிராணிகளாவது சொல்லவில்லை. சீதையின் செய்தியை இராமருக்குச் சொல் என்று பிராணிகளால் வேண்டப்பட்டிருந்தும் இராமர் துக்கத்துடன் கேட்டபோது அந்நதி கொடிய இராவணனுடைய பயங்கரமான ரூபத்தையும் கோரமான செய்கையையும் நினைத்துப் பயந்து ஒன்றும் சொல்லாம லிருந்துவிட்டது. சீதையைக் கோதாவரியால் காணலாம் என்ற எண்ணம் முற்றுப் பெருத இராமர் அவள் பிரிவால் மாழ்கி, லக்ஷ்மணரைப் பார்த்து "லக்ஷ்மண, கோதாவரிநதியும் ஒன்றும் மறுமொழி தந்திலது. சீதையின்றி நான் ஊர்போய் அவள் தாயாருக்கும் ஜநகருக்கும் யாது சொல்லுவேன்? இராச்சியத்தை இழந்து, காட்டிற்குவந்து, இங்குள்ள காய்கனிகளைப் புசித்து, யான்பட்ட கஷ்டங்களைப் போக்கிக்கொண்டுவந்த சீதை எங்கேபோயினுள்? சுற்ற மித்திரர்களைப் பிரிந்து, சீதை

இராமர் சீதை எங்கே என்று கோதாவரி நதியை வினவல்.

யையும் காணாது, நெடுநேரம் விழித்திருக்குமெனக்கு இனி இரவு தொலையாமல் மிகவும் பெரிதாகத் தோன்றுமே. சீதையைக் காணவேண்டி, மந்தாகினி நதியிலும், ஜனஸ்தானத்திலும், இந்தப் பிரஸ்ரவணமலையிலும் நான் தேடுவேன். வீரனே, பார்; இந்த மான்கள் அடிக்கடி என்னை உற்றுப்பார்க்கின்றன. அவைகளின் தோற்றத்தை நோக்குமிடத்து அவைகள் என்னிடம் ஏதோ சொல்ல விரும்புவன போலத் தோன்றுகின்றன'' என்று உரைத்து, புருஷோத்தமராகிய இராமர் அம்மான்களைப் பார்த்து, தமது கண்களில் நீர் ததும்ப "சீதை எங்கே'' என்று கேட்டனர். அப்படி அவர் கேட்டவுடனே அம்மான்கள் எழுந்து தென்முகமாக ஆகாசத்தை நோக்கிக்கொண்டு சீதையைத் தூக்கிக்கொண்டு போனவழி வழியே நடக்கலாயின. அப்படிப் போகும் மான்கள் இராமரைத் திரும்பித் திரும்பிப் பார்த்து அந்த வழியையும் பூமியையும் அடிக்கடி உற்றுநோக்கி அழுதுகொண்டு சென்றன. இவைகளையெல்லாம் லக்ஷ்மணர் நன்றாகப்பார்த்து யோசித்து மிக்கவிசனத்துடன் தமது தமையனாரைப் பார்த்து-"ஐய, சீதை எங்கே என்று தாங்கள் கேட்டவுடன் இம்மான்கள் எழுந்து பூமியைக் காட்டித் தென்திசையை நோக்கிக்கொண்டு செல்லுகின்றன. ஆகையால், நாம் தென்திசையை நோக்கிச் செல்லுவோம். அப்படிச் செல்வதால் நாம் சீதையை அல்லது அவளைப்பற்றிய அடையாளங்களைக் காணலாம்'' என்றார். இராமர் "அப்படியே ஆகட்டும்'' என்றுசொல்லி லக்ஷ்மணருடன் தென்திசையை நோக்கிப் போகும்வழியெல்லாம் சீதையைப் பார்த்துக்கொண்டே போயினர். அவ்வாறு அவ்விரு சகோதரர்களும் ஒருவருடன் ஒருவர் பேசிக்

மான்களை விறுவல்.

மான்கள் சீதை சென்ற வழிகாட்டல்.

வழியில் சீதையணிந்த புஷ்பங்கள் விழுந்து கிடக்கக் காணல்.

கொண்டு போகையில் சில புஷ்பங்கள் வழியில் விழுந்து இடக்கக் கண்டார்கள். தரையில் விழுந்திருந்த புஷ்பங்களை இராமர் கண்டு விசனமுற்று லக்ஷ்மணரைப் பார்த்து "லக்ஷ்மண, இம்மலர்கள் நான் சீதைக்குக் காட்டில் பறித்துக்கொடுத்தவை. அவைகளை அவள் வாங்கித் தலைமேலணிந்துகொண்டாள். இவைகளை என் நன்மை கருதியே சூரியனும் காற்றும் பூமியும் வாடாமல் காப்பாற்றி வைத்தன." என்றார். இவ்வாறு லக்ஷ்மணரிடம் சொல்லித் தருமாத்துமாவும் புருஷோத்தமருமான நீண்ட கரங்களையுடைய இராமர் தனக்கெதிரில் உள்ள அநேக அருவிகள் பெருகிக்கொண்டிருந்த மலையை நோக்கி "ஓ கிரிராஜ, இவ்வழகிய காட்டில் என்னைப்பிரிந்து பரிதபிக்கும் அழகிய அங்கங்களையுடைய சீதையை நீ கண்டதுண்டா?" என்று கேட்டார். பின்பு வெகு கோபத்துடன் சிங்கம் ஒரு மானைப் பார்த்துப் பேசுவதுபோல அம்மலையைக் கடிந்து நோக்கி, "ஓ மலையே, பொன்னின் நிறமுடைய என் அழகிய சீதையை உடனே எனக்குக் காட்டு; இல்லையாயின் உனது தாழ்வரைகளைப் பொடிபடுத்துவேன்" என்றார். எவ்வாறு கேட்டும் அம்மலை சீதையைக் காட்டிற்றில்லை. மறுபடியும் இராமர் அம்மலையைப் பார்த்து, "நீ என் பாணத்தினக்கினியால் எரியுண்டு நீருகப்போகிறாய். உன்னிடத்திலுள்ள தழைகளும் கிளைகளும் எல்லாம் முழுது மழிந்து உன்னிடம் ஒருவரும் சேராது போய்விடுவர்" என்றுரைத்து, லக்ஷ்மணரை நோக்கி "ஓ லக்ஷ்மண, இக்கோதாவரியையும், பூரண சந்திரன்போன்ற முகத்தையுடைய சீதை சென்ற இடத்தை எனக்குச் சொல்லாதொழியுமாயின், நீர் வற்றும்படி செய்கிறேன்" என்றார். இராமர் மிகவும் சினந்து, தமது கண்களால் எல்லாவற்றையும் எரித்துவிடுபவர்போலத் தம்மைச்சுற்றி நான்கு பக்கங்களிலும் பார்த்து, அங்கு அரக்கர்கோ

மலையை விருவல்.

னுடைய அடிச்சுவடுகளையும் அவனாற் பற்றப்பட்டபோது பயந்து இராமரைக் காணவேண்டி அங்கு மிங்கும் ஓடித்தத்தளித்த சீதையினுடைய அடிச்சுவடுகளையும் கண்டார். இந்த அடிச் சுவடுகளையும் முறிந்த வில்லையும், தூணியையும், அழிந்த தேரையும் கண்டு இராமர் மனம் கலங்கித்தமது தம்பியைப் பார்த்து "லக்ஷ்மணா, இதோபார்! சீதையினுடைய பொன்னாபரணத் துண்டங்களும் அவள் அணிந்திருந்த மாலைகளும் அங்குமிங்கும் சிதறுண்டிருக்கின்றன. பொற் றுளிகள்போல இரத்தத்துளிகள் பூமியில் காணப்படுகின் றன. லக்ஷ்மணா, மாயாவிகளான அரக்கர்கள் சீதையைப் பல துண்டங்கள் செய்து புசித்துவிட்டார்கள் போலத் தோன்றுகிறது. சீதையின்பொருட்டு ராக்ஷசர்கள் இங்கு ஒருவரோடொருவர் எதிர்த்துப் பெரும் போர் செய்தி ருக்கவேண்டும். முத்துக்களும் வயிரக்கற்களும் இழைக்கப் பட்டு இங்கு முறிந்து கிடக்கின்ற இந்தவில் யாருடையது? இது தேவர்களது அல்லது ராக்ஷசர்களது ஆகவேண்டும்.

சீதையின் அடிச் சுவடு காணல்.

இதோ உடைந்து கிடக்கின்ற இளஞ்சூரி யன்போன்ற வைடூரிய மணிகளிழைக் கப்பட்ட பொற்கவசம் யாருடையது? இதோ முரிந்துகிடக்கின்ற திவ்வியமாலை கள் கட்டப்பட்டதும் நூறுகம்பிகள் போடப்பட்டதுமான குடை யாருடையது? பேய்முகமுடையனவும் மார்பிற் கவசம் பூண்டனவுமான இந்தப் பெரிய பயங்கரமான கோவேறுகழுதைகள் யாருடைய போரில் கொல்லப்பட் டன? இதோ உடைந்து, தரையில் கவிழ்ந்து, கொழுந்து விட்டெரியும் செழுந்தீக்கொப்பான கொடிகளையுடைய தாய்க் கிடக்கின்ற இந்தப் போர்த்தேர் யாருடையது? இதோ தலையற்றுப் பூமியில் கிடக்கின்ற தங்கக்கட்ட மைந்த நெடிய பாணங்கள் யாருடையவை? ஓ லக்ஷ்மணா, இதோபார்! இவ்விரண்டு தூணிகளும் பாணங்கள் நிரம்பி

முரிந்த தேர் முதலிய காணல்.

இருந்தபோதிலும் சிறிதும் உபயோகமற்றவைகளாகச் செய்யப்பட்டுக் கிடக்கின்றன. இதோ கையிற் பிடித்த குதிரைச் சம்மட்டியோடுங் கடிவாளத்தோடும் மாண்டு கிடக்கின்ற தேர்ப்பாகன் யாருடைய சாரதி? தலைப் பாகையும், குண்டலங்களும் தரித்துக் கையிற்பிடித்த சாமரங்களுடன் இறந்து கிடக்கின்றவர்களாகிய இந்தச் சாமரம் போடுகிறவர்கள் யாருடைய ஆட்கள்? இந்த அடிச்சுவடுகள் அரக்கர்களுடையவைகளே. மாயங்கள் வல்ல கொடிய மனமுள்ள அரக்கர்களை யான் எனக்குப் பகைவர்களாக்கிக்கொண்டேன். ஏழையாகிய சீதை இறந்திருக்கவேண்டும்; அல்லது அவளை அரக்கர்கள் விழுங்கியிருக்கவேண்டும்; அல்லது தூக்கிக்கொண்டு போயிருக்கவேண்டும். ஐயோ! இப்பெருங்காட்டில் சீதையை அரக்கர்கள் கொண்டுபோகும்பொழுது தருமம் அவளைக் காப்பாற்றவில்லையே! ஓ லக்ஷ்மணா, ஜானகியை அரக்கர்கள் விழுங்காமலும் கவர்ந்துகொண்டு போகாமலும் தருமங் காப்பாற்றாதபோது இவ்வுலகத்தில் எனக்கு நன்மைசெய்யத்தக்கவர்கள் தெய்வத்தன்மை யுள்ளவர்கள் யாரிருக்கிறார்கள்? இதனாலேயே சர்வ பிராணிகளையும் படைத்த எல்லாம் வல்ல தேவதேவனை மனிதர்கள் மடமையால் மதிக்கின்றிலர். வெகு சாந்தமுள்ளவனும், உலகத்திற்கு எப்போதும் நன்மையையே நாடுபவனும், ஐம்பொறிகளை அடக்கினவனுமாகிய என்னைப் பராக்கிரம மற்றவன் என்று தேவர்களும் இதனால் எண்ணுவார்கள். லக்ஷ்மணா, இந்த நல்ல குணங்கள் என்னைச் சேர்ந்தமையால் குற்றமாயின. அரக்கர்களையும், மற்றெல்லாப் பிராணிகளையும் நான் நாசம்பண்ணுவதற்காக, ஊழிகாலத்தில் சந்திரனுடைய காந்தியைச் சூரியனுடைய கிரணம் தொலைப்பதுபோல என்துகுணங்களெல்லாவற்றையும் அடக்கி என்

இராமர் கோபம் கொள்ளல்

வல்லமை இன்று பிரகாசிக்கட்டும். ஓலக்ஷ்மணா, யக்ஷர்கள், கந்தர்வர்கள், பிசாசர்கள், ராக்ஷசர்கள், கின்னரர்கள், மானிடர்கள் முதலிய யாவருக்கும் சுகமில்லாமல் போகட்டும். இன்று என் வில்லினின்று விடப்படும் பாணங்களால் ஆகாசம்மறைவதாக. நான் இம்மூவுலகங்களிலும் வாழும் பிராணிகளெல்லாவற்றையும் அசைவற்று நிற்கச்செய்கிறேன். ஆகாசத்தில் கிருகங்களை ஓடாது செய்கிறேன் சந்திரனை மறைத்து விடுகிறேன். காற்றின் இயக்கத்தை மாற்றுகிறேன். சூரிய கிரணத்தையும் அக்கினியையும் அழித்துவிடுகிறேன். மலைகளை மணல்களாகப் பொடிபடுத்துகிறேன். சமுத்திரத்தையும் மற்றும் நீர் நிலைகளையும் வற்றும்படி செய்கிறேன். மரம் செடி கொடி முதலிய யாவற்றையும் அழித்துவிடுகிறேன். தேவர்கள் சீதையை என்னிடம் சேர்க்கா தொழிவார்களாயின் ஊழிகாலத்தில் அழிகின்ற இம்மூவுலகங்களையும் இப்போதே நாசம் பண்ணி விடுகிறேன். சீதையை என்னிடம் சேர்க்கார்களாயின் இந்த நிமிஷத்திலேயே எனது பராக்கிரமத்தை இந்திரனை முன்னிட்டதேவர்கள் காண்பார்கள். ஓ லக்ஷ்மணா, என் வில்லினின்று இடையறாது விடப்படும் பாணங்களால் மொத்துண்டு ஆகாசத்தில் யாரும் செல்லமாட்டார்; விலங்குகளும் பறவைகளும் மயங்கி அழிந்துவிடும்; உலகம் நிலைகுலைந்து தலை தடுமாறிப்போம். கர்ணபரியந்தம் வில்லை யிழுத்து வளைத்துப் பிராணிகளால் தாங்கமுடியாத என் அம்புகளால் சீதையின் நிமித்தம் இவ்வுலகில் பிசாசர்களும் அரக்கர்களும் இல்லையாம்படி செய்கிறேன். கோபத்தால் விடப்படும் என் பாணங்களுடைய பலத்தையும் அவைகள் வெகுதூரம் போவதையும் தேவர்கள் இன்று பார்க்கட்டும். மூவுலகங்களும் எனது கோபத்தால் நாசமடைந்து தேவர்கள், அசுரர்கள், பிசாசர்கள், ராக்ஷசர்கள் ஒருவரும் இல்லையாவார்கள். தேவர்கள், அசுரர்கள், யக்ஷர்

மூவுலகங்களையும் அழிக்க வேண்டல்.

கள், ராக்ஷசர்கள் முதலியவர்களுடைய இருப்பிடங்கள் என் பாணங்களால் பிளப்புண்டு துகளாய்ப்போம். உலக மெல்லாவற்றையும் தலைகீழாக்கிவிடுவேன். எனது சீதையை அவள் இருந்தபடி அல்லது இறந்தபடி அல்லது அவளை எடுத்துப் போனபடி என்னிடம் தேவர்கள்கொண்டு வந்து சேர்க்கார்களாயின் யான் என்னுடைய பாணங்களால் சராசர மனைத்தையும் அழித்து மாற்றிவிடுவேன்" என்றார். இவ்வண்ணம் கூறி இராமர் கோபத்தால் உதடு துடிக்க, கண்கள் சிவந்து, மரவுரியைக்கட்டிச் சடையை முடித்து, தமது வில்லை லக்ஷ்மணரிடமிருந்து வாங்கிக் கையிற்பற்றி, கொடிய சர்ப்பம் போன்ற அநேக பாணங்களை அதில் தொடுத்து, பிரளயகாலத்தில் தோன்றிய அக்கினிபோலக் கோபங்கொண்டு "லக்ஷ்மணா, மூப்பு, சா, கூற்று, விதி முதலியவைகளைப் பிராணிகளால் தடைசெய்ய முடியாதவாறு போல, கோபங்கொண்ட என்னை விலக்க ஒருவராலும் முடியாது. இன்று யான் என் அழகிய உத்தமியாகிய சீதையை அடையேனாயின் தேவர்கள், கந்தர்வர்கள், மானிடர்கள், பன்னகர்கள் வாழும் இவ்வுலகத்தை மலைகளோடு தலை தடுமாறச் செய்து விடுகிறேன்" என்றனர்.

---

## அறுபத்தைந்தாஞ்சருக்கம்.

லக்ஷ்மணர் இராமரைக் கோபத்தையடக்கும்படி வேண்டல்

---

சீதையின் பிரிவால் மிகவுந் துன்புற்று, ஊழித்தீப் போல மூன்றுலகங்களையும் அழித்துவிடக் கருதி, நாணேற்றிய தம் வில்லை அடிக்கடி பார்த்துப் பெருமூச் செறிந்துகொண்டு, ஊழிகாலத்தில் உலகங்கள் யாவையும் எரிக்கும்படி நிற்கும் மகதேவன்போல இராமர் நிற்க, லக்ஷ்மணர் முன் ஒருபொழுதும் காணாத இராமருடைய

பெருங் கோபத்தைக் கண்டு முகம்வாடி அஞ்சலி செய்து "ஐயா, தாங்கள் இதற்குமுன் எப்பொழுதும் வெகுசாந்த குணமுடையவராய், ஐம்புலன்களை யடக்கி, எல்லாவுயிர்களுக்கும் இனியராய் இருந்து; இப்பொழுது கோபம்மேலிட்டு தங்களுடைய இயற்கைக் குணத்தைத் துறப்பது நியாயமன்று. சந்திரனிடத்தில் நிலவும், சூரியனிடத்தில் வெயிலும், காற்றினிடத்தில் இயக்கமும், பூமியினிடத்தில் பொறுமையும் போலத் தங்களிடத்தில் சிறந்த புகழ் எப்போதும் விளங்கிக்கொண்டிருக்கிறது. ஒருவருடைய குற்றத்துக்காகத் தாங்கள் இவ்வுலகத்தை யெல்லாம் அழிப்பது நியாயமன்று. இதோ முரிந்து கிடக்கும் தேர் ஒருவனுடையதன்றிப் பலரதன்று. ஆனல் யாருடையதென்பதும் என்ன காரணத்தினல் முரிக்கப்பட்டதென்பதும் எனக்குத் தெரியாது. ஓ கோமகனே, இவ்விடத்தைப் பாரும்; இரத்தந் தோய்ந்து கழுதைக்குழம்பும் தேர்ச்சக்கரமும் புதைந்து கிடக்கின்றது. இங்கே பயங்கரமான பெருஞ் சண்டை ஒன்று நடந்திருக்கிறது. அந்தச் சண்டை இங்குள்ள அடையாளங்களால் ஒருவனுடனன்றி இரண்டு பேர்களுடன் நடந்ததாகக் காணப்படவில்லை. சேனைகளின் அடிச்சுவடு இவ்விடத்தில் இல்லை. ஆதலால் ஒருவன் செய்த கொடுமைக்காகத் தாங்கள் இவ்வுலகத்தை யெல்லாம் அழிப்பது நியாயமன்று. அரசர்கள் சாந்தமும் அமைதியு முள்ளவர்களாய்க் குற்றத்துக்குத் தக்க தண்டனை செய்வார்கள். தாங்களே எப்பொழுதும் எல்லாப் பிராணிகளுக்கும் களைகண்ணுகவும் கதியாகவு மிருக்கிறீர்கள். யார்தான் தங்கள் மனைவியை எடுத்துப்போனதைச் சரியென்று எண்ணுவார்கள். யாகத்துக்குத் தீக்ஷை செய்துகொண்டவர்களுக்கு நல்லவர்களொருபொழுதும் கெடுதல் செய்யமாட்டார்கள். அதுபோல மலை கடல்களும், தேவகந்தர்வ தானவர்களும் தங்

லக்ஷ்மணர் கோபம்வேண்டாமெனல்.

களுக்கு ஒருபொழுதும் தீமை செய்யமாட்டார்கள். தாங்கள் இப்பொழுது வில்லைக் கையில் பற்றி என்னையும் முனிவர்களையுந் துணையாகக் கொண்டு சீதையைக் கவர்ந்துபோனவனைத் தேடவேண்டும். சீதையை எடுத்துப் போனவனைக் காணும்வரையும் நாங்கள் கடல் மலை காடுகளையும், பயங்கரமான குகைகளையும், நீர் நிலைகளையும், தேவ கந்தர்வ லோகங்களையும் தேடுவோம். தேவர்கள் நல்லபடியாகச் சீதையைக் கொணர்ந்து கொடாராயின் பின்பு தாங்கள் செய்யவேண்டியதைச் செய்யலாம். சீலத்தையும், அடக்கத்தையும், விநயத்தையும், நீதியையும் மேற்கொண்டு தாங்கள் சீதையைப் பெறுதுபோனால் பின்பு இந்திரனுடைய வச்சிராயுதத்துக் கொப்பான பொன்புனைந்த தங்கள் பாணங்களைச் செலுத்தித் தாங்கள் இவ்வுலகம் முழுதையும் அழிக்கலாம்."

சீதையைத் தேடுவோம் எனல்.

---

## அறுபத்தாறுஞ்சருக்கம்.

லக்ஷ்மணர் பெயர்த்தும் இராமரைத் தேற்றுதல்.

---

இராமர் இவ்வாறு சோகமுற்று அநாதைபோலப் புலம்பித் துக்கத்தால் மிகுதூரப்பட்டு மூர்ச்சை அடைந்தாராக, லக்ஷ்மணர் அவருடைய பாதத்தில் பணிந்து அவரைத் தேற்றுதல் செய்யத் தொடங்கி "தசரதர் தவத்தையும் பல புண்ணியங்களையும் இடையறுது புரிந்து தேவர்கள் அமிர்தத்தை அடைந்தது போலத் தங்களைக் குமாரராகப் பெற்றார். தங்களுடைய உத்தம குணங்களினால் தங்கள்மேல் பேரன்பு வைத்திருந்த தசரதர் தங்கள் பிரிவாற்றுமையால் மாண்டார் என்று பரதர்

லக்ஷ்மணர் தேற்றரவு கூறல்.

சொல்ல யான் கேட்டுளேன். ஓ காகுத்த, தாங்களே இந்தத் துன்பத்தைச் சகிக்கீராயின் அறிவிலிகள் வேறு யார் சகிக்கவல்லார்? ஓ புருஷோத்தம, துன்பந் தணிவீராக. துன்பம் ஒவ்வொருவரையும் பற்றினும் கணத்தில் அழிந்துபோகும். இது உலகத்தின் சுபாவம். நகுஷ மகாராஜாவின் குமாரர் யயாதி என்பவர் தேவபதவியையடைந்தும் தவறு செய்தபடியால் அதையிழந்தார். நமது தந்தையின் புரோகிதரான வசிஷ்டமுனிவருடைய குமாரர்கள் நூற்றுவரும் ஒரே நாளில் மாண்டார்கள். எல்லாப் பிராணிகளுக்கும் தாயாகிய இந்தப் பூமிதேவிக்கும் நடுங்குதல் துன்பம் உண்டாகின்றது. உலகத்திற்கு இரு கண்களாக விளங்குபவர்களும் சர்வவஸ்துகளுக்கும் காரணமாயுள்ளவர்களும் மகாபலசாலிகளுமாகிய சந்திர சூரியர்களுக்கும் கிரகணதுன்பம் நேரிடுகின்றது. பெரிய பூதங்களுக்கும் தேவர்களுக்குங் கூடத் தெய்வத்தைக் கடக்க முடியாது. இந்திரன் முதலான தேவர்களுக்கும் சுகமும் துக்கமும் உண்டென்று நான் கேள்விப்பட்டுளேன். ஆகையால், தாங்கள் இவ்வாறு துயரப்படுவது சரியன்று. சீதை இறக்கினென், பிறரால் கவரப்படினென், தாங்கள் அதற்காக ஏழைபோலப் புலம்புவது தக்கதன்று. உண்மை ஞானிகள் எவ்வகைத் துன்பங்கள் நேரிடினும் அசையார்கள். ஆகையால் உத்தமரே, தக்கதியாதென்று ஆராய்ந்தறிக. தங்களைப்போன்ற பேரறிவினை யுடையவர்கள் தங்களறிவினாலேயே நன்மை தீமைகளைப் பகுத்தறிகின்றார்கள். பலன் அறியப்படாதனவும் முடிவு தெரியாதனவுமான காரியங்கள் முயற்சி இன்றி முற்றுப்பெற மாட்டா. தாங்களே இவைகளை எனக்கு எத்தனையோ தரம் சொல்லியிருக்கின்றீர்கள். பிருகஸ்பதிக் கொப்பான அறிவுள்ள தங்களுக்கு யாரால் புத்திசொல்ல முடியும்? தங்களுடைய புத்தியைத் தேவர்களாலும் அளவிட முடியாது. அவ்விதமான புத்தி இப்பொழுது துக்

கத்தால் சோர்ந்து தூங்குகின்றது; நான் அதைத் துயிலு ணர்த்துகின்றேன். இக்ஷ்வாகுகுல ரத்தினமே, தங்களு டைய தேவ வலிமையையும் மானிட வலிமையையும் நன் ருக ஆராய்ந்து பின் பகைவனை யடக்க முயலுங்கள். ஓ புருஷோத்தம, உலகங்கள் எல்லாவற்றையும் அழிப்பது யாது காரணம்பற்றி? ஆகையால் தங்களுடைய கொடிய பகைவனைக் கண்டறிந்து சீதையை மீட்கும் வழியைத் தேடுங்கள்," என்று கூறினர்.

## அறுபத்தேழாஞ்சருக்கம்.

இராமர் இராவணனுல் வெட்டப்பட்டு விழுந்த ஜடாயுவைக் காணல்.

லக்ஷ்மணர் இவ்வாறு நல்ல தகுதியான இனிய வார்த் தைகளைச் சொல்ல, நன்மையை எப்போதும் கடைப் பிடிப்பவராகிய இராமர், அவைகளை ஒப்புக்கொண்டார். உடனே பெருந் தோள்களையுடைய இராமர் தமது அழகான வில்லை ஊன்றிக்கொண்டு நின்று லக்ஷ்மணரை நோக்கி "அடா தம்பி, நாமிப்பொழுது எங்கேபோகவேண்டும், என்னசெய்யவேண்டும், என்ன உபாயத்தினுல் சீதையை அடையலாம் என்பவைகளைப்பற்றி யோசனைசெய்" என்ருர். அதற்கு உத்தரமாக லக்ஷ்மணர் துயருறும் இராமரைப்பார்த்து "ஐய, அரக்கர் கூட்டங்கள் நிறைந்து அநேக கொடிகளும் மரங்களுஞ் சூழ்ந்திருக்கின்ற இந்த ஜனஸ்தானத்தில் சீதையைத்தேடவேண்டும். இங்கேமலைகளின் நடுவிலே துர்க்கங்களும் மலைப்பிளவுகளும் பலவுள்ளன. பல்வகை மிருகங்கள் வசிக்கின்ற குகைகளும் மலைமுழைஞ்சுகளும் கின்னர கந்தர்வர்களுடைய

இராமர் என்ன செய்வதென்று லக்ஷ்மணரை வினவல்.

லக்ஷ்மணர் சீதையைத் தேடல்செய்யத்தக்க தென்றல்.

இருப்பிடங்களும் அநேக மிருக்கின்றன. நாமிருவரும் இவைகளை யெல்லாம் தேடிப்பார்ப்போம். தங்களைப் போன்ற பெரியோர்கள், காற்றின் வேகத்தால் மலைகள் அசையாமல்நிற்பதுபோல, ஆபத்துக்காலங்களில் சிறிதும் மனம் அசையாதிருப்பார்கள்" என்றனர். இந்தச் சொற்களைக் கேட்டு இராமர் வெகுண்டு வில்லில் கொடிய கூரிய பாணத்தைத் தொடுத்துப் பிடித்துக்கொண்டு லக்ஷ்மணரோடு காடெங்குந் தேடினுர். அப்போது அவர் எருவைக்கரசனுகிய ஜடாயு மலைபோலப் பூமியில் விழுந்து தேகமெல்லாம் இரத்தந் தோய்ந்து கிடப்பதைக் கண்டு லக்ஷ்மணரைப் பார்த்து "கழுகுருக்கொண்டு காடெங்குந் திரியும் இவ் வரக்கனே சீதையைப் புசித்தவன். இதில் சந்தேகமே யில்லை. அத்தடங்கண்ணுளைத் தின்றுவிட்டு இவன் இளைப்பாறுகின்றுன். நான் நேராகச் செல்லும் கூர்மையான பாணங்களால் இவனை யிதோ வதைக்கிறேன்" என்றுசொல்லிக் கடல் சூழ்ந்த நிலவுலகத்தை நடுங்கச் செய்வதுபோல் கோபமடைந்து வில்லில் கொடிய பாணங்களைச் சந்தித்துக்கொண்டு கழுகரசனை நோக்கி ஓடினுர்.

இராமர் ஜடாயுவைக் காணல்.

ஜடாயு தசரத புத்திரரான இராமரைப் பார்த்து நுரையுடன் இரத்தத்தைக் கக்கிக் கொண்டு "சிரஞ்சீவி, இப்பெருங்காட்டில் அரிய மூலிகையைப்போல நீர் தேடித்திரியும் அப்பெண்ணணங்கையும் என் பிராணனையும் இராவணன் கவர்ந்துகொண்டு போய்விட்டான். ஓ ராகவா, நீரும் லக்ஷ்மணரு மில்லாத சமயத்தில் வெகு பலசாலியாகிய இராவணன் சீதையைத் தூக்கிக்கொண் டோடுவதை நான் பார்த்து, அவளை மீட்பதற்காக இராவணனை எதிர்த்துப் போர்புரிந்து அவன் இரதத்தை அழித்துக் குடையை முரித்து அவனைப் பூமியில் வீழ்த்தினேன். அவ

ஜடாயு சீதையின் வரலாறு கூறல்.

னுடைய முரிந்த வில் இது. அவனுடைய ஒடிந்த பாணங்கள் இவை. போரி லழிந்த அவனுடைய தேர் இது. என து இறக்கைகளின் வேகத்தால் கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்த அவனுடைய சாரதி இவன். நான் சிறிது சோர்ந்த சமயம் பார்த்து இராவணன் என் சிறகுகளை வாளால் வெட்டிச் சீதையைத் தூக்கிக்கொண்டு ஆகாசமார்க்கமாகச் சென்றுவிட்டான். அரக்கனால் முன்னமே குற்றுயிராக்கப்பட்ட என்னைக் கொல்வது உமக்குத் தக்கதன்று" என்றார். இராமர் இவ்விதமாகச் சீதையின் வரலாற்றைக் கேட்டுக் கையிலிருந்த பெரிய வில்லைக் கீழே எறிந்துவிட்டுப் புள்ளரசனைக் கட்டித்தழுவி மெய்ம்மறந்து பூமியில் விழுந்து லக்ஷ்மணருடன் கதறத் தலைப்பட்டார். இயற்கையில் அடங்கிய மனமுடையவராயினும், துன்பத்தின் மேற் றுன்பத்தால் இராமர் அறிவு மீதூரப்பட்டவராயினார். அடிக்கடி பெருமூச் செறிந்து கஷ்டத்தோடு மூச்சுவிட்டுக்கொண்டு குற்றுயிராய்க் கிடக்கும் ஜடாயுவை இராமர் பார்த்துப் பெருந் துயரடைந்து லக்ஷ்மணரை நோக்கி "நான் நாட்டையிழந்து காட்டில் வசித்துக்கொண்டிருக்கிறேன்; சீதையைப் பறிகொடுத்து விட்டேன்; இந்தப் பறவையும் என் னிமித்தம் உயிரிழந்தது. இவ்விதமாக எனக்கு நேர்ந்த துன்பங்கள் நெருப்பைக்கூட எரித்துவிடும். என்னுடைய துயரங்களைத் தணிப்பதற்காக நான் சமுத்திரத்தில் இறங்கினால் என் துன்பம் அந்தச் சமுத்திரத்தைக்கூட வற்றச்செய்துவிடும். இவ்வுலகத்திலுள்ள தாவரசங்கமங்களுக்குள் என்னைப்போன்ற துரதிர்ஷ்ட முள்ளவன் ஒருவனுமில்லை. ஆகையாற்றான், இப்பொழுது இப்பெருந் துயரத்தை நான் அடைந்தேன். என் தந்தைக்குத் தோழரான இவ்வெருவை வேந்தர் என் காலத்தின் கொடுமையால் உயிரிழந்து பூமியில் கிடக்கின்றார்" என்று கூறினார். இவ்விதமாகவும் இன்னும்

இராமர் புலம்பல்.

பலவிதமாகவும் புலம்பிக்கொண்டு இராமர் தமது தந்தை மேல் வைத்திருந்த அன்பால் அப்பறவை வேந்தனைத் தடவினார். சிறகு சிதைந்து இரத்தந் தோய்ந்து கிடக்கும் ஜடாயுவை இராமர் தழுவி "என் உயிருக்கொப்பான சீதை எங்கே போய்விட்டாள்" என்று சொல்லிக் கொண்டு பூமியில் விழுந்தார்.

---

## அறுபத்தெட்டாஞ்சருக்கம்.

ஜடாயுவைத் தகனஞ்செய்தல்.

---

எல்லா உயிரிடத்தும் அன்புள்ள இராமர் இராவணனால் கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்து கிடந்த ஜடாயுவைப்பார்த்து, லக்ஷ்மணரைநோக்கி "என்நிமித்தம் இந்தப் பறவை இராவணனால் கொல்லப்பட்டு உயிரை இழந்தது. அதன் உயிர் மிகமெலிந்து சிறிது மாத்திரமே தேகத்தில் தங்கி நிற்கிறது; குரல் விழுந்துவிட்டது; கண்கள் பார்வை குன்றிவிட்டன" என்று கூறிக் கழுகரசனை விளித்து "ஓ ஜடாயு, உமக்கு நன்மை யுண்டாகுக. கூடுமாயிருந்தால் இராவணன் சீதையை எவ்வாறு கவர்ந்து கொண்டு போயினனென்றும், உம்மை எவ்வாறு கொன்றானென்றும் சொல்லும். இராவணன் சீதையை என் களவாக எடுத்துக்கொண்டு போனான்? அவன் என் அரிய நாயகியைக் கவர்ந்து கொண்டுபோக நான் அவனுக்கு என்ன குற்றஞ் செய்தேன்! அவன் அவ்வாறு அவளைக் கொண்டுபோகும்பொழுது சந்திரனுக் கொப்பான அவளுடைய அழகிய முகம் எவ்வாறிருந்தது? ஓ பறவை வேந்த, அவள் அப்போது என்ன சொன்னாள்? அவ்வரக்கனுடைய பலம் என்ன? அவனுடைய உருவம் எவ்வாறிருக்கும்? அவன் செயல் யாது? அவன் வசிப்பது எங்கு? பெரியோய், சொல்லும்" என்று

இராமர் ஜடாயுவை இராவணனைப்பற்றி வினவல்.

கேட்டார். இவ்வாறு எளியோர் போலப் புலம்பும் இராமரை நோக்கித் தருமாத்துமாவாகிய ஜடாயு மிக நுணுகிய குரலால், "மாயையால் பெருங் காற்றும் பெருமழையும் உண்டுபண்ணி, ராக்ஷசேஸ்வரனாகிய இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போனான். நான் களைத்துவிட்ட சமயத்தில் என்னுடைய இறக்கைகளிரண்டையும் வெட்டிவிட்டு அவன் சீதையை எடுத்துக்கொண்டு தென் திசைக் கேகினான். ஓ ராகவ, எனது பிராணன் போகப்போகிறது. எனது கண்கள் சுழன்றுகொண்டிருக்கின்றன. என் கண்முன் இலாமிச்சம் வேர் போன்ற மயிர்களையுடைய பொன் மரங்கள் தோன்றுகின்றன. பொருளை இழந்தவன் திரும்பி அடைதற்கேற்ற முகூர்த்தத்தில் இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போயினான். இந்த முகூர்த்தத்திற்கு விந்தம் என்று பெயர்; இதை இராவணன் அறியான். இந்த முகூர்த்தத்தில் ஒரு பொருளைக் கவர்ந்தவன் தூண்டிலைக் கவ்வின மீன்போல் விரைவில் மாண்டுபோவான். ஆகையால், சீதையை மீட்டுக்கொள்வதைப்பற்றிச் சிறிதும் சந்தேகம்வேண்டாம். இராவணனைப் போரில் வதைத்து நீர் சீக்கிரம் சீதையைக் கூடிச் சந்தோஷமடைவீர்" என்று கூறினார். அப்போது கழுகரசனான ஜடாயுவின் வாயிலிருந்து மாமிசத்துடன் இரத்தம் வழிந்தது. பிராணன் போகும் அத்தருணத்திலும் ஜடாயு அறிவு கெடவில்லை. "இராவணன் விச்சிரவஸின் குமாரன், வைச்சிரவணன் தம்பி" என்று சொல்லி அவர் தமது அரிய பிராணனை விட்டார். அப்போது இராமர் கைகூப்பிக்கொண்டு ஜடாயுவை நோக்கி "கொஞ்சம் பேசும், கொஞ்சம் பேசும்" என்று பெயர்த்தும் பெயர்த்தும் கேட்டார். அப்படி அவர் கேட்டுக்கொண்டிருக்கும்போதே ஜடாயுவின் பிராணன் தேகத்தைவிட்டு ஆகாயத்திற் கிளம்பிற்று. அப்போது கழுகரசர்

ஜடாயு இராவணனை வென்று சீதையை மீட்பீர் என்றல்.

தமது தலையைப் பூமியில் குத்திக்கொண்டு கால்களையும் உடலையும் நீட்டி உயிர்போய்ப் பூமியில் விழுந்தார். மலை போன்ற பெரிய உடலையும் சிவந்த கண்களையுமுடைய புள்ளரசர் மாண்டு விழுந்ததைக் கண்டு, இராமர் துக்கமடைந்து, லக்ஷ்மணரைப்பார்த்து "அரக்கர்கள் சஞ்சரிக்கும் இந்தத் தண்டகாரணியத்தில் அநேக வருஷம் சுகமாக வசித்துக்கொண்டிருந்து கடைசியாய் இப்பொழுது இப்புள்ளரசர் மாண்டுவிட்டார். வெகுகாலம் ஒருவித குறைவுமின்றி வாழ்ந்து ஜடாயு இப்போது உயிர் துறந்தார். விதியைவெல்ல ஒருவராலும் முடியாது. பார் லக்ஷ்மணா, எனக்கு உபகாரமாகச் சீதையை மீட்கமுயன்ற ஜடாயு மிக்க பலசாலியாகிய இராவணனால் கொல்லப்பட்டார். பழமையாகிய பெரிய ராஜாதிகாரத்தைக் கைவிட்டு என்னிமித்தம் இப்புள்ளரசர் பிராணனை நீத்தார். இயங்குதிணைப் பொருள்களுள் பறவைகளுள்ளும் தர்மமும் வீரமும் சத்தியமு முள்ளவர்களும் எல்லார்க்கும் புகலிடமானவர்களும் இருக்கிறார்கள். என்னிமித்தம் உயிரிழந்த இந்த ஜடாயுவிற்காக நான் துக்கப்படுகிறதுபோலச் சீதையை இழந்ததற்குக்கூட நான் துக்கப்படவில்லை. மிக்க புகழ்படைத்த தசரதரைப்போல இந்தப் புள்ளரசர் என்னால் பணிந்துபோற்றப்படத்தக்கவர். ஓ லக்ஷ்மணா, நீ விறகு கொண்டுவா. நான் தீமூட்டி அதனால் எனக்காக மாண்ட இப்புள்ளரசரின் உடலைத் தகனம் செய்கிறேன். சுமித்திரை புத்திர, பயங்கரமான முகத்தையுடைய அரக்கனால் கொல்லப்பட்ட இப்புள்ளரசரின் உயிரற்ற உடலை ஈமத்தில் ஏற்றி நான் தகனம்செய்வேன். பெரிய வலி படைத்த பறவைவேந்தே, என்னால் சம்ஸ்காரம்பண்ணி அனுப்பப்பட்டு, எப்போதும் தருமங்களைச் செய்பவர்களும் ஆகிதாக்கினிகளும் போர்க்களத்தில் புக அஞ்சாத வீரர்

ஜடாயு மரணம்.

இராமர் ஜடாயுவிற்காகத் துக்கப்படல்.

களும் பூதானஞ்செய்பவர்களும் அடையும் பெரும் பதவியை நீர் அடைவீர்" என்றார். இவ்வாறு சொல்லித் தர்மாத்துமாவாகிய இராமர் துக்கமடைந்தவராய் ஈமத்தின் மேல் ஜடாயுவினுடலை வைத்து அவரைத் தமது உறவினனைப்போலத் தகனம் பண்ணினர். பின்பு, பலமுள்ள இராமர் லக்ஷ்மணருடன்காட்டுக்குச்சென்று கொழுத்த பெரிய மான்களைக் கொன்று அவைகளின் மாமிசத்தை எடுத்துப் பிண்டங்கள்செய்து பசும் புல்தரையில் புல்லையுந் தழையையுங் கொண்டு பாயல்பண்ணி அதன்மேல் அப்பறவைக்குப் பிண்டம் போட்டார். பின்பு ஜடாயுவினுடைய உயிர் சுவர்க்கம் சேருவதற்காக இராமர் பிராமணர்கள் ஓதும் மந்திரங்களை யோதினர். பிறகு அவ்விரு இராஜகுமாரர்களும் கோதாவரி நதிக்குச்சென்று ஸ்நானம்பண்ணி அவ்விடத்தில் சாஸ்திரப்பிரகாரம் கழுகரசனுக்குத் தர்ப்பணம் செய்தார்கள். புகழ்பெற்ற பெருஞ்செய்கை செய்து போரில் உயிரிழந்த கழுகரசனாகிய ஜடாயு முனிதுல்லியரான இராமரால் தகனம் முதலிய சடங்குகள் செய்யப்பெற்று மேலானபதவியை யடைந்தார். பறவை வேந்தனைத் தமது பிதாப்போலப் புத்திபண்ணி அவனுக்குத் தர்ப்பணம் செய்துவிட்டு இராமலக்ஷ்மணர்கள் தேவோத்தமர்களாகிய விஷ்ணுவையும் வாசவனையும்போலச் சீதையைத் தேடும் வண்ணம் காட்டினுள் நுழைந்தார்கள்.

ஜடாயுவை இராமர் தகனம் செய்தல்.

## அறுபத்தொன்பதாஞ்சருக்கம்.

இராமலக்ஷ்மணர்கள் கவந்தனைக் காணுதல்.

அவ்வாறு ஜடாயுவுக்கு நீர்க் கடன் செய்துவிட்டு இராமலக்ஷ்மணர்கள் இருவரும் வில்பிடித்த கையர்களாய்ச் சீதையைத் தேடிக்கொண்டு அக்காட்டில் தென்

மேற்குத் திசையாகச் சென்றார்கள்; பின்பு தெற்கே திரும்பி ஜனங்கள் நடக்கப்பெறாத அரிய வழியொன்றை அடைந்தார்கள். அவர்கள் சென்ற காடு பெருஞ் சூழல்களும், மரங்களும், கொடிகளும் நெருங்கி நுழைதற்கரியதாய்ப் பார்ப்பதற்கு வெகு பயங்கரமாக விருந்தது. தென்புறமாகச் சென்று அந்தக் கொடிய பாழ்ங்காட்டை ரகுகுலோத்தமர்களான இராம லக்ஷ்மணர்களிருவரும் விரைந்து கடந்து ஜனஸ்தானத்திலிருந்து மூன்றுகுரோச தூரத்திலுள்ள அடர்ந்த கிரௌஞ்சாரண்ணியத்தைக் கிட்டினார்கள், அக்காடு மேகக் கூட்டங்கள்போல் இருள்செறிந்து, எங்கே பார்த்தாலும் புன்னகை கொள்வது போல் பல நிறமான அழகிய பூக்கள் பொலிந்து, பலவித பறவைகளும் விலங்குகளும் நிரம்பியிருந்தது. அவர்கள் சீதையை யிழந்த துயரத்தால் ஏங்கி ஆங்காங்கு உட்கார்ந்து அக்காடு முழுதும் அவளைத் தேடினார்கள். அவ்விரு சகோதரர்களும் மூன்று குரோசதூரம் கிழக்கே சென்று கிரௌஞ்சாரண்ணியத்தைக் கடந்து மதங்காச்சிரமத்தைக் கண்ணுற்றார்கள். பலவித மரங்களும் அடர்ந்த சூழல்களும் நெருங்கி, அநேக மிருகங்களும் பறவைகளும் மலிந்துள்ள அப்பயங்கரமான காட்டைத் தேடியபின் ஒரு மலையின்மேல் பாதாளம்போல் ஆழ்ந்து எப்போதும் இருள் செறிந்திருந்த குகை யொன்றை அவ்விரு ராஜகுமாரர்களும் கண்டார்கள். அதற்குச் சமீபத்தில் அவர்கள் செல்லும்போது அங்கே தீரமில்லாத ஏழைச் சனங்களுக்கு மிக்க பயத்தை யுண்டாக்குவதும் பார்ப்பதற்கு அருவருப்பானதும் பயங்கரமானதுமான பெரிய வடிவத்தை உடையவளும், கூரிய பற்களும் சரிந்த பெரிய வயிறும் கடின சரீரமு முடையவளும், கோர மிருகங்களைப் புசிப்பவளும், பயங்கரமான விரிந்த கூந்தலை யுடையவளுமான ஒரு கொ

கிரௌஞ்சாரண்ணியம் செல்லல்.

மதங்காச்சிரமம் காணல்.

டிய அரக்கிநின்றாள். அவ்விருவர்களையும் கண்டவுடன், அவள் வேகமாக ஓடிவந்து "வா, நாம் இருவரும் விளையாடலாம்" என்று சொல்லி இராமருக்கு முன்னர்ச் சென்றுகொண்டிருந்த லக்ஷ்மணரைக் கைப்பற்றினாள். அவள் லக்ஷ்மணரைக் கட்டிக்கொண்டு "என்பெயர் அயோமுகி; நாத, நான் உம்மேல் காதல்கொண்டது உமக்குப் பெரிதும் நல்லது. வீர, மலை முழைஞ்சுகளிலும், ஆற்றோரங்களிலும், என்னோடெப்போதும் விளையாடிக்கொண்டிரும்" என்றாள். அவ்வண்ணம் அவள் சொல்ல, பகைவரேறாகிய லக்ஷ்மணர் கோபமடைந்து வாளை ஓங்கி அவளுடைய மூக்கையும் காதையும் முலையையும் வெட்டித் தள்ளினார். இவ்வாறு மூக்கும் காதும் அறுபட்ட பயங்கரமான தோற்றத்தையுடைய அவ்வரக்கி கதறிக்கொண்டு வந்த வழியே ஓடினாள். அவள் ஓடினபின் இராமலக்ஷ்மணர்கள் விரைந்து சென்று ஒரு அடர்ந்த காட்டை அடைந்தார்கள். அப்போது மிக்க புகழும், சத்தியமும், நல்லொழுக்கமுமுள்ள லக்ஷ்மணர் வெகு பராக்கிரமமுள்ள இராமரைப் பார்த்துக் கைகூப்பி; "ஐய, எனது இடக்கை துடிக்கிறது. மனம் கலக்கமுறுகின்றது. வேறு பல அபசகுனங்களும் உண்டாகின்றன. ஆகையால், தாங்கள் இப்போதே உடை தரித்துக்கொண்டு தங்கள் நன்மையை எண்ணி நான் சொல்லுகிறபடி நடந்துகொள்ளும். இந்த அபசகுனங்களால் நமக்கு ஒரு தீங்கு சீக்கிரம் நேரிடும் என்று எண்ணுகின்றேன். ஆயினும், ஓ ராகவ, இக்கொடிய வஞ்சுளன் செய்கின்ற பயங்கரமான சத்தத்தால் நமக்கே இதில் வெற்றி கிடைக்கும் என்று தோன்றுகிறது" என்று சொன்னார். அப்பால் அவர்கள் அந்தக்காடு முழுதையும் தேடும்பொழுது காட்டை ஒடிப்பதுபோன்ற ஒரு பெரும் சத்த முண்டாயது. அதனை நான்குபுறத்திலும் ஒரு

அயோமுகி வரவு.

அபசகுனம் உண்டாதல்.

பெருங் காற்றுச் சூழ்ந்துகொண்டது. காடு முழுதும் நிறைந்து ஒரு பேரிரைச்சல் கேட்டது. அச்சத்தம் எங்கிருந்து வந்ததென்று உற்று நோக்கின இராமலக்ஷ்மணர்கள் மிக்க பெரிய உருவத்தையும் பெரிய தொடையையுமுடைய அரக்கனொருவனைக் கண்டார்கள். அவர்களுக்கு முன் தோன்றிய அவ்விராக்ஷசனுடைய ரூபம் தலையற்ற கபந்தமாய் வயிற்றில் வாயுடையதாயிருந்தது. அவனுடைய உடலம் கூரிய மயிர்கள் மூடி ஒரு பெரிய மலைபோன்றிருந்தது. அவன் நிறம் கார்மேகம்போன்றிருந்தது; குரல் மேக முழக்கம்போன்றிருந்தது. அவனுடைய விசாலமான கொடிய ஒற்றைக்கண் மார்பிலுள்ள நெற்றியில் தீப்போல் எரிந்துகொண்டிருந்தது. பெரிய இமைகள் மஞ்சள் நிறமுள்ளவைகளா யிருந்தன. வாய் மிகவும் அகன்றதாயும் பெரிய பல்வரிசைகளை யுடையதாயுமிருந்தது. அந்தப் பயங்கரமான வாயை அவன் நாக்கைநீட்டி அடிக்கடி நக்கிக்கொண்டிருந்தான். அவ்வரக்கன் யோசனை தூரம் தனது இரண்டு கைகளையும் நீட்டி அவற்றிற்குள் அகப்பட்ட மான் கரடி சிங்கங்களைப் பிடித்துப்புசித்தான். மற்ற மிருகங்கள் பக்ஷிகளை யெல்லாம் கையாற் பிடித்தெறிந்துகொண்டிருந்தான். அவன் வழியை மறித்து இராமலக்ஷ்மணர்கள் வரவை எதிர்பார்த்திருந்தான். அவர்கள் ஒரு குரோசதூரஞ் சென்று கைகளினால் மிருகங்களை எல்லாம் வழிமறித்துத் தடுத்துக்கொண்டிருக்கிற பயங்கரமான கோரரூபமுள்ள கவந்தனைக் கண்ணுற்றார்கள். அப்போது கவந்தன் தனது பெரிய கைகளை நீட்டி இராமலக்ஷ்மணர்களைப் பிடித்துத் தனது பலத்தினால் நெரித்தான். அவன் கையில் சிக்கி வாளும் வில்லுமேந்திய பெருந்தோள்களையுடைய மகா பலவான்களாகிய இராமலக்ஷ்மணர்கள் நலிவடைந்தார்கள். இராமர் சூரத்துவமும் பொறுமையு முடையவராதலால் அதிகம் வருந்தவில்லை; லக்ஷ்மணர் சிறுபிள்ளையா

கவந்தனை எதிர்ப்படல்.

கவந்தன் கையில் அகப்படல்.

மையாலும் பொறையின்மையினாலும் மிகவும் துன்பம் அடைந்தார். லக்ஷ்மணர் அதிக துயருற்றுத் தமையனாரைப் பார்த்து "வீர, என்னைப்பாரும்; நான் இவ்வரக்கன் கையில் சிக்கிக்கொண்டேன். என்னை விட்டுவிட்டு, ஓ ராகவ, நீர் தப்பித்துக்கொள்ளும். என்னைப் புலியாகக் கொடுத்துவிட்டு நீர் சுகமாகத்தப்பித்துக் கொள்ளும். நீர் சீக்கிரம் சீதையை யடைந்து நமது பழைய இராச்சியத்தையும் நிச்சயமாகப் பெற்றுக்கொள்வீரென்று நான் எண்ணுகிறேன். ஓ காகுத்த, நீர் அப்படிச் சிம்மாசனமேறின போது என்னை மறவாதிராக" என்றார். லக்ஷ்மணர் இவ்வாறுசொல்ல, இராமர் அவரைப்பார்த்து "வீர, வீணில் அஞ்சற்க. உன்னைப்போன்ற வலியுள்ளவர்கள் ஒருபோதும் பயத்தால் நலியமாட்டார்கள்" என்றார். அப்போது அந்தக் கொடிய பெருந் தோள்களையுடைய அரக்கனாகிய கவந்தன் இராமலக்ஷ்மணர்களை நோக்கி "எருத்தின் கழுத்துப்போன்ற கழுத்தையுடையவராய்ப் பெரிய வாளும் வில்லுமேந்திய நீவிர் யாவர்? இந்தப் பயங்கரமான இடத்துக்குவந்து என் கண்ணில் காணப்பட்டுவிட்டீர்கள். இவ்விடத்தில் நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்? எதற்காக இவ்விடம் வந்தீர்கள்? இங்கே பசியால் வருந்திக்கொண்டிருக்கும் என்னிடம் நீங்கள் விற்களையும் கத்திகளையும் அம்புகளையும் ஏந்திக்கொண்டு கூரிய கொம்புள்ள இரண்டு ரிஷபங்கள் போல வந்திருக்கிறீர்கள். என்னை விரைந்து கிட்டியபின் நீங்கள் உயிர் பிழைப்பது கஷ்டம்" என்றான். கொடியனாகிய கவந்தன் இவ்வாறு கூற இராமர் முகம் வாடி லக்ஷ்மணரைப் பார்த்து "உண்மையான பராக்கிரமமுடையவனே, நமக்கு ஒன்றன்பின் ஒன்றாய்ப் பெருந்துக்கங்கள் விளைந்துகொண்டிருக்கின்றன. உயிர் போதற் கேதுவாகிய பெருந்துக்கம்

லக்ஷ்மணர் இரங்கல்.

கவந்தன் நீங்கள் எனக்கிரையானீர்கள் எனல்.

சீதையை நாமிழந்ததனால் முன்னரே நமக்கு உண்டாகியிருக்கிறது. ஓ லக்ஷ்மண, விதியிற் பெரிய வலியுள்ளது யாது? உன்னையும் என்னையும் விதியின் வலியால் துக்கம் வந்து சேர்ந்துகொண்டதுகாண். அதைத் தடுக்க முடியாதென்பது நிச்சயம். பிராணிகளைத் துக்கத்திற்குள்ளாக்குவது விதிக்குக் கஷ்டமன்று. விதியின் வலியால் வச்சிரகவசமணிந்த பெரிய வீரர்களும் மணலால் கட்டப்பட்ட அணைபோல அழிந்து விடுகிறார்கள்" என்றார். இவ்வாறு திட்பமும் உண்மையும் பராக்கிரமமு முடைய பெரிய புகழ் பெற்ற இராமர் லக்ஷ்மணருக்குக் கூறித் தமது புத்தியின் வலிமையால் தம்மனத்தைத் தேற்றிக்கொண்டார்.

இராமர் தெளிவடைதல்.

---

## எழுபதாஞ்சருக்கம்.

கவந்தன் இராமலக்ஷ்மணர்களை அறிந்துகொண்டது.

---

கவந்தன் தனது கைக்குள்ளகப்பட்ட இராமலக்ஷ்மணர்களைநோக்கி "ஓ க்ஷத்திரியோத்தமர்களே; நான் பசியாயிருப்பதைப் பார்த்து நீங்கள் இங்கே நிற்கிறீர்களா? அறிவிழந்த நும்மை விதி எனக்கு உணவாகக் கொண்டுவந்து சேர்த்துளது" என்றான். இதைக்கேட்ட லக்ஷ்மணர் மிகவும் வருத்தமடைந்து தமது பேராற்றலைக் காட்டவேண்டி இராமரை நோக்கி "இக்கொடிய அரக்கன் எங்களிருவரையும் பற்றிக்கொள்வான். அதற்குமுன் நாங்கள் விரைந்து வாளினால் இவனுடைய பெருங் கைகளிரண்டையும் வெட்டுவோம். இந்தப் பெரிய பயங்கரமான உருவத்தையுடைய ராக்ஷசன் தனது தோள்வலியைக்கொண்டே இவ்வுலகத்தை யெல்லாம் வெற்றிகொண்டு நம்மையும் இப்போது கொல்லக்

லக்ஷ்மணர் கவந்தன் கையை வெட்டுவோமெனல்.

கருதுகிறான். யாகத்திற்குக் கொண்டுவரப்பட்ட பசுப்போலத் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளக் கூடாதவர்களைக் கொல்வது க்ஷத்திரியர்களுக்கு நிந்தையாகும்" என்று அச்சமயத்திற்குத் தக்க வார்த்தைகளைச் சொன்னார். இவர்களிவ்வாறு பேசுவதைக் கேட்ட கவந்தன் கோபங்கொண்டு வாயைத்திறந்து அவர்களை விழுங்க முயன்றான். உடனே இராமலக்ஷ்மணர்கள் காலத்தையும் இடத்தையும் நோக்கி வெகுசந்தோஷமாகித் தங்களுடைய வாளினால் கவந்தன் தோள்களிலிருந்து அவனுடைய கைகளை வெட்டித் தள்ளினார்கள். வலப்பக்கத்தில் நின்ற இராமர் அவனுடைய வலக்கையை ஒரு கணப்பொழுதினுள்வெட்டினார்; வீரராகிய லக்ஷ்மணரும் அப்படியே அவனுடைய இடக்கையை வெட்டினார். கைகள் வெட்டுண்ட கவந்தன் மேக முழக்கம்போலப் பெருங் கூச்சலிட்டு ஆகாசம் பூமி எண்டிசைகளாகிய எவ்விடத்துங் கேட்கக் கதறிக்கொண்டு பூமியில் விழுந்தான். கைகள் வெட்டுண்டு தனது தேகமெல்லாம் இரத்த வெள்ளம்பெருக நின்ற அரக்கன் அவர்களைப் பார்த்து "நீங்கள் யார்?" என்று பரிந்து கேட்டான். இவ்வாறு கவந்தன் கேட்க அழகான லக்ஷணங்கள் அமைந்த லக்ஷ்மணர் அவனுக்கு ராகவரைப் பற்றிச் சொல்லலுற்று "இவர் இக்ஷ்வாகு வம்சத்தில் தோன்றி இராமர் என்று பெயர்பெற்றவர். நான் அவருடைய தம்பி லக்ஷ்மணன். அரசனாகமுடிசூட்டப்படப்போகும்போது தாயாரால் சதிசெய்யப்பட்டு அவர் எல்லாவற்றையுந் துறந்து தன் மனைவியோடும் என்னோடும் காட்டிற்கு வந்துவிட்டார். அடர்ந்த காட்டில் வசித்துக் கொண்டிருக்கும்பொழுது தெய்வப்பெண்போன்ற இவருடைய மனைவியை ஒரு அரக்கன் தூக்கிக்கொண்டு போய் விட்டான். அவளைத் தேடிக்கொண்டு நாங்கள் இங்குவந்

கந்தன் கையை வெட்டல்.

லக்ஷ்மணர் கவந்தனுக்குத் தம் வரலாறு கூறல்.

தோம். நீ யார்? துடைகள் முரிந்து வாய் மார்பில் அமைக்கப்பட்டு இக்கவந்த உருவத்துடன் நீ ஏன் இக்காட்டில் வசித்துக்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார். இவ்வாறு லக்ஷ்மணர் நல்லவார்த்தையால் கேட்க, கவந்தன் சந்தோஷமடைந்து இந்திரன் சொற்களை நினைத்துக் கொண்டு அவர்களைப்பார்த்து "புருஷோத்தமர்களே, உங்களுடைய வரவு நல் வரவாகுக. என்னுடைய பாக்கியத்தினால் நான் உங்களைக் கண்டேன். என்னுடைய நல் வினையினாலேயே நீங்கள் என் இரண்டு கைகளையும் வெட்டினீர்கள். நான் எவ்வாறு என் அகந்தையால் இந்த விகாரமான ரூபத்தை அடைந்தேனென்பதைச் சொல்லுகிறேன் கேளுங்கள்" என்றான்.

---

## எழுபத்தொன்றாஞ்சருக்கம்.

கவந்தன் தன் வரலாறு கூறுதல்.

---

"பெருந்தோள்களையும் பேராற்றலையு முடைய இராம, இந்திரனையும் சந்திராதித்தியர்களையும் போன்ற சொல்லமுடியாத என் அழகினால் நான் முன் மூவுலகங்களிலும் கீர்த்தி பெற்றிருந்தேன். நான் அந்த அழகிய ரூபத்தை யொழித்துக் கோரரூபங்கொண்டு எத்திசைகளிலும் காட்டில் வசிக்கும் ரிஷிகளைப் பயமுறுத்திக்கொண்டு வந்தேன். அப்படிச் செய்து வரும்பொழுது ஒருநாள் நான் இந்தக் கோரரூபத்தைத் தரித்துக் காட்டில் பழம் பறித்துக்கொண்டிருந்த ஸ்தூலசிரசென்ற பெரிய முனிவரைப் பயமுறுத்தினேன். அவர் கோபங்கொண்டு "மனிதர் எல்லாராலும் வெறுக்கப்படும் இக் கோர ரூபத்தை நீ அடையக்கடவாய்" என்று என்னைச் சபித்தார். நான் அவரை வணங்கி என் சாப விமோச

கவந்தன் கோர ரூபமடைந்த வரலாறு.

ணத்திற்காகப் பிரார்த்திக்க, அவர் "இராமர் உன் கைகளை வெட்டி உன்னை ஒரு பெரிய காட்டில் தகனஞ் செயயும்போது நீ உன் அழகான உருவத்தை அடையக் கடவாய்" என்றார். ஓ லக்ஷ்மண, நான் தனுவினுடைய குமாரன். போர்க்களத்தில் இந்திரனிட்ட சாபத்தினால் நான் இந்த உருவம் அடைந்தேன். நான் பிரமனைக் குறித்துத் தவம்புரிந்து அவரைச் சந்தோஷப் படுத்தித் தீர்க்காயுசு பெற்றுக்கொண்டேன். அதனால் செருக்கடைந்து தீர்க்காயுசுபெற்ற என்னை இந்திரன் என்ன செய்வான் என்று அவனோடு போர்புரிந்தேன். அப்போது அவனால் எறியப்பட்ட சதகோடியாகிய வச்சிராயுதத்தினால் எனது துடைகள் முரிந்து தலை உடலுக்குள் புதைந்தது. அது கண்டு நான் என் உயிரை வாங்கிவிடும்படி கேட்டும் அவன் என்னை யமலோகத்திற் கனுப்பவில்லை; "பிரமதேவர் கொடுத்த வரம் பொய்யாகாது" என்று மாத்திரம் சொன்னான். அதற்கு நான் "உன் வச்சிராயுதத்தினால் அடிபட்டு என் தலையும் துடையும் வாயும் நொருங்கியுளேன்; உணவின்றி நான் எவ்வாறு நெடுநாளைக்கு உயிரோ டிருப்பேன்" என்றேன். அது கேட்டு இந்திரன் என்கைகளை யோசனை நீளமுள்ளவைகளாகச் செய்து கூரிய பற்களை யுடைய என் வாயை வயிற்றில் வைத்தான். அன்றுதொட்டு நான் என் நெடிய கைகளை நீட்டிக் காட்டில் வாழும் சிங்கம், புலி, மான், நரிகளைப் பிடித்துப் புசித்துக்கொண் டிருந்தேன். இந்திரன் "இராமலக்ஷ்மணர் உன் கைகளைப் போரில் வெட்டின போது நீ சுவர்க்கம் அடைக" என்றான். ஐயா ராஜோத்தமனே, என்னுடைய உடலைப் போக்கவரும் இராமர் எனது கைக்குள் நிச்சயமாய் அகப்படுவார் என்ற நம்பிக்கையினால் நான் இந்தக்காட்டில் எதிர்ப்படும் ஒவ்வொரு மிருகங்களையும் சந்தோஷத்தோடு பிடித்துக்கொண்டி

கவந்தன் தலையற்ற வரலாறு.

ருந்தேன். அந்த இராமர் நீரே. ஓ ராகவ, உமக்கு நன்மை யுண்டாகுக. இராமர் அன்றி வேறெவராலும் என்னைக் கொல்ல முடியாதென்று அம்மாமுநி உண்மையாகச் சொன்னார். உம்மால் தகனம் பண்ணப்பட்டபின் நான் நீர் யாருடன் சிநேகம் செய்யவேண்டும் என்று நல்ல புத்திகள் சொல்வேன்" என்று தநுவின் குமாரன் சொல்ல, மகாத்துமாவாகிய இராமர், லக்ஷ்மணர் கேட்கும் படியாக, அவனை நோக்கி "நானும் என் தமபியும் ஜனஸ்தானத்தி லில்லாதிருந்த சமயம் பார்த்து எனது புகழ் பெற்ற மனைவி சீதையை இராவணன் தூக்கிக்கொண்டு போய்விட்டான். அவன் பெயர்மாத்திரம் தெரியுமே அன்றி அவன் தோற்றம், இடம், வலி முதலியவைக ளொன்றும் எனக்குத் தெரியாது. இவ்வாறு துக்கத்தி லாழ்ந்து அநாதைகளாக அலைந்துகொண்டு திரிபவர்களும் பிறருக்கு எப்போதும் நன்மையே புரிபவர்களுமாகிய எங்களுக்கு நீ தயவுசெய்யத் தகும். வீர, நாங்கள் யானைகளால் முறிக்கப்பட்டு உலர்ந்திருக்கும் கட்டைகளைக் கொண்டுவந்து பெருங்குழியில் போட்டுத் தீமூட்டி உன்னைத் தகனம்செய்கிறோம். சீதையை எவன் கவர்ந்து சென்றான் என்றும் எங்கே கொண்டு போயினான் என்றும் உனக்குத் தெரிந்தால் அவசியம் எங்களுக்குச் சொல்லு" என்று கேட்டார். அப்போது பேசுவதில் வெகு சமர்த்தனான அரக்கன் அவரை நோக்கி "எனக்குத் திவ்விய ஞானம் இல்லை. அதனால் சீதை யிருக்குமிடத்தை அறியேன். உங்களால் தகனம்செய்யப்பட்டு என்னுடைய சுயரூபத்தை அடைந்தபின் சீதையைப் பற்றி எல்லாம் சொல்லவல்லவ னொருவனை உங்களுக்கு நான் சொல்லுவேன். இந்தத் தேகம் எரிந்துபோம்வரையில் சீதையைத் தூக்கிப்போன மகா வீரியம் பொருந்திய அரக்கனை இன்னான் என்று அறியும் ஞானம் எனக்

இராமர் கவந்தன் தயவிற்கு வேண்டல்.

இல்லை. யான் சாபத்தினல் எனது ஞானத்தை இழந்து விட்டேன். என் கொடிய செயலால் எனக்கு இந்த விகார ரூபம் உண்டாயிற்று. சூரியன் தனது களைத்த பரிக ளுடன் மேற்றிசையில் சென்று மறையுமுன் என்னைக் குழியில் தள்ளிச் சாஸ்திரப் பிரகாரம் தகனம் செய்யும். ஓ இராகவ, உம்மால் தகனம் செய்யப்பட்டதன்பின் அந்த ராக்ஷசனை அறிந்தவ னொருவனை நான் உமக்குச் சொல்லுவேன். நற்குணமமைந்த அவனேடு நீர் நட்புச் செய்துகொள்ளும். அவன் உமக்குத் தகுந்த உதவி செய் வான். இந்த மூவுலகங்களிலும் அவனுக்குத் தெரியாத தொன்றில்லை. அவன் முன்னொருகாலத்தில் ஒருகாரணத் தால் மூவுலகங்களையும் சுற்றிவந்துளான்" என்ருன்.

---

## எழுபத்திரண்டாஞ்சருக்கம்.

கவந்தன் இராமருக்குச்

சுக்கிரீவனேடு நட்புச்செய்துகொள்ளும்படி கூறல்.

---

கவந்தன் இவ்வாறு கூறியபின் இராமலக்ஷ்மணர்கள் அவனை ஒரு மலைக்குகைக்குக் கொண்டுபோய்த் தகனம் செய்தார்கள். லக்ஷ்மணர் ஈமத்திற்கு நெருப்புவைத்தார். அது நாலுபக்கமும் நன்ருகப்பற்றி எரிந்தது. நெய்போல் வதாகிய கவந்தனுடைய பெரிய தசை செறிந்த சரீரத்தை அந்தத் தீ மெதுவா கத் தகனம்செய்தது. அதன்பின் அப் பெரிய ராக்ஷசன் ஈமத்தினின்றும் புகை யற்ற அக்கினிப் பிழம்புபோல எழுந்து சுத்தவஸ்திரம் தரித்துத் திவ்விய மாலை யணிந்து விளங்கினன். அவன் நல்லாடை புனைந்து, அவயவங்களிலெல்லாம் ஆபரணங் கள் அணிந்து, வெகு சந்தோஷத்துடன் ஈமத்தினின்

கவந்தன் சுவரூபம் அடைந்தது.

றும் ஆகாயத்தில் எழுந்து, அன்னங்கள் பூட்டப்பட்ட புகழ்பெற்ற தேவவிமானத்தில் ஏறி, வானில் 'நின்று திக்குக்களையெல்லாம் தனது தேககாந்தியால் விளக்கஞ் செய்துகொண்டு இராமரைநோக்கி "ஓ இராகவ, யாதுகாரியம் செய்தால் நீர் உண்மையாய்ச் சீதையை அடையலாமென்பதைக்கேளும். உலகத்தில் அரசர்கள் தாம் விரும்பிய பொருள்களை யடையும் *உபாயங்கள் ஆறுள.

கவந்தன் இராமருக்குப் புத்திகூறல்.

ஒரு துன்பத்தை அனுபவிப்பவன் ஒத்த துன்பத்தை அனுபவிக்கும் மற்றொருவனைத் தனக்குத் துணையாகக் கொள்ளவேண்டும். ஓ இராம, உமக்கு மனைவியை யிழந்ததாகிய பெருந் துன்பம் நேரிட்டிருக்கிறது. ஆதலால் அப்படி மனைவியை யிழந்தவன் ஒருவனோடு நீர் நட்புச் செய்துகொள்ளல் தக்கது. செய்யாவிடின் உம்முடைய காரியம் சித்தி யாவதற்கு வேறு வழி நான் காணேன். ஓ இராகவ, நான் சொல்லுவதைக் கேளும். பம்பாசரசின் கரையிலுள்ள மலைகளுட் சிறந்த ரிசியமூக பர்வதத்தில் கோபங்கொண்ட இந்திரன் குமாரனான தன் தமையன் வாலியால் துரத்தப்பட்டு, வீரமும் அடக்கமுமுள்ள சுக்கிரீவன் என்னும் வானரத்தலைவன், நான்கு வானரர்களோடு, வசிக்கின்றான். மிக்க பலமும், கீர்த்தியும், சத்தியமும், தைரியமும், புத்தியும், சாமர்த்தியமும், பொறுமையும், பெருமையும், அழகும் வாய்ந்த அந்த வானரத் தலைவன், இராச்சியத்தின் பொருட்டுத் தன் தமையனால் ஊரைவிட்டுத் துரத்தப்பட்டான். ஓ வீர, அவன் உம்மோடு நட்பாகிச் சீதையைத் தேடுவதற்கு

சுக்கிரீவன் வரலாறு.

* (1) சந்தி=நட்பாக்கல். (2) விக்கிரகம்=பகையாக்கல். (3) யானம்=பகைவன்மேல் படையெடுத்துச் செல்லுதல். (4) ஆசனம்=காலம் வரும் வரையில் காத்திருத்தல். (5) துவைதீபாவம்=பிரித்தல். (6) சமாசிரயம்=கூட்டல்.

உதவி செய்வான். நீர் துக்கத்திலாழவேண்டாம். இக்ஷ்வாகு குலோத்தம, இவ்வுலகத்தில் விதியை வெல்ல ஒருவராலும் முடியாது. வீர, நீர் இப்போதே இங்கேயிருந்து புறப்பட்டு விரைந்து சென்று மகாபலவானாகிய சுக்கிரீவனை அடைந்து ஒருவருக்கொருவர் துரோகம் செய்யாமலிருக்கவேண்டி அக்கினிசாக்ஷியாக அவனோடு நட்புச் செய்துகொள்ளும். அவ்வானரவரசன் சுக்கிரீவன் மிக்க நன்றியுள்ளவன்; வேண்டு முருவம் எடுத்துக்கொள்ளும் வன்மையுள்ளவன்; உதவி தேடுபவன்; அதிக பலமுடையவன்; ஆகையால் அவனை இகழற்க. அவன் விரும்பிய காரியத்தை நீங்களிருவர்களும் செய்து முடிக்க வல்லீர்கள். அவன் உங்களால் உபகாரத்தை அடைந்திடினும் அடையாவிடினும் உங்களுடைய காரியத்தைச் செய்வான். அவன் ரிக்ஷரஜசென்கிற வானரனுடைய மனைவியினிடத்தில் சூரியனுக்குப் பிறந்தவன். அவன் வாலியால் பகைக்கப்பட்டு அவனிடத்துக் கொண்ட இடையீடிலாத பயத்தினால் பம்பாசரசின் கரையில் திரிந்துகொண்டிருக்கிறான். நீங்கள் அக்கினிக்கு முன்பாக உங்களுடைய ஆயுதங்களை வைத்து ரிசியமூக பர்வதத்தி லிருக்கும் அவ்வானரத் தலைவனுடன் நட்புச் செய்துகொள்ளுங்கள். அவன் நரமாமிச பக்ஷணிகளாகிய அரக்கர்களுடைய இருப்பிடங்களை எல்லாம் அறிந்தவன். ஓ பகைவரேறாகிய இராகவ, சூரியனுடைய கிரணங்கள் பிரகாசிக்கின்ற இடங்களுள் அவன் அறியாததொன்றுமில்லை. அவன் தனது குரங்குகளுடன் ஆறுகள், மலைகள், கோட்டைகள், குகைகள் எல்லாவற்றையும் தேடி உமது மனைவியைக் கண்டுபிடிப்பான். அவன் உம்மைப் பிரிந்த துக்கத்தால் வருந்தும் சீதையைத் தேட எத்திசைகளுக்கும் பெரிய உருவமுடைய வானரர்களை அனுப்புவான்; இராவணனுடைய இருப்பிடத்திலும் அவளைத் தேடுவான். மேருமலையின் உச்சியிலிருப்பினும் பாதாளத்திலிருப்பினும் அரக்

கர்களை எல்லாம் அவ்வானரத்தலைவன் கொன்று குற்ற மற்ற உமது மனைவியை உமக்கு மீட்டுக்கொடுப்பான்" என்றனன்.

---

## எழுபத்துமூன்றுஞ்சருக்கம்.

கவந்தன் ரிசியமூக பர்வதத்திற்கு வழி கூறுதல்.

---

சீதையை அடைதற்கேற்ற வழியை இராமருக்கு நன்றாக எடுத்துக்கூறியபின் புத்தியுள்ள கவந்தன் மறுபடியும் அவரை நோக்கிப் பொருள்பொதிந்த சொற்களால் "இதோ மேற்குத்திக்கை அலங்காரம் செய்துகொண்டு நாவல், வேங்கை, பலா, இறலி, ஆல், துப்பை, அரசு, கோங்கு, மா, நாகம், மஞ்சாடி, தமாலம், அசோகம், கடப்பு, அலரி, அக்கினிமுகம், பாரிபத்திரம் முதலிய மரங்கள் நிற்கின்றனவே, இதுதான் ரிசியமூக பர்வதத்திற்குப் போகும் வழி; அம்மரங்களிலேறியும், அவைகளை வளைத்தும், அவைகளின் அமுதனைய கனிகளைப் பறித்தருந்தி நீர் அம்மலைக்குப் போகலாம். இந்தக் காட்டைக் கடந்து சென்றால் தேவேந்திரனுடைய நந்தனவனம் போன்றதும் உத்தரகுருவை ஒத்ததும் குபேரனுடைய தோட்டமாகிய சைத்திரரதத்தைப்போல வருஷம் பன்னிரண்டு மாதமும் பழங்களையும் தேனையும் கொடுப்பதும் எல்லாக் காலத்திலும் எல்லாப்பருவங்களையுமுடையதும் பூத்த மரங்கள் நிறைந்துள்ளதுமான ஒரு காட்டை நீரடைவீர். அந்தக் காட்டில் மேகக்கூட்டம்போலவும், மலைகள்போலவும், பெரிய கிளைகளையுடைய அனேக மரங்கள் பழத்தின் பாரத்தால் வளைந்து அதிசிறப்பாக நிற்கும். அம்

ரிசியமூக பர்வதத்திற்குச் செல்லும் வழியில் உள்ள மரங்கள்.

மரங்களில் ஏறியும் கிளைகளை வளைத்தும் அமுதத்துக் கொப்பான பழங்களை லக்ஷ்மணர் பறித்துக்கொடுப்பார். வீரர்காள், காடுகளையும் மலைகளையும் சிறு குன்றுகளையும் ஒவ்வொன்ருகக் கடந்து சென்ருல் நீங்கள் பூரற்கற்களும் பாசியு மில்லாததும், அதனுல் ஜனங்கள் விழுந்து ஆழ்ந்துபோகாததும், சமமான நீர்த்துறைகளையுடையதும், மணல்பாய்ந்ததும், செந்தாமரையும் வெண்டாமரையும் மலரப்பெற்றதுமாகிய பம்பை என்னும் பெரிய ஏரிகரையைச் சேருவீர்கள். அங்கே அன்னங்களும், தவளைகளும், கொக்குக்களும், உள்ளான்களும் காதிற் கினிய மனோகரமான ஓசைகளைச் செய்து விளையாடித்திரியும். அவைகள் அவ்விடத்தில் ஒருபோதும் கொலையுண்ணப்பட்டு வருத்தமடையாமையால் மனுஷர்களைக் கண்டு அச்சமடையா. ஓ இராகவ, இந்த வெண்ணெய்க் கட்டிபோன்ற பறவைகளும், ரோகிதம், சக்கரதுண்டம், நளம் என்னும் மீன்களும் உமக்கு உணவிற்காகும். இவைகளையன்றிச் செதிள், முள் முதலியவைகளில்லாத கொழுத்த பல மீன்களையும் உமது அன்புள்ள தம்பியாகிய லக்ஷ்மணர் தமது பாணங்களால் கொன்று நெருப்பிற் சுட்டு உமக்குக் கொடுப்பார். அவைகளை நீரருந்திய பின் உமக்குப் பானம்பண்ணுவதற்காக லக்ஷ்மணர் ஒரு தாமரையிலையில் மலர்களோடு பயின்றமையால் தாமரை மணம் வீசுவதும் இனிமையானதும் குளிர்ச்சியானதும் ஆரோக்கியகர மானதும் அழுக்கில்லாததும் வெள்ளியும் பளிங்கும்போல நிர்மலமானதுமான நீரைக் கொண்டுவந்து கொடுப்பார். நீர் அந்திக்காலத்தில் அவ்வேரிகரையில் உலாவும்போது லக்ஷ்மணர் கொழுத்த குரங்குகள் மலைக்குகையில் படுத்திருப்பதையும் காட்டில் ஓடித்திரிவதையும் உமக்குக் காட்டுவர். ஓ புருஷோத்தம, நீரும்

பம்பாசரசில் வாழும் பறவைகள்.

மீன்கள்.

விலங்குகள்.

அந்தக் கொழுத்த குரங்குகள் தண்ணீர் குடித்துவிட்டு ஆற்றங்கரையில் தண்ணீர் குடிக்கவரும் எருதுகள்போலக் கத்துவதைக் காண்பீர். சாயங்காலத்தில் நீர் அவ்விடத்தில் உலாவிக்கொண்டு பம்பையின் அழகான ஜலத்தையும் பூத்தமரங்களையும் பார்த்துத் துக்கத்தைப் போக்கலாம். அன்றியும், ஓ இராகவ, அங்கேயுள்ள பூத்துவிளங்கும் திலகமும், நற்றமாலமும், நன்றாக மலர்ந்த தாமரை குவளை முதலியவைகளும் உமது துயரத்தைப் போக்கும். அங்குள்ள புஷ்பங்களைப் பறித்துச் சூடிக்கொள்ளுவதற்கு அவ்விடத்தில் ஒரு மனுஷருமில்லை. அன்றியும் ஓ இராகவ, அவ்விடத்தில் மதங்கமா முனிவருடைய சிஷ்யர்கள் புலன்களை யடக்கித் தவம் செய்தமையால் அந்தப் புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட மாலைகள் ஒருநாளும் வாடுவதில்லை. ஒரு சமயத்தில் அவர்கள் தங்கள் குருவாகிய மதங்கமுனிவருக்காகப் பறித்தெடுத்துவந்த பழங்களின் பாரத்தினால் அவர்கள் தேகத்திலிருந்து சிந்திய வேர்வைத்துளிகள் அவருடைய தவத்தின் மகிமையால் புஷ்பங்களாயின. இவ்வாறு வேர்வைத் துளியினின்று தோன்றியபடியாற்றான் அப்புஷ்பங்கள் வாடிப்போகிறதில்லை. ஓ காகுத்த, அவர்களுக்குத் தொண்டு செய்துகொண்டிருந்த சவரி என்னும் ஒரு தவமூதாட்டி இப்போதும் அங்கே வசித்துக்கொண்டிருக்கிறாள். ஓ இராம, எப்போதும் தருமமே செய்யும் அத்தவ மூதாட்டி கடவுளைப்போல எல்லாராலும் வணங்கப்படும் உம்மைத் தரிசனம்செய்தபின் சுவர்க்கம் அடையப்போகிறாள். ஓ காகுத்த, அப்பம்பையின் மேல்கரையில் மதங்கமுனிவருடைய அந்தரங்கமான நிகரற்ற ஆச்சிரமத்தை நீர்காணுவீர். அக்காட்டில் யானைகள் அதிகமாயினும் அத்தபோதனருடைய தெய்வீக

புஷ்பங்கள்.

சவரி வரலாறு.

மதங்க வனம்.

மான ஆற்றலுக் கஞ்சி ஒரு யானையாவது அவ்வாச்சிரமத்தி னெல்லைக்குள் நுழையாது. ஓ இராகவ, அந்தக்காட்டிற்கு மதங்கவனம் என்று பெயர். தேவர்களுடைய நந்தனவனத்துக் கொப்பானதும் அநேக பறவைகள் வசிப்பதுமாகிய அக்காட்டில், ஓ இராம, நீர் சந்தோஷமாகத் திரியலாம். அப்பம்பாசரசிற்கு எதிரே பூத்த மரங்களையுடையதும் ஏறுவதற்கரியதும், சிறு பாம்புகளால் நான்கு பக்கத்தும் காக்கப்படுவதுமாகிய ரிசியமூக பருவத மிருக்கின்றது.

ரிசியமூக பர்வதம்.

அம்மலை வள்ளன்மை மிக வுள்ளது; ஆதிகாலத்தில் பிரமதேவரா லுண்டாக்கப்பட்டது. அம்மலையில் படுத்து உறங்கித் தனக்கு ஒரு புதையல் கிடைத்ததாகக் கனவு காண்பவன் கண் விழித்துக்கொண்டவுடனே அதனை அடைவான். அம்மலையை அடையும் பாதகர்களையும் நல்லொழுக்கமற்றவர்களையும் நித்திரைகொள்ளும்போது ராக்ஷசர்கள் பிடித்துக் கொன்றுவிடுவார்கள். பம்பைக்கரையிலுள்ள மதங்காச்சிரமத்தில் திரியும் யானைக்கன்றுகளின் பயங்கரமான சத்தத்தை நீர் கேட்பீர். அன்றியும், வேகமாகச் செல்லும் மேகம்போன்ற கரிய மதயானைகள் கபோலத்திலிருந்து மதநீர் பாய அங்குமிங்கும் தனித்தும் கூட்டங்கூட்டமாயும் திரிவதை நீர் காண்பீர். காட்டின்கண் வாழும் அந்தப் பெரிய யானைகள் பம்பாசரசுக்கு வந்து அதனுடைய இனிய தூய நறுமணங் கமழுகின்ற நீரை உண்டுவிட்டுப் பெயர்த்தும் அந்தக் காட்டுக்கே திரும்பிச் செல்லும். அங்கே கரடிகளையும், நரிகளையும், துன்பஞ் செய்யாதனவும் மனிதரைக் கண் டஞ்சாதனவுமாகிய இந்திரநீலம்போன்றமெல்லிய முகத்தையுடைய மான்களையும் கண்டு நீர் நுமது துயரத்தை ஒழிப்பீர். ஓ இராகவ, நான்கு பக்கங்களிலும் கருங்கற் பாறைகளால் சூழப்பட்டு

மதங்க வனத்திலுள்ள யானைகள்.

உட்புக வரியதாய் வாயிலில் பழந்தரு மரங்கள் சூழ்ந்ததும் குளிர்ந்த ஜலமுடையதுமாகிய அழகிய தடஞ்சுனை யொன்று பொருந்திய பெருங் குகையொன்று அந்த மலையிலிருக்கிறது. அக்குகையிலேதான் சுக்கிரீவன் தனது வானரத் துணைவர்களோடு வசிக்கிறான். அவன் சில சமயத்தில் அந்த மலையின் உச்சியிலும் இருப்பான்" என்றான். இவ்வாறு இராமலக்ஷ்மணர்களுக்குச் சொல்லிவிட்டுக் கவந்தன் சூரியன்போலப் பிரகாசித்துக்கொண்டு மாலையணிந்து அழகாக ஆகாசத்தில் விளங்கினான். அப்போது இராமலக்ஷ்மணர்கள் ஆகாயத்தில் நிற்கின்ற பெரிய கவந்தனை நோக்கி "நீர் போய்வாரும்" என்று சொன்னார்கள். அதற்கு மறுமொழியாக, கவந்தன் "நீங்கள் உங்கள் காரியத்தை முடிக்கப்போங்கள்" என்று சொல்லிச் சந்தோஷமடைந்த இராமலக்ஷ்மணர்களிடத்தில் விடை பெற்றுக்கொண்டு போயினான். தனது பழைய அழகைப்பெற்று ஆகாயத்தில் பிரகாசித்துக்கொண்டு நின்ற கவந்தன் இராமருக்கு அவர் செல்ல வேண்டிய வழியைக் காண்பித்து "சுக்கிரீவனுடன் நட்புச் செய்துகொள்ளும்" என்று சொன்னான்.

கவந்தன் சுவர்க்கம் சென்றது.

---

## எழுபத்துநான்காஞ்சருக்கம்.

சவரி சுவர்க்கம் சென்றது.

---

இராஜ குமாரர்களான இராமலக்ஷ்மணர்கள் பம்பாசரசிற்குப் போவதென்று கவந்தன் காட்டின வழியாகச் சென்று மேற்கு நோக்கிப் போனார்கள். சுக்கிரீவனைக் காணவேண்டி வழிக்கொண்டு செல்லும்பொழுது

அவர்கள் மலைகளினுச்சியில் பூக்கள் நிறைந்தனவும் தேன் போன்ற கனிகள் மலிந்தனவுமான அநேக மரங்களைக் கண்டார்கள். அவர்கள் அன்றிரவை ஒரு மலையின் உச்சியில் கழித்து மறுநாள் பம்பையின் மேற்குக்கரை சென்று சேர்ந்து சவரியினுடைய அழகிய ஆச்சிரமத்தைக் கண்ணுற்றார்கள். அவர்கள் நான்குபுறத்தும் மரங்கள் சூழ்ந்து அழகாக விளங்கும் அவ்வாச்சிரமத்துள் நுழைந்து சுற்றிப் பார்த்துத் தவமூதாட்டியாகிய சவரியைக் கண்டார்கள். முற்றத் துறந்த அந்தத் தவமூதாட்டி இராமலக்ஷ்மணர்களைக் கண்டவுடன் எழுந்து கைகூப்பி அவர்களுடைய தாள்களில் வணங்கி அவர்களுக்கு முறைப்படி பாத்திய ஆசமனீயங்களை வழங்கினாள். இராமர் தரும நெறியில் நின்ற அத்தவ மூதாட்டியைநோக்கி "பணிமொழி, தவத்துக்கு இடையூறுகளாக உள்ளவைகளெல்லாவற்றையும் நீ ஒழித்துவிட்டாயா! நினது தவம் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டு வருகின்றதா? நீ கோபத்தை நீக்கி உணவைச் சுருக்கிக்கொண்டாயா? செய்ய வேண்டிய நோன்புகளனைத்துஞ் செய்தாயா? மனோசுகம் அடைந்தாயா? நீ நின் ஆசாரியருக்குச் செய்த தொண்டு பயனடைந்ததா?" என்று வினவினார். இராமர் அவ்வாறு கேட்டபோது சித்தர்களால் நன்குமதிக்கப்பட்ட முற்றுப்பெற்ற தவத்தையுடைய சவரி மூதாட்டி இராமரைக் கிட்டி "ஓ புருஷோத்தம, தேவாதிதேவராகிய உம்மைப் பூஜித்ததால் நான் சுவர்க்கம் புகுகின்றேன். உம்முடைய தரிசனம் கிடைக்கப்பெற்றமையால் என் தவம் பயனடைந்தது; என் பிறவி வாழ்வுற்றது; நான் ஆசிரியர்களுக்குச் செய்த தொண்டு பயனடைந்தது; என் தவமும் முற்றுப்பெற்றது. ஓ பெரியோய், பகைவரேறே, மனுடர்க் கருள்செய்பவனே, உம்முடைய அருணோக்கத்தினால் யான் தூய்மை யடைந்து அழிவில்

இராமலக்ஷ்மணர் சவரியைக் காணல்.

லாத புத்தேளுலகம் புகுவேன். நான் தொண்டு புரிந்து வந்த தபோதனர்கள் நீர் சித்திரகூடம் வந்து சேர்ந்த போது ஒப்பற்ற ஒளியினையுடைய தேவ விமானங்களி லிவர்ந்து விண்ணுலகம் புக்கனர். தருமத்தை யறிந்த அப்பெரியோர்கள் அப்போது என்னைப் பார்த்து "இராமர் உன்னுடைய ஆச்சிரமத்துக்கு வருவார். அவரையும் லக்ஷ்மணரையும் மிகுந்த பத்தியோடு உபசாரஞ் செய். அவருடைய தரிசனத்தினால் நீ அழியாத சுவர்க்கலோகம் புகுவாய்" என்றார்கள். ஓ புருஷோத்தம, இவ்வாறு அந்தப் பெரிய தபோதனர்கள் எனக்குச் சொன்னார்கள். நான் தங்களுக்காகப் பம்பைக் கரையி லுண்டாகிய பல கனிகளைச் சேர்த்துவைத்திருக்கிறேன்" என்று இவ்வாறு சொன்னாள். தருமாத்துமா வாகிய இராமர் முக்காலங் களையு மறிந்த சவரியைப்பார்த்து "உன்னுடைய தவத்தி னாற்றலையும் உன்னுடைய ஆசிரியர்களது தவத்தினாற் றலையும் தனு சொல்ல நான் கேட்டிருக்கிறேன். உனக்கு விருப்ப மதுவாயின் அதை நான் இப்பொழுது என் கண் களால் பார்க்க விரும்புகிறேன்" என்றனர். இவ்வாறு இராமர் கூறக் கேட்ட சவரி அந்தப் பெருங் காட்டை அவர்களுக்குக் காட்டலுற்று "ஓ இராகவ, மிருகங்களும் பறவைகளும் நிரம்பி அடர்ந்த மேகம்போல் விளங்குகிற இந்தக் காட்டைப் பாரும். இதற்கு மதங்க வனம் என்று பெயர். இக்காட்டில்தான்

சவரி மதங்க வனத்தை இராமருக்குக் காட்டல்.

சுத்தாத்துமாக்களாகிய எனது குரவர்கள் தங்கள் தேகத்தை மந்திரங்களினால் மந்திரமாகச் சம்ஸ்காரம் பண்ணி ஓமாக்கினியில் ஆவுதி செய்தார்கள். இந்த வேதிகையின் மேல்தான் அவர்கள் ஏறி நடுங்குகின்ற கைகளினால் தேவர்களுக்குப் புஷ்பாஞ்சலி செய்வது. ஓ ரகுகுலோத்தம, இதோபாரும், இந்த ஒப்பில்லாத அழகிய வேதிகை அவர்களுடைய தவத்தின் மகிமையால் இன்னும் ஒளி

கான்றுகொண்டு நிற்கின்றது. இதோபாரும், இவ்விடத்தில்தான் ஏழுகடல்களும் விரதங்களினால் தேகம் இளைத்து இயங்கச் சத்தியற்றிருந்த அவர்கள் நினைத்தபோது வந்து தோன்றியது. அவர்கள் நீராடிவிட்டு இந்த மரங்களில் தூக்கின மரவுரிகள் இன்னும் உலரவில்லை. அவர்கள் தேவபூசை செய்த நீலோற்பல மலர்கள்கூட இன்னும் வாடவில்லை. நீங்கள் இந்தக்காடு முழுதையும் கண்டு கேட்கவேண்டியவைக ளெல்லாவற்றையும் கேட்டுவிட்டீர்கள். இனி உமது அனுமதிப்படி இத்தேகத்தை நீக்கிவிட்டு இவ்வாச்சிரமத்துக் குடையோர்களும் சுத்தாத்துமாக்களுமாகிய நான் தொண்டு செய்துவந்த முநிவர்களுடைய சன்னிதிக்குப் போக விரும்புகிறேன்" என்றாள். அந்தத் தவமூதாட்டி சொல்லியவற்றையெல்லாம் இராமர் லக்ஷ்மணரோடு கேட்டு மிக்க சந்தோஷமடைந்து "இது ஆச்சரியம்!" என்றுசொல்லி மிக்க தவத்தினையுடைய சவரியை நோக்கி "மாதே, நீ என்னைப் பூசை செய்துவிட்டாய். இனிநீ உன் விருப்பத்தின்படி சுகமாகச் செல்லலாம்" என்றார். இராமர் அவ்வாறு அநுமதி கொடுக்க ஜடை தரித்து மரவுரியும் மான்தோலும் உடுத்து நின்ற சவரி தீயில் குதித்து அக்கினிப்பிழம்புபோல ஆகாயத்தில் எழுந்தாள். அவள் திவ்விய ஆபரணங்களணிந்து திவ்விய மலர்மாலை புனைந்து சந்தனம்பூசி திவ்வியவஸ்திரந் தரித்து மிக அழகாக விளங்கி மின்னற்கொடிபோல அவ்விடத்தை விளக்கஞ்செய்தாள். சவரி தனது தவத்தின் மகிமையால் புண்ணியாத்துமாக்களாகிய தனது ஆசிரியர்கள் வசித்த புத்தேளுலகம் புகுந்தாள்.

---

## எழுபத்தைந்தாஞ்சருக்கம்.

இராமர் பம்பையை அடைந்தது.

---

சவரி தனது தவத்தின் மகிமையால் துறக்கமடைந்த பின் இராமர் தமது தம்பி லக்ஷ்மணரோடு அந்தப் பெரிய முனிவர்களின் தபோமகிமையைப்பற்றி ஆலோசித்தார். அப்பெரியோர்களுடைய பெருமையைப்பற்றித் தருமாத்துமாவாகிய இராமர் தம்மனத்துள் சிந்தித்துத் தம்மாட்டன்புள்ளவரும் தமது நன்மைக்கே பாடுபடுபவருமான லக்ஷ்மணரைப் பார்த்து "தம்பி, மானும் புலியும் ஒன்றுடன் ஒன்று நட்புக்கொண்டு திரிவதும் பலவகைப் பறவைகள் வாழ்வதுமாகிய இந்தப் புண்ணியாத்துமாக்களான முனிவர்களுடைய ஆச்சரியப்படத்தக்க ஆச்சிரமத்தைக் கண்டோம். இந்த ஏழுகடலின் புண்ணிய தீர்த்தத்தில் நாம் ஸ்நாநம்பண்ணினேம். நமது பிதிருக்களுக்குத் தர்ப்பணமும் செய்தோம். ஆகையால், நமது கஷ்டங்கள் நீங்கி நமக்கு நல்வாழ்வு வந்துவிட்டது. ஓ லக்ஷ்மண, என் மனம் இப்பொழுது சந்தோஷம் நிறைந்துளது. புருஷோத்தம, நமக்கு நன்மை விரைவி லுண்டாகுமென்று எனக்குத் தோன்றுகின்றது. ஆகையால், வா, அழகிய பம்பாசரசிற்குப் போவோம். அதோ சமீபமாகவே ரிசியமூகபருவதம் தோன்றுகின்றது. அவ்விடத்தில்தான் சூரிய குமாரனுன் சுக்கிரீவன் வாலிக்குப் பயந்து நான்கு வானரர்களுடன் வசித்துக்கொண்டிருக்கிறுன். சீதையைத் தேடுவதாகிய என் கருமம் அவனுலாகவேண்டியதா யிருக்கிறபடியால் வானரோத்தமனுகிய சுக்கிரீவனைச் சீக்கிரத்தில் காண நான் விரும்புகிறேன்" என்றூர். இவ்வாறு சொன்ன இராம

இராமர் சுக்கிரீவனைக் காண விரும்பல்.

ரைப்பார்த்து லக்ஷ்மணர் "நாம் சீக்கிரம் போவோம். என் மனமு மவ்வாறே விரைகின்றது" என்றார். பின்னர், புருஷநாயகராகிய வலிய இராமர் மதங்காச்சிரமத்தை நீங்கித் தமது தம்பியுடன் பம்பையின் கரையைச் சென்று சேர்ந்தார்.

இராமர் பம்பைக்கரை சேர்தல்.

அநேக மரங்களையும், நீர் நிலைகளையும், நான்குபக்கத்தும் பெரிய மரங்களடர்ந்ததும், புஷ்பங்கள் பொலிந்ததும், மயில் குயில் முதலிய பறவைகளொலிப்பதும், மூங்கில்கள் சடசடப்பதுமாகிய பெரிய வனங்களையுங் கடந்து துக்கப்பட்டுக்கொண்டே இராமர் பம்பைக் கரை சேர்ந்தார். குளிர்ந்த இனிய சுத்தமான நீருள்ள பம்பையைத் தூரத்திலேயே நின்று இராமர் கண்டு அங்குள்ள மதங்க சரசில் ஸ்நானம்பண்ணி ஏரிகரைக்கு மெதுவாக நடந்து சென்றார். அது நான்குபுறத்தும் திலகம், அசோகம், புன்னாகம், வகுளம் முதலிய மரங்கள் சூழ்ந்து, அழகிய சோலைகளையுடையதா யிருந்தது.

பம்பையின் தோற்றம்.

அதன் நீர் பளிங்கு போல் நிர்மலமாயும் கரை அழகாக விளைந்தும் மணல் பரந்துமிருந்தது. அது மீன்களும் ஆமைகளும் செறிந்து, கரையில் மரங்களடர்ந்து, தோழிகள்போல் கொடிகளால் சூழப்பட்டு, கந்தருவர், கின்னரர், நாகர், யக்ஷர், ராக்ஷசர் வந்து நீராடுவதாயிருந்தது. அது பல்வகை மரங்களும் கொடிகளும் சூழ்ந்து குளிர்ந்த நீரையுடையதாய் மிக வழகாக விளங்கிற்று. அது சிலவிடம் அரக்காம்பல் செறிந்து சிவப்பாயும், சிலவிடம் குமுதமலர்சேர்ந்து வெண்மையாயும், சிலவிடம் நீலோற்பலம் படர்ந்து நீலமாயும் அழகிய சித்திராசனம்போன்றிருந்தது. அது வெண்டாமரைகளும் செந்தாமரைகளும் செறிந்து, பூத்துவிளங்காநின்ற மாஞ்சோலை சூழ்ந்து, மயில்க ளொலிப்பதாய் விளங்கியது. திலகம், எலுமிச்சை, அத்தி, வெட்பாலை, கரவீரம், புன்னாகம், மல்லிகை, முல்லை, நொச்சி, அசோகம், ஏழி

லேம்பாலே, தாழை முதலிய மரங்களால் அலங்கரிக்கப் பட்டுக் கோலஞ்செய்யப்பட்ட பம்பையைத் தசரதகுமாரரான இராமர் பார்த்துப் புலம்பி லக்ஷ்மணரோடு "கவந் தன் சொன்னபடி இதன் கரையில் பல தாதுக்களையுடையதும் பல்வகை வர்ணங்களையுடைய பூமரங்கள் சூழ்ந் ததுமாகிய ரிசியமூக பருவதம் அதோநிற்கிறது. மகாத்து மாவான ரிக்ஷராஜசின் குமாரனாகிய சுக்கிரீவனென்னும் புகழ்பெற்ற வீரரத்தலைவன் அங்கேதான் வசிக்கின்றான். புருஷோத்தம, நீ அவனிடம் போய்வா" என்று சொன்னார். அவர் மறுபடியும் மெய் வீரனாகிய லக்ஷ்மணரைநோக்கி, இராச்சியத்தை யிழந்தும் சீதையை யிழந்தும் பரிதபிக்கும் நான் என் உயிராகிய சீதையின்றி எவ்வாறு உயிருடன் இருப்பேன்" என்றார். இவ்வாறு லக்ஷ்மணரிடம் சொல்லிவிட்டு ரகுகுலோத்தமர் சோகத்தாலும் துக்கத்தாலும் வருந்திக் காமத்தால் பீடிக்கப்பட்டுக் காடுமலைகளைப் பார்த்துக்கொண்டே மெதுவாகச் சென்று நான்குபுறத்தும் அழகிய சோலைகள் சூழ்ந்து பல்வகைப் பறவைக்கூட்டங்கள் நிறைந்துள்ள பம்பையை யடைந்தார்.

இராமர் லக்ஷ்மணரைச் சுக்கிரீவனிடம் போ எனல்.



ஆரணியகாண்டம்

முற்றிற்று.

